# GOVT. COLLEGE OF
# INDIAN MEDICINE,
## PALAYAMKOTTAI.



# X Magazine
## 1980

# அரசினர் இந்திய முறை மருத்துவக் கல்லூரி, பாளையங்கோட்டை.

# ஆண்டு மலர்

## 1980



பத்தாவது வெளியீடு

# Editorial Board







# தமிழ்த்தாய் வணக்கம்




வாழ்க்கை நெறிமுறையை வகையாகச் சொல்லுமெங்கள்
வள்ளுவத்தை உலகறிய வைப்பதற்கோமுடியில் வைத்தாய்
வேட்கை மிகக்கொண்டு விரும்பிக் கற்பதற்கு
வேண்டிய காதைகளை வித விதமாய் உடலில் வைத்தாய்

சீர்ப்பாதம் தன்னிலெழும் சிலம்பின் ஒலியினை
திக்கெல்லாம் பரவுதற்கோ சிலம்பினைப்பாதம் வைத்தாய்
நேர்ப்பாதை என்றழைக்கும் நிகரில்லாத் தத்துவத்தின்
நெறிமுறைகள் தழைத்தோங்க நின்பாதம் சரணம்மா!



# Editorial Board

# பத்தாவது ஆண்டு மலர் வெளியீட்டு விழா நிகழ்ச்சிகள்.



தலைவாயில்



கல்லூரி முகப்பு



மாண்புமிகு கைத்தறித்துறை அமைச்சர் மலரை வெளியிட,
சி. எம் எஸ். அச்சக மேலாளர் முதல் இதழைப் பெறுகின்றார்.



தலைமை உரை நிகழ்த்தும்
இந்தியமுறை மருத்துவ இயக்குனர்.



அறிக்கை படைக்கும்
கல்லூரி முதல்வர்



வாழ்த்துரை வழங்கும் நாங்குநேரி
சட்டமன்ற உறுப்பினர்.



மலர் வெளியீட்டுக்குழு ஆசிரியச் சார்பாளரும்,
மலர்க்குழுச் செயலரும்
இயக்குனரிடம் மலர் வழங்குகின்றனர்.



அமைச்சரின் சிறப்புரை.



நன்றி நவிலும் மலர்க்குழுச் செயலர்.



இசை விருந்து வழங்கும்
'சில்வர் டோன்ஸ்' குழுவினர்.

# மலரில் கமழும் மணம்

**English Section**




# நுழைவாயில்....!



தகைமை சான்றீர்!

வணக்கம். உடலில் உணர்வாய், உணர்வின் உயிராய், உயிரின் உறைவிடமாய் நமக்கெல்லாம் இலங்கிடும் இன்பத் தமிழன்னையின் இனிய தமிழ் மருத்துவக் கல்லூரியாம் பாளை. அரசினர் இந்தியமுறை மருத்துவக் கல்லூரியிலிருந்து முகில் கிழித்து வெளிக் கிளம்பும் முழுமதி போல், முத்தான முகப்போடு, தமிழ் சத்தான கருத்தோடு, செந்நெல் கொத்தாகப் பலன் தாங்கி மணம் கமழும் பத்தாவது மலர்க்கொத்தொன்று உங்கள் கரங்களிலே முகையவிழ்ந்து நகை செய்கின்றது.

தமிழகத்தின் தொன்மை, மொழி மென்மை, கருத்துவன்மை, நாகரிகச் செம்மை, பண்பாட்டுத்தன்மை இன்னபிற அருமை பெருமைகள் உலகெங்கும் பரந்து, விரிந்து அனைத்து தரப்பினராலும் அறிந்து, புரிந்து. தெளிந்து போற்றப்பெற்ற ஒன்றாகும். தமிழகத்தின் சிறப்புக்களில் முதன்மை இடம் ..... ஏன்! தலைமை இடமே வகிக்கத்தக்க அளவிற்கு சித்த மருத்துவமுறை சிறப்புற்று விளங்கியதை பல இனிய இலக்கியங்களின் வாயிலாகவும், அரிய ஓலைச்சுவடிகளின் மூல மாகவும் நாம் அறிகின்ற பொழுது, அக் கால அறிவியல் உலகில் தமிழகத்தின் புகழ் எவ்வாறு கொடிகட்டிப் பறந்தது என்பதனை யும், இன்றுங்கூட முழுவதுமாக அறிந்து விளக்கமுடியாத பல மருத்துவ நுட்பங்களை உலகுக்கு வழங்கி தமிழகத்தை உலக அரங்கில் பீடுநடைபோடச்செய்த சித்தர்களையும் நினைக் கும்போது உள்ளம் இன்பத்தால் இறும்பூ தெய்துகின்றது. இடையில் அத்தகைய சிறப்பு மிக்க, ஒப்புவமையற்ற மருத்துவத்தின் மகத்துவம் நம்மவரின் ஆர்வக் குறைவு காரண மாக மறைக்கப்பட்டு, மருத்துவத்தின் மாண் பினை காலத்திற்கேற்ற மாறுதலோடு பயன் நல்கும் வகையில் வெளிக்கொணரும் திறமை யின்மையால் அதன் புகழ் இருட்டடிப்புச் செய்யப்பட்டு, ''சித்த மருத்துவம் தழைக் குமா'' என்ற வினக்கூட அதன்பால் அக்கரை கொண்ட நல்லுள்ளங்களில் எழுகின்றநிலை ஏற்பட்டுவிட்டது. மெல்ல மெல்ல ஆனல் உறுதியாக புதிய சிந்தனையோடு சித்தமருத் துவத்திலே பொதிந்துகிடக்கின்ற சிறப்புக் களை வெளிப்படுத்தும் ஆற்றல் மிக்க அறிஞர் பெருமக்கள் பலர் தோன்றிவருகின்றனர். அத் தகைய சிறப்புக்குரியோரை ஊக்குவிக்கின்ற இடமாகவும், அத்தகையோரை உருவாக்கு கின்ற பாசறையாகவும் பாளை. இந்திய முறை மருத்துவக் கல்லூரி விளங்குகின்றது என்றால் அது மிகையன்று. சித்த மருத்துவத்திற்கு என்று உள்ள ஒரு தனிப் பெரும் நிறுவனமாக தமிழகத்தில் ஏன்! இந்தியத் துணைக்கண்டத்தில் ஏன்! உலக அரங்கிலேயே மின்னி மிளிருகின்ற பெருமை இக்கல்லூரிக்கு உண்டு.

அத்தகைய சிறப்புக்குரிய இக்கல்லூரி யின் பத்தாவது வெளியீடாகிய இம்மலரில் தமிழ் மருத்துவத்தினுடைய சிறப்பு, அது எந்த வகையில் மற்ற மருத்துவ முறைகளி னின்று தனித்தன்மை வாய்ந்ததாக விளங்கு கின்றது என்பதை கட்டுரைகள் வாயிலாக படம்பிடித்து காட்டியுள்ளனர் தமிழ்த்தாயின் மூத்த தவப்புதல்வர்கள் சிலர். குன்றாத உணர்வோடு செயல்பட்டால் சித்த மருத்து வம் செகம்மெச்ச உச்ச நிலை எய்திடும் என்

பதில் கிஞ்சிற்றும் ஐயப்பாடில்லை என்ற பேருண்மையை உலகிற்கு உணர்த்துக்கிற வகையில் சில மருத்துவ ஆராய்ச்சிபடைப்புக் கள் இம்மலரில் இடம்பெற்றுள்ளன. மாணவ மணிகளும் பயன் நல்கும் மருத்துவ படைப்புக் களை வழங்கியதோடு, இலக்கியத்திலும், சிந்தனை ஆற்றலிலும் யாருக்கும் சளைத்தவர் கள் அல்ல என்பதனை பறைசாற்றுகின்ற வகையில் சில படைப்புக்களை வழங்கியுள் ளனர்.

எவ்வளவுதான் பயன் நல்கும் பயணமாக இருந்திட்டாலும் இளைப்பாற நிழல் தரும் குளிர் தரு ஒன்றேனும் தேவை. அதனைக் கருத்தில் கொண்டு மருத்துவம் சார்ந்த படைப்புகளாகவே முழுவதும் இல்லாமல் தமிழிலும், ஆங்கிலத்திலும் உள்ள மருத்து வம் சார்ந்த படைப்புக்களுக்கிடையில் கவிதை, கதைப் பகுதி ஒன்றினை அமைத் துள்ளோம். இடையிடையே அறிஞர் பெரு மக்களின் கருத்துப் பெட்டகங்களையும், துணுக்குகளையும் பதித்து வைத்துள்ளோம்.

குறுகிய காலத்தில், பெருகிய சிந்தனைக் குவியலோடு,கருத்துக்கு விருந்தாகிடும் கவின் மலரொன்று படைத்திட வேண்டுமென்ற தணியா ஆர்வப் பெருக்குடன் செயல்படத் துவங்கினோம். மலர் மணம் கமழ்வதற்குள் ளாக இடையில் ஏற்பட்ட இடையூறுகள், இன்னல்கள், இடுக்கண்கள் இவை அத்தனை யும் புறம்கண்டு உதைபட உதைபட உந்தி எழும்பந்தாக, அரைபட அரைபட மணம் கமழும் சந்தனக் கட்டையாக, தீட்டத்தீட்ட ஒளியுமிழும் வைரமாக விளங்கி இன்று உங்கள் கரங்களிலே இம்மலர் தவழ்கின்றது. எங்கள் முயற்சியில் எந்த அளவிற்கு இலக் கினை எட்டியுள்ளோம் என்பது உங்கள் தீர்ப்பில் உள்ளது.

வாழ்த்துச்செய்தி வழங்கியதன் வாயிலாக இம்மலருக்கு மகுடம் சேர்த்துச் சிறப்பித்த தானைத் தலைவர்களையும், மலருக்கு கட்டுரை வேண்டுமென்றவேண்டுகோளைவைத்தவுடன் அதனை இன்முகத்தோடு ஏற்று பயன் நல்கும் படைப்புக்கள் வழங்கிய கற்றுத்துறை போகிய பல்கேண்மை பெரியோர்கள், எங்கள் மீது திணிக்கப்பட்ட பொறுப்புகளில் பங் கேற்று சுமையினை பகிர்ந்து கொண்டு எங்க ளைச் சோர்விலிருந்து காத்துதவி மலர் மலர பல்லாற்றானும் துணைநின்ற இயக்குனர், கல்லூரி முதல்வர், மலர்க்குழு ஆசிரியர் பிரதி நிதி, பொருளர், இதனைத் தங்கள்பணியாகக் கருதி இரவு பகல் பாராது பணியாற்றி, உயர்ந்த உள்ளத்தோடு மலர் நிறைவாக அமைந்திட முழுமுயற்சிமேற்கொண்ட சி.எம். எஸ். அச்சக நிறுவன மேலாளர் மற்றும் பணி யாளர்கள், தோளோடு தோள் நின்று பணி யாற்றிய என் உயிரினுமினிய இன்பத் தமிழ் நண்பர்கள் மற்றும் மலர்ப்பணி சிறக்க உற் றுழி உதவியும் உறுபொருள் தந்தும் துணை நின்ற அனைவரையும் இந்த நேரத்தில் நன்றி யோடு நினைத்துப் பார்த்து என் இதயத்து அன்பினை காணிக்கையாக்குகின்றேன். முகில் கண்ட மயிலாக, மலர்கண்டு மது உண்ண வண்டாக மாறிவிட்ட உங்களுக்கு இடை யூறாக இல்லாமல் இந்த அளவில் முடிக்கிறேன் இதழினை புரட்டுங்கள், இனபத்தினை நுகருங் கள். வணக்கம்!

இவண்,

**மா. தங்கராசு,**

**மலர் வெளியீட்டுக்குழுச் செயலர்.**



RAJ BHAVAN
MADRAS - 600022
14th March 1980.

# MESSAGE

Long long before western medicine came to India and long before Greek medicine was heard about, India had her own ancient systems of medicine, governed by their own sastras. It is unfortunate that for want of research and development for a long time, Our indigenous systems of medicine fell in to desuetude and neglect. To day, it is with the help of surviving Practioners that we are trying to receive them. The Government of Tamil Nadu is to these projects. I am sure, in course of time, these systems of medicine will be pressed in to service through out the country and make medical aid in expensive to the vast masses of the poor people.

(*Sd*). *PRABHUDAS B. PATWARI.*
Governor of Tamil Nadu.



**Mr. M. G. RAMACHANDRAN,**
Our Honourable Chief Minister.

டாக்டர் இரா. நெடுஞ்செழியன்,
எம். ஏ, டி. லிட்,

நிதிஅமைச்சர்




தலைமைச் செயலகம்,
சென்னை - 600009

நாள்: 7-9-80

# சித்த மருத்துவம் வாழ்க! வளர்க!

பாளையங்கோட்டை அரசினர் இந்திய முறை (சித்த) மருத்துவக்கல்லூரியின் மலர்க் குழுவின் சார்பாக ஆண்டுமலர் ஒன்றினைக்கொண்டுவரும் முயற்சியினை அறிந்து நான் மட்டற்ற மகிழ்ச்சி கொண்டேன்.

தமிழ் மொழியைப் போற்றித் தமிழ் மருத்துவமான சித்த மருத்துவத்தைப் பேணி வளர்க்கப் பேரார்வமும், பெரும் முயற்சியும் கொண்டு விளங்குகின்ற மாணவர்களை நான் பெரிதும் பாராட்டுகிறேன்; போற்றுகிறேன்; வாழ்த்துகிறேன்; வரவேற்கிறேன்.

சித்த மருத்துவம், தமிழ் நாட்டின் இயற்கைச் சூழ்நிலைக்கு ஏற்ப, தட்ப வெப்ப நிலைகளுக்கு இயைய, உண்ணு நீர் உணவுவகைகளுக்கு ஏற்ப, தமிழர் நாகரிகத்தோடு இணைந்து நின்று தொன்று தொட்டு வளர்ந்து வந்துள்ள மருத்துவமாகும். மற்ற எந்த நாட்டு மருத்துவ முறையைக் காட்டிலும் ஏற்ற ஒன்றாக இருக்க முடியும்.

முறைப்படுத்தப்பட்ட சித்த மருந்துகள் ஓரிடத்தில் பெருமளவில் உற்பத்தி செய்யப் பட்டு, பல இடங்களிலும் ஆங்கில மருந்துகளைப் போன்று பரவலாகக் கிடைக்கும்படி செய்ய வேண்டும். சித்த மருத்துவத்தில் அன்பும், நம்பிக்கையும், மதிப்பும் ஏற்பட பொதுமக்களுக்கு அறிவுரை கூறும் வாய்ப்புக்கள் பெருகிட வேண்டும். இந்தக் கடமையை எல்லோரும் ஆற்றிட முன்வர வேண்டும்.

மலரின் முயற்சி வெல்க! மலரின் நோக்கம் நிறைவேறுக!

Dr. (Navalar) V. R. NEDUNCHEZHIYAN,
Our Hon'ble Finance Minister.

(ஒப்பம்) இரா. நெடுஞ்செழியன்.

டாக்டர். எச்.' வி. ஹண்டே,
சுகாதார அமைச்சர்.




புனித ஜார்ஜ் கோட்டை,
சென்னை — 600009,

நாள். 30-8-80.

பாளையங்கோட்டை இந்தியமுறை மருத்துவக் கல்லூரியின் சார்பில் 1980- ஆம் ஆண்டிற்கான மலர் வெளியிடுவது குறித்து மிக்க மகிழ்ச்சி அடைகின்றேன்.

இந்திய மருத்துவ முறை குறிப்பாக சித்த மருத்துவம் வளர்ச்சி அடைய இந்த அரசு பல்வேறு நடவடிக்கைகளை மேற்கொண்டுள்ளது. சித்த மருத்துவத்திலுள்ள மிக உயர்ந்த மருத்துவ முறைகளை பொதுமக்கள் அறிந்து கொள்ள இது போன்ற மலர்கள் பயன்படும்.

ஆண்டு மலர் நல்ல முறையில் அமையவும், முழு அளவில் பயன் பெறவும் வாழ்த்துகிறேன்.

Dr. H. V. HANDE,
Our Hon'ble Health Minister.

(ஒ.ம்.) எச். வி. ஹண்டே

க. அன்பழகன், எம். ஏ., எம். எல். ஏ..
சட்டமன்றஎதிர்க்கட்சித் துணைத்தலைவர்.

தொலைபேசி:
அலுவலகம் 843965
இல்லம் 612940

நாள் 19-7-80

அன்புடையீர்,

வணக்கம். பாளை இந்திய மருத்துவக் கல்லூரியின் சார்பில் மலர் வெளிவரவிருப்பது அறிந்து மகிழ்கிறேன். தமிழ் மொழி நாகரிகத்தின் தொன்மையோடு ஒட்டிப்பிறந்து, இயற்கை மருத்துவம், உணவு மருத்துவம், ஆகியவற்றின் நன்மையையும் கொண்டு, நோய்கள் பலவற்றின் இயல்பும், வகையும் கண்டு அவற்றினைக் களையுமிடத்து வேறு விளைவுகளுக்கு இடமில்லாத சிறப்புடையதாய்த் திகழ்வது சித்த மருத்துவம். அதன் பயனைத் தமிழ் மக்கள் மட்டுமன்றி உலக மக்களும் அடையுமாறு அதன் தனிமாட்சியை உலகறியச் செய்ய வேண்டும். அதற்குரிய அடிப்படை முயற்சிகள் இன்றுங்கூட வடிவுபெற வில்லை. எனினும்- சித்த மருத்துவம் பயிலும் மாணவர்கள் அதன் பெருமையைக் காத்திடத் தங்களையே முழுத் தகுதியுடையவர்களாக ஆக்கிக் கொள்ள ஊக்கமும் முயற்சியும் கொள்ள வேண்டும்.

மொழிக்குல முதல்வி 'தமிழ்' என்பதும்,
நாகரிகத்தின் தொட்டில் 'தென்னகம்' என்பதும்,
அறிவுத் தெளிவின் நுட்பம் 'திருக்குறள்' என்பதும்,

எவ்வளவு ஏற்புடையதோ அவ்வளவு ஏற்புடையது.

மருத்துவ முறையின் மாட்சி 'சித்தம்' என்பது. எனவே உயர்ந்த ஒப்பற்ற பயன் நல்கும் ஒரு மருத்துவம் மறையாது காக்கும் கடமையை நாட்டுக்காக மக்களுக்காக ஆற்றுகிறோம் என்னும் பெருமித உணர்வோடு, பாளை கல்லூரி மாணவர்கள் சிறக்க வாழ்த்துகிறேன்.

அன்புள்ள

(ஒ.ம்.) க. அன்பழகன்

# வாழ்த்துச் செய்தி

திருநெல்வேலி, பாளையங்கோட்டையிலுள்ள சித்தமருத்துவக் கல்லூரியின் ஆண்டுவிழா அண்மையில் நடைபெற விருக்கிறது என்ற செய்தியும், அதன் நினைவாக மலர் ஒன்று வெளிவர விருக் கிறது என்ற செய்தியும் என்னை மகிழ் விக்கின்றன.

விழா இனிது நடைபெற வேண்டுமெனவும், மலர் நல்லறிஞர் களின் கட்டுரைகளைத் தாங்கி வெளிவந்து நாட்டிற்கும் மொழிக் கும், மக்களுக்கும், சித்த மருத்துவத்திற்கும் தொண்டு செய்து சிறப்படைய வேண்டுமெனவும் முழுமனதுடன் வாழ்த்துகிறேன்.

திருச்சிராப்பள்ளி-8
14 — 3 — 80

தங்களன்பிற்குறிய

(ஒ.ம்:) கி. ஆ. பெ. விசுவநாதம்

K. J. M. SHETTY, I. A. S.
Commissioner & Secretary
to Government,
Health & Family Welfare Dept.,




Fort. St. George, Madras 600009,
6th September, 1980.

# MESSAGE

*In Indian systems of Medicine have been practised in the country from the immemorial. These systems can prove more useful if research is actively encouraged and pursued. The college of Indian Systems of Medicine which is functioning efficiently has a great future. The doctors who came out of this are well qualified, well trained and well instructed to hold the position of trust as responsibility awaiting them. I hope they will practice with enthusiasm their own branch of medicines and render useful service to the community.*

*I wish the Annual Publication, every success.*

*(Sd)* **K. J. M. SHETTY.**

To

The Student Editor & Secretary,
Magazine Committee,
Government College of Indian Systems of Medicine,
Palayamcottai.

# UNIVERSITY OF MADRAS

Phone : 843074

Prof. G. R. DAMODARAN,
B. Sc. Engg., C, Engg., F. I. E. E. (Lond.),
F. I. Nuc. E. (Lond.), F. I. E. (Ind.), D. Sc.
Vice - Chancellor.

UNIVERSITY BUILDING,
CHEPAUK, MADRAS - 600005.

23 Jun 1980

# MESSAGE

I am glad to learn that the Government College of Indian Systems of medicine, Palayamcottai, is bringing out its Annual magazine for 1980.

Started in the year 1964, the college has rendered Commendable Service to the Cause of indiganous systems of medicine and the study and research in these disciplines have greatly benefited the masses in this Part of the country.

I avail of this Opportunity to send my warm greeting and good wishes to the Principal, teachers and students of the Government college of Indian systems of medicine, Palayamcottai, and wish them further Progress and prosperity in the years ahead.

(*Sd*). *G. R. DAMODARAN*:

To
Mr. M. Thangaraju,
Student Editor & Secretary,
Mgazine Commitee,
Govt. College of Indian Systems of Medicine,
Palayamcottai,
Tirunelveli - 627002.



Dr. V. SUBRAMANIAN M. D. (Siddha)

Our Principal.

# Principal's Report - 1979

It is pleasure for me to present this report of our Govt. College of Indian Systems of Medicine, Palayamkottai and the progress it has made up to this year 1979.

The Government of Tamil Nadu during its third five year plan decided to start a College of Indian Systems of Medicine at Courtallam, Tirunelveli District. The Govt. also desired that this college should function tentatively at Palayamkottai till suitable buildings are constructed at Courtalam and accordingly the college started commencing instructions from 30—11—64 in some of the tiled roof sheds of the old Headquarters Hospital, Palayamkottai.

This college is imparting instructions for the B. I. M. (Bachelor of Indian Medicine) Degree course as per the regulations approved by the University of Madras and Madurai However the College was brought under the affiliation of fhe Madurai University incepted from 1—3—66. As per the original. programme it was decided to run the college with 65 students i. e. 30 in Siddha, 20 in Ayurveda and 15 in Unani. Since adequate number of students did not come forward for admission to the Ayurveda and Unani branches the seats allotted to these branches were re-alloted to the Siddha Branch itself and thereby the total capacity of admission to the Siddha branch was raised to 65 for the year 1964-65 subsequent to the year 1965 only 30 students were enrolled every year. Now the total number of studeents admitted to the B. I. M. Course has been raised from 30 to 40. Among them there are stipendary candidates getting stipend of Rs. 75 - p. m. In addditition four seats have been allotted for Karala candidate and the Govt. of Kerala in turn allotted 4 seats to BAM Degree to candidates belonging to Tamil Nadu state from the year 1978-79.

The first B. I. M. examination was conducted by the University of Madras in October '65. The successful B. I. M. graduates are being accommodated in this college, District Headquarters Hospitals, Taluk Headquarters Hospitals, Panchayat Union Dispensaries and in Municipal Dispensaries as Assistant Lecturers and Assistant Medical Officers with Gazetted status. The Pay scale of Assistant Lecturers, Assistant Medical Officers was Rs. 400-15-475-20-575 25-650 and subsquently revised as Rs. 600-30-750-35-890-40-1050 with effect from 1—4—78 in G. O. Ms. No. 1050 dt. 5. 10. 1978 by the 3rd Pay Commission.

Since the college is affiliated to the Madurai University the administrative set up was also handed over to the Madurai University. by the Madras University. The latest development in the field of education in the collegiate level for the Indian Systems of Medicine in general and Siddha Medicine in particular is the re-designing of the course as B. S. M & S. fromthe academicyear 1977-78. Accordingly theterm of the course is as follows;-

| | |
|---|---|
| 1st B. S. M. & S. | - 1 year |
| 2nd B. S. M. & S. | - 1 year |
| 3rd B. S. M. & S. | - $1\frac{1}{2}$ years |
| 4th B. S. M. & S. | - $1\frac{1}{2}$ years |

The students of B. S. M. & S. after completing their course should undergo compulsory internship course of training for 6 months for B. S. M. & S. students. After completing their course they are registered in 'A' class special and they are now controlled and guided by the Central Council of Indian Medicine Act 1970 on an All India basis which prescribes aims and objects of the course clearly. With the help of this act the Indian Medicine graduates get the state status and previleges on All India basis.

Another important land mark affiliated to the Indian Systems of Medicine is the formation of a seperate Directorate of Indian Medicine in the year 1970. The first Director of Indian Medicine was Dr. C.S. Uthamarayan, H. P. I. M. and succeeded by Dr. S. A. Subban, L. I. M., H. P. I. M. and Dr. P. M. Venugopal, H.P.I.M. and Dr. P. Gurusironmani, B. A. G. C. I. M. and Dr. (Selvi) A. Neelavathi, L. I. M. and now by Dr. G. Balasubramanian, G. C. I. M. The entire administration including this institution and other branches of Indian Systems of Medicine are brought under the control of this Directorate.

This college is imparting training in Diploma in Pharmacy course also in Siddha system with a duration of two years. Every year 8 students are admitted in the course with a stipend of Rs. 30/- p.m. The students thus trained are appointed as Pharmacists in all the Siddha wing attached to the District Headquarters Hospitals, Taluk Headquarters Hospitals and other Panchayat Union and Municipal Dispensaries.

The students of B. I. M. & B. S. M. & S. Course are given traning in Pharmacy also with a aim to acquaint them in the preparation as weil as in the administration of medicines.

The construction of the present pucca new college block with all amenities at a cost of Rs. 10 lakh was sanctioned in G. O. Ms. No. 2476 H dt. 20—10—72 and it was declared open by the then Honorable Minister for Health on 20—1—1975.

From 1972 onwards the Post-Graduate course M. D. (Siddha) financed by the Central Government was started. Every year 20 students (10 for Gunapadam and 10 for Maruthuvan) are admitted in the course. Duration of the course is three years. So for 30 Post-Graduate students came out successfully and employed in various Siddha Medical Institutions in this state and outside.

The Hospital attached to this college is having 208 beds. The First 100 beded Hospital block with all amenities at a cost of Rs. 8-20 lakhs as per G. O. Ms. No. 2476 H. dt. 20 - 10—72, was also opened along with the new college block by the then Honorable Minister for Health on 20—1—75. Consequent on the increase in average number of in-patients steadily, a new additional 100 beded ward was sanctioned in G. O. Ms. No. 1630 H dt. 17-7-74 at a cost of Rs. 5.95 lakhs and the same is functioning with effect from sep. '77.

Since there is a subject ''Mahalir Maruthuvam' In the syllabus 'for the B. I. M. Course', the need for alloting certain beds exclusively for the treatment of Maternity cases was examined and a Maternity ward with 8 beds was sanctioned and Maternity cases are being admitted in the above wards. A Medical Officer with M. B. B. S., D. G. O. qualification was also sanctioned to be incharge of the ward.

Daily about 650 patients are getting treatment in the O. P. department of this hospital. A new O. P. block was sanctioned

in G. O. Ms. No. 2803 H dt. 28-10-76 and it started functioning from April '78 onwards, with all facilities for the patients to get treatment.

A new Pharmacy block at a cost of Rs.3.80 lakhs was sanctioned in G. O. Ms. No. 2516 H&FP Department dt.20.10.75 with plans for future expansion of the building. The Pharmacy is equipped at present with the following machineries.

1. Micro Pulvarisor
2. Plantary Mixture
3. Pill making and cutting machine
4. Shieve shaker.

The Pharmacy is catering the needs of this Hospital as well as the college, There is a raw drug stores where costly and rare raw materials are stored. Raw drugs worth about Rs. 1,39,500 were purchased during 1979. There is a prepared Medicine stores where the medicines are stored and distributed to various departments.

The construction of building for Green House at a cost of Rs. 99,000 sanctioned in G.O Ms No.2470 H dt.17.9.76. with air condition facilities and glass roofs for cultivating the rare plants for experimental purpose etc. was over and handed over by Public Works Department authorities on 22.4.80.

There is a full fledged Library for the benefit of studente and staff of this college. There are about 3007 reference books available in the Library. There is a sales section also where the reference books written by the various eminent Indian medicine authors are kept for sale. There is a proposal for the opening of a 'Book Bank scheme', in this college.

The Madurai University has established the NSS Scheme in this college and all the students are participating in the scheme. Every year, they adopt one village in the rural area and educate the people in Hygeine, preventive methods and in child Health and Family Welfare under this scheme.

A research unit in Siddha system of Medicine of Central Council research in Siddha and Homeopathy, New Delhi is established at this hospital during this year and the Principal is the Honorary Project Officer of the research unit with the following sanctioned staff.

1. Research Officer. -1
2. Assistant Research Officer -1
3. Research Assistant -1
4. Generel Duty Assistant -1
5. Lab.Attendant -1

The Unit is doing researches on diseases like Pandu (Anaemia)
Kakkai valippu (Epilepsy)
Venkuttam (Leucoderma)
and 10 beds are allotted in the hospital for their research work.

A Survey of Medicinal Plants Unit is also functioning in this college under Central Council for Research in Ayurveda and Siddha Programme.

A new Anatomy block has been sanctioned in G.O.Ms.No. 1097 H &F.W. dt.29.6.78. at a cost of Rs.3.4 lakhs and the work is going on.

There are two hostels one for the Gents and the other for the Ladies with accommodation for 100 and 40 students respectively Gents Hostel is situated at Vannarpet and the ladies hostel is located within the college premises.

In G.O Ms.No.1366 H & F.W. Department 3.8.79 the Govt. have sanctioned the construction of hostel building for Men B.I.M studen-

ts accommodating 204 students a cos to aft Rs.20-90 lakhs. The work Is to be started soon.

In G.O.ms.No.1386 Health and Family Welfare Department dt. 4. 8. 79 the Govt. have sanctioned Rs.6 lakhs for the construction of hostel for accommodating 54 lady B.I.M. students in this college. The work is to be started soon.

In G.O.ms.No.1623 Health and Family Welfare Department dt.12.9.79 the Government have sanctioned the sum of Rs.4 lakhs for the construction of hostel for Internees (both Men & Women) over the first floor of the additional 100 beded ward in the car of this college. The work is to be sta soon.

The Committee for developmen Indian Medicine and Research, Madras vis this institution on 30.& 31.10.79.

In this college 'Tamil 1lakkiya Pera has been started and Thiru K.A.P. Viswa tham has inaugurated the Peravai.

In conclusion I am sure that in the ye ahead the College will make further prog ss in all fields and bring credit and hor to this institution.

---

# EDITORIAL BOARD



Dr.K. Natarajan, B.I.M.
Staff-Editor



Dr. P.A. Mohammad IQBAL M.D (Siddha.)
Staff-Treasurer.



M. Thangaraju
Student's Editor, Secretary



N. Asaithambi, B.A.,
Advt. Committee President



Dr· M. Murugesan B.I.M.,
II M. D., P.G. Rep.



Dr. N. Periyasamy-
Pandiyan B.I.M.,
House Physician Rep.



N. Ramamoorthy B.A.,
Joint Editor.



S. Chandradevi B.Sc.
Lady Rep.



A. Babu
Final B. I. M. Rep.



A. Kumar
Final B. S. M & S. Rep.



P. Ravi
III B. S. M. & S. Rep.



R. S. Ramaswamy ( B. Sc.)
II B. S. M. & S. Rep.



S. Shahul Hamid B. Sc.
I B. S. M. & S. Rep.

ADVERTISEMENT COMMITTEE



N. M. J. Mohammad Jaffar
III B. I. M.



V. Murugesan
Final B. S.M & S.



S. Adhinarayanan
III B. S. M & S.



M. Nedunchezhiyan ,B. Sc.,
II B . S . M & S



R. Mohanram , B. Sc.,
II B . S . M & S .



C. Sekar ,
II B . S . M & S .



D . Vijayalakshimi ,
III B. S. M & S



R. Subbulakshmi
III B. S. M & S



Ramalakshimi
Final B. I. M.

# சித்த மருத்துவமும் தெய்வ வழிபாடும்

மருத்துவர். ஜி. பாலசுப்பிரமணியம், G.C.I.M, இயக்குனர், இந்திய மருத்துவத் துறை

தமிழர்கள் லெமூரியர் காலந்தொட்டே இயற்கையை மிக நன்கு அறிந்திருக்கிறுர்கள். எல்லா உயிர்களுக்கும் மேம்பட்ட உலகப்பொதுவுயிர் ஒன்றுண்டு என்பதை உணர்ந்திருந்தார்கள். இருப்பினும் காலப் போக்கில் இறையுணர்வு பல்வேறு உருவங் கொண்டமையால் பல்வேறு சமயங்கள் தோன்றின. எனினும் ''ஒன்றே குலம் ஒருவனே தேவன்'' என்ற கொள்கை யாவரும் ஒப்புக் கொண்டதாகும்.

தெய்வ வழிபாட்டிற்காக நாம் அன்றுடம் பயன்படுத்துகின்ற பொருள்களை ஆராய்ந்து பார்த்தால் பல நுணுக்கங்கள் தெரியவரும்.

தமிழர் வழிபாட்டு முறையில் தூபம், தீபம், நீர், மலர் ஆகியவையே சிறப்புடையன வாகக்கருதப்படுகின்றன.

**தூபம்:**

நாம் இறைவனை வணங்கும்போது சாம்பிராணியை நெருப்பிலிட்டு புகைத்து அதனை தூபமாக இறைவனுக்குக் காட்டுகின்ருேம். இந்தச் சாம்பிராணியின் மணம் மூக்கில் பட்டவுடனேயே நமக்கு ஓர் நல்லுணர்வு உண்டாகக் காண்கிருேம். அதன் காரணமாக மன அமைதியும், ஒருமைப்பாடும் உண்டாக ஏதுவாகிறது. தெய்வீக உணர்வு மெதுவாக வெளிப்படுவதையும் உள்ளம் அதில் ஒன்றுவதையும் காண்கிருேம்.

இந்தச் சாம்பிராணியின் மருத்துவப் பயனைப் பார்த்தால் இதன் புகை சுற்றுப் புறக் காற்றைத் தூய்மை செய்யும். உள், வெளி ஆட்சிகளினுல் கபத்தைப் போக்கவும், கபம் சேராமல் தடுக்கவும் வல்லது. பெண்களும் குழந்தைகளும் குளித்தவுடன் தலையில் நீரேற்றம் உண்டாகாமல் தடுக்க சாம்பிராணிப் புகை நனி சிறந்ததெனப் பலரும் அறிவர். உள்மருந்துகளில் கபத்தைப் போக்குவதில் மிகச்சிறந்த மருந்துகளில் ஒன்று சாம்பிராணியாகும்.

**தீபம்:**

இறைவனுக்கு எத்தனை தீபங்கள் ஏற்றியிருப்பினும், கற்பூர தீப ஆராதனைதான் சிறப்பாகக் கொள்ளப்படுகிறது. கருவறையில் இருளில் இருக்கின்ற இறைவனின் திரு முகத்தை எட்ட இருந்தும் தெளிவாகப் பார்த்து வழிபடுவதற்கும், அறிவொளியே வடிவானவன் இறைவன். அவனைக் காண வேண்டுமெனில் அறியாமை இருளை நீக்குவதற்கு ஒளியாகிற ஞானத்தின் துணை வேண்டும் என்ற தத்துவத்தை உணர்த்துவதற்கும் தீப ஆராதனை செய்யப்படுகிறது.

கற்பூரம் வெப்பமுண்டாக்கிச் செய்கையுடையது (Stimulant). இது இதயத்தைத் தூண்ட வல்லது. கபத்தை அறுக்க (Expectorant) வல்லது. ஊழி நோயில் சிறப்பாகப் பயன்படுத்தப்படுகிறது.

**மலர்கள்:**

இறைவனின் திருவுருவத்தை அலங்கரிக்கவும் இறைவனின் திருப்பெயரைப் பல் முறை சொல்லி வழிபடவும் மலர்களும் இலைகளும் பயன்படுத்தப்படுகின்றன.

**தாமரை:**

திருமகளும் திருமாலும் உறையுமிடமாகக் கருதப்படுகிறது. செந்தாமரை, வெண்தாமரை கலைமகளின் உறவிடமாகக் கருதப்படுகிறது. செந்தாமரை மொக்காக இருக்கும் போது என்ன வடிவத்திலிருக்குமோ அதைப்போன்ற வடிவத்தில் இதயமும் இருப்பதால்தான் இதயத்தை இதய கமலம் என்று நம்முன்னேர்கள் வருணித்திருக்கிருர்கள். எனவே, இதயத்தை

வலுப்படுத்தும் வலிமை தாமரைக்கு உண்டு. (Cardiac Tonic) இதற்குதாது வெப்பகற்றிச் செய்கையுமுண்டு'

**தும்பை:**

சிவபெருமானுக்கு உரியதாகக் கருதப் படும் மலர் இது. இது கபத்தை நீக்குவதில் மிகச் சிறந்தது. விடாச் சுரத்திற்கு தும்பை, துளசி, விட்டுணுகரந்தை ஆகிய மூன்றையும் சேர்த்துக் குடிநீரிட்டுக் கொடுக்க நீங்கும்.

**இலைகள்:**

அருகம்புல், வில்வம், துளசி ஆகிய இவை களும் இறைவனை வழிபடுவதற்கு உரியவை யாயுள்ளன.

**அருகம்புல்:**

இதற்குப் புராண வரலாறே உண்டு. சிவபெருமான் அசுரனை அழிப்பதற்கு நெற் றிக் கண்ணைத் திறந்ததால் அந்த வெப்பம் அகிலஅண்டங்களையும் தகித்தது. இந்தவெப் பத்தின் கொடூரத்தினின்றுஎப்படிப்பாதுகாத் துக்கொள்வது என்றுபிள்ளையாரிடம் கேட்ட போது, முதலில் அருகம்புல்லை மாலையாகத் தொடுத்து எனக்குப் போடுங்கள் என்று சொன்னதாக புராண வரலாறு. புராண வரலாற்று உண்மைக்குத்தக்கவாறே. அருகம் புல் கொடிய வெப்பத்தை நீக்கிக் குளிர்ச்சி யைத் தருவதோடு வறட்சியையும் மாற்ற வல்லது. நஞ்சுகளையும் போக்க வல்லது. சருமநோய்க்கு ஏற்றது,

**வில்வம்:**

சிவபெருமானுக்குரிய வில்வ இலை அழ கையும் ஆண்மையையும் தரவல்லது. பித்த மயக்கம், வாய் குழறல், ஆகியவற்றைப் போக்க வல்லது. எல்லாவற்றிற்கும், செம் மையானவன் என்ற பொருள் கொண்ட சிவனின் அழகும் ஆண்மையும் இந்த இலை- யை மருந்தாகக் கொள்வதால் உண்டாகும் என்க.

**துளசி:**

காக்கும் கடவுளாகிய திருமாலுக்குரியது துளசி. துளசிச் செடிகளுக்கிடையில் இறந்த உடலைப் போட்டு வைத்தால், உடல் அழு காமல் பாதுகாக்கப்படும். அழிக்கும் சக்தியா கிய கபத்தினை போக்கி உடலைக் காக்சு வல்லது. இதன் பெருமையை

''சொன்னவிப் பணிலபற்பம்
சுராங்குசம் எவ்வாறென்னில்
வன்னிபோற் றிரிக்குங் காய்ச்சல்
வாங்கிடாப் பழையதாகி
சன்னிதொந் தித்துச்சேனைத்
தலைவனைத் தேடும்போது
தின்னுமா லலங்கற் சாற்றிற்
சிங்கமா தங்கமாமே''

என்ற பாடல் உணர்த்தும். அதாவது, திரு மாலின் கையில் உள்ள சங்கும், அவர் அணிந் துள்ள திருத்துழாய் மாலையும் எவ்வாறு நோயினின்று உடலைக் காக்கும் என்பது சொல்லப்பட்டிருக்கிறது.

பாடலின் பொருள்:

சங்குபற்பமானது, யானையாகுஞ் சுரத் திற்கு அங்குசம் போன்றது. அது எவ்வா றெனில் நெருப்பைப் போல் கொதிக்கின்ற காய்ச்சல், நாட்பட்டுப் பழைய சுரமாகி, சன்னியாக மாறி, சேனைத் தலைவன் எனப்படும் கபத்தைத் தேடிக் கூடி மரணத்தை உண்டுபண்ணுந் தருவாயில், மாலலங்கல் எனப்படும் துளசிச் சாற்றில் மேற்படி சங்கு பற்பத்தை அனுபானித்துக் கொடுத்தால் ''சிங்கத்தைக் கண்ட யானை போல் அச்சுரம் ஒடுங்கும்'' என்பதாம்.

**வேம்பு:**

சக்தியின் உருவமாகிய மாரியம்மனுக் குகந்தது. விஞ்ஞானிகளின் கூற்றுப்படி, வேப்பமரத்தின் காற்றில் எந்த நோய்க்கிருமி யும் சாகும் என்று அறியப்படுகிறது. எனவே, வேப்பமரம், சூழ்ந்துள்ள வீடுகளில் நச்சுக் காற்றினுலுண்டாகும் தொத்து நோய்கள் அணுகாது என்பது வெள்ளிடை மலையாம்.

**குங்குமம்.**

முறைப்படி குங்குமம் செய்ய வேண்டு மெனின் அது மஞ்சளைக் கொண்டுதான்

செய்யப்படவேண்டும். தற்போது பல நிறங்களில் கிடைப்பவை எல்லாம் சில ரசாயனப் பொருட்களின் கலவையாகும். முறையான குங்குமம் மங்களகரமானது. உள்நாக்கு வளர்ச்சிக்கு குங்குமத்தை வைத்து அழுத்தி வருவதினால் சுருங்கிவிடும்.

திருநீறு:

அரன் எனப்படும் சங்கார தெய்வத்தின் சின்னம் திருநீறு. இறுதியில் எல்லாம் ஒரு பிடி சாம்பலாகித் தீராவேண்டும் என்றதத்துவத்தை நினைவுறுத்துவதாகும்.

நெற்றியில் திருநீறு அணிந்தால், வியர்வையை உறிஞ்சுவதோடு, நீரேற்றம் வராமல் தடுக்கும் என்க.

மேற் குறித்தவற்ருல் நாம் அறிவது, படைத்தல், காத்தல், அழித்தல் ஆகியைவகளுக்கு ஆதியான இறைவனை மனித இனத்தில் இறுதி அழிவுக்குக் காரணமாகிய கபம் என்னும் அழித்தல் சக்தியினின்று காக்கும் பொருட்டு அவ்விறைவனுலேயே அதற்காகப் படைக்கப்பட்ட மலர்களையும் இலைகளையும் தூபதீபங்களையும் கொண்டு வழிபட்டு வருகின்ருேம். இதனை நமக்களித்த நமது நாட்டு ஞானிகளின் அருளும் திறமையும் என்றும் வாழ்க!

---

# நிலையும் நினைப்பும்

1 பிரிய அண்ணு,

வரும் போது கவனமாக எனக்கு இரயில், மோட்டார், குதிரை எல்லாம் வாங்கி வரவேண்டும்.

இப்படிக்கு,
தம்பி.

2 செல்வனுக்கு ஆசிகள்.

இந்தத் தடவையாவது மறக்காமல் நான் சொன்ன எவர் சில்வர் கூஜாவையும், வெண்கலப் பானையையும் வாங்கிவா.

இப்படிக்கு,
அம்மா.

3 செல்வ அண்ணு,

நான் கேட்டிருந்த பட்டுப் புடவையை எதிர்பார்க்கிறேன்.

இவண்,
தங்கை.

4 பையனுக்கு,

இரயில் கட்டணத்துக்கு பத்து ரூபாய் அனுப்பியிருக்கிறேன், போதாவிட்டால் நண்பர்களிடம் கேட்டு வாங்கிக் கொண்டு ஊர் வந்து சேர்.

அன்பான,
அப்பா.

5 பையன் ?!?!?!?

# சித்த மருத்துவம்

''முத்தமிழ்க் காவலர்'' திரு. கி. ஆ. பெ. விசுவநாதம் அவர்கள், திருச்சி.

கலை ஒரு தனிவகை. இரண்டு எழுத்துக்கள் உள்ள இரு சொற்களைக் கொண்ட ''தனி வகை'' என்ற இச்சொற்றொடர் ''தனிப் பிரிவு' என்றாகி, ஒப்பற்ற பிரிவு என்ற பொருளையும் தந்து மிகவும் உயர்ந்து நிற்பதைக் கண்டு மகிழலாம்.

### உயர்வு

எல்லாக் கலைகளையும் கண்டு, அறிந்து, போற்றி வளர்த்து, துய்த்து, மகிழ்ந்து வாழ்வதற்கு, உடலைப் பாதுகாத்து ஆகவேண்டும் ஆதலின், உடல் ஓம்பும் இம்மருத்துவக் கலை எல்லாக் கலைகளிலும் உயர்ந்து நிற்பது இயல்பேயாகும்.

### காலம்

சித்த மருத்துவமும் தமிழ் மருத்துவமும் ஒன்றே. இம்மருத்துவம் பிறந்த காலத்தை அறிந்து கூற இயலாது. கூறவேண்டுமானால் தமிழகத்து மண்ணில் செடி கொடிகள் தோன்றிய காலமே தமிழ் மருத்துவம் தோன்றிய காலம் என்று துணிந்து கூறலாம்.

### மொழி

நாட்டு வைத்தியம் என்று பொதுவாகக் குறிப்பிடுவது மூன்றை; ஒன்று, சித்த மருத்துவம்; இரண்டு, ஆயுர்வேதம்; மூன்று, யூனானி. தமிழ் மருத்துவத்துக்கு மொழி தமிழ்; ஆயுர்வேதத்திற்கு மொழி வடமொழி; யூனானிக்கு மொழி உருது. யூனானிக்குத் திசை மேற்கு; ஆயுர்வேதத்திற்குத் திசை வடக்கு; சித்த வைத்தியத்திற்குத் திசை தெற்கு.

### மருந்து

தமிழ் மருந்துகள் பெரும்பாலும் பொடியும் கியாழமுமாகவும் இருக்கும். இதனைப் பசுபம் (பஸ்பம்) என்றும், கசாயம் எனறும் சொல்லுவார்கள். ஆயுர் வேத வைத்தியம் பெரும்பாலும் தைலமும் திராவகமுமாக இருக்கும். யூனானி மருந்துகள் பெரும்பாலும் அல்வாவும் லேகியமுமாக இருக்கும்.

### பசுபம் (பஸ்பம்)

இரும்பு, வெள்ளி, தங்கம், செம்பு முதலிய உலோகங்கள் ஒன்பது. முத்து, மணி, பவழம் முதலிய இரத்தினங்கள் ஒன்பது. வீரம், பூரம் முதலிய பாசாணங்கள் ஒன்பது. இதனை முறையே நவ லோகம், நவ ரத்தினம், நவ பாசாணம் என்பர். இந்த மூவொன்பது இருபத்தேழையும், பசுபமாக்கும் முறை சித்த வைத்தியத்தில் மட்டுமே உண்டு. பிற ருத்துவ முறைகளில் இவற்றில் சில பசுபமாகச் செய்யப்படும். எனினும், அதன் மூலம் சித்த வைத்திய முறையாகவே அமைந்திருக்கும்.

### எளிது

அலபதி முறையில் ஆங்கிலேயர்கள் இவற்றில் சிலவற்றைப் பசுபமாக்குகிறார்கள். ஆனால் விலையுயர்ந்த இயந்திரத்தில், அதிகச் சம்பளம் வாங்குகிறவர்களின் கண்காணிப்பில், பெரும் பொருட் செலவில், அவை செய்யப் பெறுகின்றன. சித்த வைத்திய முறையிலோ இரண்டு மூன்று 'வரட்டி' களைக் கொண்டு சில மூலிகைகளின் சாறுகளைத் தடவி எளிய முறையில், குறைந்த செலவில், சுருங்கிய நேரத்தில் இவை அனைத்தும் பசுபமாகப் பெற்று வருகின்றன.

### உணவே மருந்து

சித்த வைத்தியத்தில் உணவும் மருந்தும் ஒன்றாகவே அமைந்திருப்பது வியப்புக்குரியது காய்கறிகளெல்லாம் மருந்து; கீரை வகை

களெல்லாம் மருந்து. கடுகு, மிளகு, சிரகம், பூண்டு, மஞ்சள், சுக்கு, திப்பிலி முதலிய கடைச்சரக்குகளெல்லாம் மருந்து. சுருக்கமாகச் சொல்லப் போனுல் பசுவின் பால், தயிர், மோர், வெண்ணெய், நெய் அனைத்துமே மருந்து. உணவே மருந்தாக அமைகின்ற இவையே சித்த வைத்திய முறையாகும். தமிழகத்தைத் தவிரப்பிறநாடுகளில் உணவுப் பொருள்களே மருந்தாக அமைகின்ற முறையைக்காண முடியாது. தமிழகத்துத் தட்ப வெப்ப நிலைக்கு ஏற்ப, தமிழ் மக்களுக்குத் தோன்றும் பிணிகளுக்குத் தமிழகத்து மண்ணில் முளைக்கின்ற செடி, கொடிகளை மருந்தாகத் தருவதே தமிழ் மருத்துவமுறையாகும்.

### கை வைத்தியம்

தாய்வழி மகள் காதுவழி கேட்டுக் கை வைத்தியமாகச் செய்யப்படுகின்ற ஒரு முறையும்தமிழகத்தில்உண்டு. இதையே சித்தவைத்தியம் என்றும், தமிழ் மருத்துவம் என்றும் வீட்டு வைத்தியம் என்றும் கூறுவதுண்டு. இந்தத் தலைமுறையில் நகரங்களில் வாழ்கின்ற படித்த பெண்கள் இம்முறைகளை அடியோடு கைவிட்டு விட்டனர். எனினும் சிற்றூர்களில் உள்ள எளிய குடும்பங்களில் இம்முறை இன்னும் இருந்து வருகிறது.

### சிறப்பு

சித்த வைத்தியம். காலத்தால் முந்தியதும், விலையால்குறைந்ததும், கையாள்வதில் சிறந்ததும், பலனுல் மிகுந்ததும், தகுதியால் உயர்ந்ததுமாகும். இவ்விதமிருந்தும் மக்களின் உணர்ச்சிக் குறைவும், மருத்துவர்களின் முயற்சிக் குறைவும், அரசினர் கவனக் குறைவும்ஒன்று சேர்ந்ததினுலேயே இச்சித்த வைத்திய முறைஅழியத் தொடங்கி விட்டது.

### ஒத்தை மருந்து

சித்த வைத்தியத்தில் ஒத்தை மருந்து என்று சில மருந்து உண்டு. அது, பூண்டு ஒரு மருந்து. கடுகு ஒரு மருந்து. வெங்காயம் ஒரு மருந்து. தேங்காய் ஒரு மருந்து. அந்த ஒன்றையும், எதையும் சேர்க்காமல், அரைக்காமல், காய்ச்சாமல், நிறுக்காமல், உருக்காமல் அப்படியே கொடுக்கச் சிற்சில நோய்கள் தீரும் இதை வடமொழியினர் ''ஏக மூலிகைப் பிரயோகம்'' என்பர். அவற்றுள் சில:

1. பாம்பு கடித்தால் வாழைப் பட்டையில் உள்ள சாற்றைப் பிழிந்து கொடுக்க உடனே குணமாகும்.

2. பூரான் கடித்தால் பனை வெல்லத்தையுண்டால் அதன் தடிப்பு உடனே மாறும்.

3. பிறந்த குழந்தை தவறிப் போய்ப் பெற்ற தாய்க்குப் பால்கட்டி முலைக்குத்தல் ஏற்பட்டால், மல்லிகைப் பூ வைத்துக் கட்ட உடனே குணமாகும். மல்லிகைப் பூ கிடைக்காத காலங்களில் வாழைப் பிஞ்சை அரைத்து தடவிக் குணங்காணலாம்.

4. நட்டுவாக்காலி கடித்தால் கொப்பரைத் தேங்காயை மென்று தின்ன உடனே குணங்காணலாம்.

5. இந்த ஒத்தை மருந்தும் ஒரே வேலைதான். இரண்டாம் வேளை மருந்து தேவையே இல்லை.

இம்மாதிரி முறைகள் நூறு ''தமிழ் மருந்துகள்'' என்ற நூலில் என்னுல் வெளியிட பெற்றிருக்கிறது. விலை ஐம்பது காசே. இப்போது வந்துள்ள பதிப்பு பன்னிரண்டாம் பதிப்பு. தமிழ்நாடு சித்தவைத்திய சங்கத்தின தலைவர் டாக்டர் எஸ். எஸ். ஆனந்தம் அவர்களால் இது பாராட்டப் பெற்றிருக்கிறது.

உயர்ந்த அறுவை மருத்துவ முறைகள் சித்த வைத்திய முறையில் உண்டு என்பதைக் கண்டு கூறியவரும் அவரே.

### அழிவு

தமிழ் மருத்துவ முறை அழிவதற்குத் தமிழ் மருத்துவர்களும் ஒரு வகையில் காரணமாயினர். வறுமை வாய்ப்பட்ட மக்களிற் சிலர் தங்களை மருத்துவர் என்று சொல்லியும், தங்களிடமிருந்தது மருந்து என்று கூறியும், தவறு செய்தமையால் பொது மக்களின் நம்பிக்கை கெடத் தொடங்கியது. மருத்துவ நூல்களில் உள்ள கவிதைகளையும் அதில் மறைபொருளாகச் சொல்லப்பட்ட மருந்துகளின் பெயர்களையும் அறியாமலும் புரியாமலும் இளம் மருத்துவர்கள் சிலர் தவறு செய்யத் தொட

ங்கினர். இதனுல் பொது மக்கள் சிறந்து பண்டிதர்களையும் உயர்ந்த மருத்துவர்களையும், அவர்களிடம் உள்ள தகுந்த மருந்துகளையும் சந்தேகிக்கத் தொடங்கினர். இவையும் சித்த வைத்திய முறை அழிவுக்குக் காரணமாயின.

### புதைந்து போனது

சித்த வைத்திய முறையில் சிறந்து விளங்கிய மருத்துவ மேதைகளும், பண்டித மணிகளும் பலர் தங்களிடம் உள்ள உயர்ந்த முறைகளை வெளியே காட்டாமலும், பிறருக்கு சொல்லாமலும், தனக்குப் பின் வாரிசாக ஒருவரைத் தேர்ந்தெடுத்துச் சொல்லி வைக்காமலும், அரசினருக்கு அறிவிக்காமலும், நூல்களாக எழுதி வைக்காமலும் மறைந்து போயினர். மறைய மறைய, ஒவ்வொரு சித்த வைத்தியரையும் புதைக்கப் புதைக்க, சில சித்த வைத்திய முறைகளும் புதைக்கப் பெற்றே போயின.

### அழிந்த காரணம்

இந்தத் தவற்றை நமக்கு முன்னே வாழ்ந்த பெரியோர்கள் செய்யவில்லை. அவர்கள் தாங்கள் கண்ட அருமையான முறைகளைச் சுவடிகளில் எழுதி வைத்தனர். ஆனுல் பாவம் அச்சுப் பொறிகள் இன்மையாலும். ஓலைகளிலே எழுதிக்குவிக்க வேண்டியிருந்தமையாலும், விரிந்த சொற்களில் உள்ள பரந்த முறைகளை, சொற்களைக் குறைத்துக் கவிதைகளாய் அமைத்துச் சுவடிகளாக்கி வைத்துப் போயினர். அவை, தமிழ் மன்னர்களுடையஆட்சி அழிந்தமையினுலும், ஆங்கில ஆட்சியினரின் அக்கறைக் குறைவினுலும், காலத்தால் பாழ்பட்டும், கடற் கோள்களின் அழிவிற்குள்ளாகியும், கரையான்களால் தின்னப்பட்டும் பல சுவடிகள் அழிந்து போயின. இவை அனைத்திற்கும் தப்பிச் சில நூல்கள் மட்டுமே எஞ்சியிருந்தன. இவற்றையுங்கூட, பழஞ்சுவடிகளை ஆடிப் பதினெட்டாம் பெருக்கில் ஆற்றில் விட்டால் புண்ணியம் என்ற கொள்கை பரப்பபட்டதினுல் அந்தப் புண்ணியத்திற்கு ஆசைப்பட்டு மீதமிருந்த பழஞ்சுவடிகளையும் சிலர் ஆற்றில் அள்ளிப் போட்டுவிட்டு அமைதி அடைந்தனர்

**அழிந்துபோன மருத்துவ நூல்கள்-**

1. அகத்தியர்—பன்னிரு காண்டம்.
2. போகர் — எண்ணுயிரம்.
3. கோரக்கர் மூலிகைப்பயன்— ஆயிரம்
4. கொங்கணவர்—மூவாயிரத்தி நூறு.
5. கோரக்கர் — வெண்பா ஏழாயிரம்.
6. மச்ச முனி—ஏழு காண்டம்.
7. சிவ வாக்கியர்—ஐந்து காண்டம்.
8. காசிபர் வண்ணம்.
9. உரோம முனி வடுகம்.
10. இராமதேவர் சந்தப் பா.
11. நந்தீசர் சந்தம்.
12. சங்குமா முனி கலித்துறை.
13. திருமூலர் திருமந்திரம் — எண்ணுயிரம்
14. பதஞ்சலி ஏழு காண்டம்.
15. சட்ட முனி நிகண்டு.
16. சட்ட முனி— இரண்டாயிரத்து ஏழு நூறு.
17. காலாங்கிய நாதர்—நாலு காண்டம்
18. போகர்—எழுநூறு முதலியன.

### இரத்தக் கண்ணீர்

இவை அனைத்தும் தமிழகத்துச் சான்ருேர்களாகிய சித்தர் பெரு மக்களால் தமிழ் மொழியில் தோற்றுவிக்கப் பெற்றவை; இவை அனைத்தும் அழிந்து போயின என்பது சிற் சில பாடல்கள் கிடைத்திருப்பதனுலும், சிற் சில நூல்களில் மேற்கோள்களாக வந்திருப்பதாலும் அறியமுடிகிறது. இன்னும் என்னென்ன நூல்கள் இருந்தனவோ? என்னென்ன பெயரில் இருந்தனவோ? அவற்றுள் என்னென்ன புதையல்கள் இருந்தவோ? அவற்றின் ஆசிரியர்கள் யார் யாரோ? அறிய முடியவில்லை. அவை அனைத்தும் இன்று இருந்தால் . . . ? நினைத்தாலே நெஞ்சம் புண்ணுகிறது. அழுதால் கண்ணிலிருந்து இரத்தக் கண்ணீரே சொட்டுகிறது. என்ன செய்வது?

### விருப்பம்

இந்த இழிநிலை மாற வேண்டும். மக்கள் சித்த வைத்தியத்தின் அருமை பெருமைகளை உணர வேண்டும். தாய்வழி மகள்வாய் வழிக் கேட்டு கை வைத்தியமாகச் செய்யும் முறை தமிழகத்தில் மலர வேண்டும். மருத்துவத்திற்காகச் செலவழிக்கும் பெரும் பொருள் மிச்சப்பட வேண்டும். சிற்றூர்களிலெல்லாம் தமிழ் மருத்துவ மனைகள் திறக்கப்பட வேண்டும். சித்த வைத்தியப் பள்ளிகளும், கல்லூரிகளும் தமிழகத்தில் பெரும்பான்மையாகத் திறக்கப்படவேண்டும். வாழ்க தமிழ்மொழி! வளர்க சித்தமருத்துவம்!

# வாதமாய்ப் படைத்து

டாக்டர் K. நடராஜன் B. I. M.

உலகம் என்ற சொல் இந்த மண்ணுலகை மட்டும் குறிக்கும் சொல்லாகப் பயன்படுத்தப் படுகிறது. பேரண்டம் என்பது இவ்வுலகும் சூரியனும், திங்களும் இன்னும் அண்ட வெளியிலுள்ள எண்ணற்ற கோள்களும் உள்ளடங்கியுள்ள பெரு வெளியாகும். இக் கோள்களெல்லாம் எப்போது உண்டானவை என்று கூற எவராலும் இயலவில்லை. அப்படி என்றே இனம் தெரியாத காலத்தில் படைக்கப்பட்ட கோடிக்கணக்கான கோள்களில் இவ்வுலகும் ஒன்று. ஆராய்ச்சியாளர் கூற்றுப்படி, சூரியனிலிருந்து சிதறி விழுந்த ஒரு துண்டம்தான் இந்த உலகம் எனினும், அந்தச் சூரியன் எப்போது உண்டாயிற்று என்று அறுதியிட்டு கூற இயலவில்லை. எனவே, இவ்வுலகு உண்டான பின் அதில் உயிர்த் தோற்றம் எப்போது ஆரம்பமானது என்பதையும் அறுதியிட்டுக் கூற இயலவில்லை.

பூமி வெறும் நெருப்புக் கோளமாக இருந்த போதும் அதனைச் சுற்றியுள்ள வெளியில் காற்று மண்டலம் இருந்திருக்கிறது. இந்தக் காற்றுமண்டலத்திலுள்ள வாயுதான் பல கோளங்கள் தோன்றவும் மற்றும் அனைத்து ஆக்கப் பாடுகளுக்கும் காரணமாயிருந்திருக்கிறது. பூமியானது நெருப்புப் பிழம்பாயிருந்த போது என்ன நிகழ்ந்திருக்கக் கூடுமென்று ஓரளவுக்கு அனுமானிக்க முடிந்தாலும், அது குளிர்ந்து இறுகிய பின் ஏற்பட்ட மாற்றங்களைக் கூற முடிகிறது. பூமியின் மேல் பாகம் குளிர்ந்து இறுகிய பின், பூமியைச் சுற்றிலுமுள்ள காற்று மண்டலத்திலுள்ள வாயுக்களின் கூட்டுறவால் பலவித வேதியியல் மாற்றங்கள் ஏற்பட்டிருக்கக் கூடும்.

நவீன விஞ்ஞானக் கூற்றுப்படி, பூமியைச் சுற்றியுள்ள வெளியில் பலவித வாயுக்கள் கலந்திருப்பதாக அறிகிறோம். அவற்றில் மிக முக்கியமானவை பிராணவாயு (oxygen) நீதுருசவாயு (Nitrogen), நீர்வாயு (Hydrogen), கரியமில வாயு (Carbondioxide) என்பனவாகும்.

உயிருக்கும் உயிர் இயக்கத்திற்கும் ஆதாரமான வாயு பிராண வாயுவாகும். தாயின் கருப்பையிலிருந்து வெளியே வந்து பிறந்து விட்ட குழந்தை, நிலத்தில் விழுந்தவுடன், தாயின்ன்றும் பிரிக்கப் படுகிறது. அப்படி பிரிக்கப் பட்டபின் அது வாய்திறந்து அழுகிறது. அது அழாவிட்டால் இறந்து விடும் என்பது இயற்கை. அதுவரை தாயின் வாயிலாகப் பெற்று வந்த பிராண வாயுவை, தன் வாயின் வாயிலாகப் பெற்றாக வேண்டிய நிர்ப்பந்தம் உண்டாகிறது. அதனால் அது வாயைத் திறந்து அழும்படியாக இயற்கை அமைத்துள்ளது. வாயைத்திறந்து அழும் போது அண்டவெளியின் காற்று, குழவியின் வாய் வழியாகச் சென்று புப்புசக் கண்ணறைகளில் நிரம்பி, நெஞ்சறையை விரிக்கிறது. விதானம் தாழ்ந்து உயர்கிறது. இதயம் சுருங்கி விரிகிறது. குருதி உடல் முற்றும் பரப்பப் படுகிறது. ஒரு முறை இந்த இயக்கம் ஆரம்பமானவுடன், இறைவனால் அக் குழந்தையின் உடம்பில் தரிக்கச் செய்யப்பட்ட உயிர், தொடர்ந்து அவ்வியக்கத்தைக் கைக் கொள்ளுகிறது. இதிலிருந்து, அண்ட வெளியிலுள்ள காற்றும் அதில் நிறைந்திருக்கும் பிராணவாயுவும் உயிரியக்கத்திற்கு எவ்வளவு இன்றியமையாதது என்பது விளங்கும்.

அண்டத்திலுள்ள இவ்வாயுதான் படைப்புக்கு ஆதாரமானது என்பது சித்தர் கொள்கை. அதனாலேயே தேரர் என்ற சித்தர்" வாதமாய்ப் படைத்து" என்று கூறியிருக்கிறார். இக்கருத்தைநவீனவிஞ்ஞானக்கூற்றுடன் ஒப்பிட்டுப்பார்க்கலாம். ஒரு உயிர், ஒரு ஒற்றை விலம் (Cell) உள்ள உடம்பில் இயங்க வேண்டுமாயினும் மேற்கூறிய பிராணவாயு, நீதுருசவாயு, நீர்வாயு, கரியமிலவாயு ஆகிய நான்கும் இன்றியமையாதன என்பது விஞ்ஞானத்தின் முடிவு. மெய் ஞானத்தின் முடிவுப் படிவாதம் என்பதே படைப்புக்கு ஆதாரமாகும். வாதம் என்பது ஆகாயமும் அதி

லுள்ள வாயுவும் சேர்ந்த ஒரு தத்துவமாகும். எனவே விஞ்ஞானக் கூற்றுபடியும் மெய் ஞானக் கூற்றுப்படியும்" "வாதமாய்ப் படைத்து" என்ற கருத்து மெய்ப்பிக்கப் படுகிறது.

இனி, தத்துவங்களில் முதல் தத்துவமான ஐம்பூதக் கொள்கை பற்றியும் நோக்குவோம். ஏனெனில், வெளியிலிருந்து வாயுவும், வாயுவிலிருந்து தேயுவும் தேயுவிலிருந்து அப்புவும் அப்புவிலிருந்து பிருதிவியுமாகத்தோன்றியது என்பது மெய் ஞானம். எல்லாவற்றுக்கும் இடந் தருவதாகிய வெளி ஆகாயம். இந்த வெளியில் இடையருது சலனமுற்றுக் கொண்டேயிருப்பது வாயு. இவ் வாயுதுவிருந்தே தோன்றுகிறது தீயும் நீரும். எவ்வாறு?

உலகிலுள்ள எப்பொருள் எரிய வேண்டுமாயினும் அது பிராணவாயுவின் துணியின்றி எரிய முடியாது. நீர்வாயு (hydrogen), இயற்கையாக வெடித்து எரியும் தன்மையுடைய வாயுவாகும். எனவே, இவ்விரண்டு வாயுக்களையும் தீயின் கூருனவை எனக் கூறுதல் சாலப் பொருந்தும்.

தண்ணீர் உண்டாக வேண்டுமானல் நீர் வாயு இரண்டு பங்கும் பிராணவாயு ஒரு பங்கும் சேர்ந்துதான் உண்டாக வேண்டும். எனவே, மேற்கூறிய நான்கு பூதங்களுக்கும் ஆதாரம் ஆகாயம். நீருக்கும் நெருப்புக்கும் ஆதாரம் வாயு என்பது தெளிவாகிறது. இவ்வைம் பூதக் கொள்கையின் விஞ்ஞானக் கருத்துக்களைக் கீழ்க் கண்ட புறநானூற்றுப் பாடல் தெளிவாக்கும்.

"மண்டிணிந்த நிலனும்
நிலனேந்திய விசும்பும்
விசும்புதை வரு வளியும்
வளித்தலையீய தீயும்
தீ முரணிய நீரு மென்றுங்கு
ஐம் பெரும் பூதத்துஇயற்கைபோல"

மண் என்ற சொல் பருப் பொருளைக் குறிக்கும். பருப்பொருள் மேலும் மேலும் அடர்த்தியாகத் திணிக்கப் பட்டது போன்றது இப்பூமி. அதைப்போல் உலகில் காணும் பருப்பொருள்களெல்லாம் மண் அல்லது பிருதிவி என்ற மூலக் கூறுகளின் தன்மையுடையதாகக் கருதப்படும். அதாவது, உலகிலுள்ள பொருள்களின் திண்மை, செறிவு, கனம், பருமை ஆகியவற்றிற்குக் காரணமான மூலக் கூறு (பூதம்) மண் அல்லது பிருதிவியாகும்,

அண்ட வெளியினின்று தோன்றும் ஐந்து மூலக்கூறுகளில் மண் அல்லது பிருதிவி என்ற மூலக்கூறுக்கு ஆதாரமானதும்அண்டவெளியிலுள்ள வாயுவேயாகும் என்பதனையும் எடுத்துக் காட்டுகளால் நிருபிப்போம்.

தாவரங்கள் ஒளிச்சேர்க்கையின் மூலம் மாவுப் பொருள் தயாரிப்பதற்குரிய பொருள் கரியமிலவாயு, அதேபோல், தாவரங்களின் வளர்ச்சி, செறிவு, திண்மை ஆகியவற்றிற்கு இன்றியமையாதது நீதுருச வாயுவாகும் (Nitrogen). மக்களுக்கும் விலங்குகளுக்கும் உருவத்தை கொடுப்பது தசை. இத்தசைக்கு ஆதாரமானதும் நீதுருசவாயுவேயாகும். அதாவது "Amino Acids)" என்ற அமிலங்களுக்கு ஆதாரம் நைட்ரஜன் என்ற வாயு: புரதச் சத்துக்கு ஆதாரம் "Amino Acids" என்ற அமிலங்கள். ஆக, தசைவளர்ச்சிக்கு ஆதாரம் புரதச்சத்து. எனவே, மண்ணின் கூறுடைய தசைக்கு ஆதாரம் "நைட்ரஜன்" என்றவாயு என்பது தெளிவு.

"நிலனேந்திய விசும்பு" என்ற சொற்ருெடர், நிலனுகிய இம்மண்ணுலகு, ஏந்திக் கொண்டிருப்பது போன்ற தோற்றத்தை யளிப்பது ஆகாயம் என்பதைக்குறிக்கும்.

"விசும்புதைவருவளியும்" என்ற சொற்ருெடர், ஆகாயமாகிய வெளி உதைத்து வருவது போன்றது காற்று என்பதாகும். அதாவது, வெளியின் அணுக்கள் இயங்கிக் காற்ருயிற்று என்றும் கொள்ளலாம் ஆகாயத்திலிருந்து காற்று சலனமுறுகிறது என்பதையும் இது காட்டுகிறது.

"வளித்தலையீயதீயும்" என்ற தொடரின் பொருள் வளியாகிய காற்றினின்றும் கொடுக்கப்பட்டது "தீ" என்பதாம், அதாவது,நெருப்பைக்கொடுப்பது காற்று என்று பொருள்படும்

இது முன்னரே விவரிக்கப்பட்டுள்ளது. பிராணவாயுவும், நீர்வாயுவும் நெருப்புக்கு ஆதாரமானவையாம்.

"தீமுரணிய நீருமென்றுங்கு" என்ற தொடர் மிகச் சிறந்த அறிவியற் பொருளைக் கொண்டதாகும். "தீமுரணியநீர்" என்றால், நெருப்பு மாறுபட்டு உண்டான நீர் என்பது பொருள். அதாவது,

நெருப்பிற்காதாரமாண பிராணவாயுவும் நீர்வாயுவும் மாறுபட்டவிகிதத்தில் ஒன்று கூடி உண்டாவது நீர் என்பதாகும். எனவே ஐந்து பூதங்கள் ஒன்றிலிருந்து ஒன்று தோன் றின என்ற மெய்ஞானக கருத்து இங்கேவிஞ் ஞானக் கருத்துக் கிசைவாக விளக்கப்பட்ட.

இன்னொருவகையாகப் பார்த்தால், உலகி லுள்ள எப்பொருளை எடுத்துக் கொண்டா லும் அது ஒன்று பருப்பொருளாகவோ, அன்றி வாயுப்பொருளாகவோ, அன்றி திர வப் பொருளாகவோ அல்லது தீ, சூடு. சக்தி யாகவோ தான்இருக்கமுடியும்.எப்பொருளின் அணுக்களுக்குகிடையிலும் இடைவெளிஇருந் தாக வேண்டும். எனவே, ஐந்து மூலக்கூறுக ளின் காரணமாகவே, உலகப்பொருள்கள் இந்த ஐந்து நிலைகளில் உள்ளதாகக் கூறுதல் சாலப் பொருந்தும்.

மேற்கூறிய ஐந்து மூலக்கூறுகளுமே வளி அழல், ஐயம் ஆகிய மூன்று உயிர்த்தாதுக்க ளுக்கும் ஆதாரம் என்பது சித்த மருத்துவக் கொள்கை. அதாவது, ஆகாயம் + வாயு = வாதம் என்ற தத்துவமாகவும், தீ என்றமூலக் கூறு அழல் என்ற தத்துவமாகவும், மண் + நீர் = கபம் என்றதத்துவமாகவும் பிண்டமாகிய உடம்பில் பரிணமிக்கின்றன.

வாதம் என்றதத்துவம் உலக முழுவதற்கும் மட்டுமின்றி உலகிலுள்ள ஒவ்வொரு உட லுக்கும் படைத்தல்,வளர்த்தல் ஆகியவற்றிற் குக் காரணமாயுள்ளது. உலகிலுள்ள எந்தப் பொருளின் அசைவிற்கும் அல்லது இயக்கத் திற்கும் காரணமானது வாயுவேயாகும். அந்தவாயு சலனமுற்று இயங்குவதற்கு இடை வெளியாகிய ஆகாயமும் வேண்டும்.இவ்வாறு ஆகாயமாகிய இடைவெளியில் வாயு என்ற தத்துவம் இயங்குவதுதான் வாதம் என்ற தத்துவமாகும்.

முன்னர் கூறியபடி, குழந்தைபிறந்ததும்அது உயிர்வாழவும், தன் முதல் இயக்கத்தை ஆரம் பிக்கவும் பின்பு அவ்வியக்கத்தைத் தொ டர்ந்து செயல்படுத்தவும் காரணமாயிருக்கின் ற வாயு,குழந்தையின் உடம்பிலுள்ளஉறுப்புக் களின் இடைவெளியில் செயல்படும் போது வாதம் என்றதத்துவமாகிறது. வாய் என்ற சொல்லே, வாயு என்பதன் அடிப்படையில் பிறந்ததாகத் தோன்றுகிறது. ஏனெனில், பிறந்தகுழந்தையின் முதல் இயக்கத்திற்கு வெளிக் காற்றானது முதன் முதலில் உட்புகும் வாயிலாக வாய் அமைந்திருப்பதாலாகும். மற்றும், ஆகாயவெளியில் இடையறாது சலன மூறும் வாயுவினாலுண்டாகும் ஓம் என்ற மூல ஒலி போல், வாய்க்குள்ளும் குரல் வளையிலும் உள்ள வெளியில் சலனமுறும் வாயுவினால் ஒலி பிறக்கிறது. இவ்வாறு ஒலிக்கும் செயலுக்கும் வாயு ஆதாரமாயிருக்கிறது.

செயலுக்கு உருவம் வேண்டும். உருவத் தைக் கொடுப்பது தசை. தசைக்கு ஆதாரமா யிருப்பது நைட்ரஜன் என்ற வாயு. தொடு உணர்வு (பரிசம்)க்கு ஆதாரமாயிருப்பது நரம் புகள். ஐம் பூதக் கொள்கைபடி, தொடுஉணர் வுக்கு ஆதாரமாயிருப்பது வாயு. எனவே, தசைகள், நரம்புகள் ஆகிய செயல்படு கருவி களுக்கு ஆதாரமாயிருப்பது வாயுவாகும். ஆகவே, இயக்கத்திற்கு ஆதாரமாயிருப்பதும் வாயுவாகும்.

குழந்தை பால் குடிக்கும் போதும், பெரி யவர்கள் நீர் பருகும் போதும், உணவை மெல் லுவதற்கு வாய் அசைவுறும் போதும், அவ்வு ணவை விழுங்குவதற்கு துணைசெய்வது வாயு வாம். விழுங்கப்பட்ட உணவு, உணவுக்குழல் வழியாகக் கீழ் நோக்கி அலை அசைவுகளால் (Peristaltic movement) தள்ளப்படுவதற்கும், அதனை இரைப்பை தன் தசைகளால் புரட்டு வதற்கும் ஆதாரம் வாயு வாகும்.

கன்மேந்திரியங்கள் என்று சொல்லப் படும் கை, கால், வாய், எருவாய் கருவாய்

ஆகியவை செயல்படும் கருவிகளாதலால் அப் பெயர் பெற்றன. இவை செயல் புரிவதற்கு ஆதாரமாயிருப்பது வாயு. கைகளும், கால் களும், தசை, நரம்புகளால் ஆக்கப்பட்டு அதிகம் செயல் புரியும் வாய்ப்பைப் பெற்ற தாலேயே அவை வாயுவின் கூருகக் கூறப்படு கின்றன. வாயினின்று ஒலி பிறப்பது வாயு விஞல்தான்(வசனம்) கருப்பையினின்று குழந் தை வெளியே தள்ளப் படுவதற்கு ஆதாரமா யிருப்பதும், ஆண் பெண் கூடலின் போது விந்துவை வெளி யேற்றக் காரணமாயிருப் பதும், அது போதுண்டாகும் பரிச இன்பத் தை உடல் முற்றும் பரப்பக் காரணமாயிருப் பதும் வாயு வாகும். அதனுலேயே தோல் பரி சத்திற்கு (தொடு உணர்வு) ஆதாரமாயும், தொடு உணர்வுக்கு வாயு ஆதாரமாகவும், உள்ளது

மலத்தைக் கழிப்பதும், சிறு நீரைக் குருதி தியினின்று பிரிப்பதும், சலப்பையில் நிரப்பு வதும், பின்னர் சலவாகியின் வாயிலாக வெளி யேற்றுவதும் வாயுவின் செயலாகும். இதயம், புப்புசம், விதானம் ஆகியவை இயங்குவதற் குத் துணேபுரிவது வாயு வாகும். குருதிச் சுற் ரோட்டத்திற்குத் துணேபுரிவதும் வாயுவே யாகும். விழுங்கப்பட்ட உணவு, வயிற்றிலி ருந்து குடலுக்குத் தள்ளப் படுவதும் மீண்டும் அங்கிருந்து கழிவுப் பொருளாக வெளியேற் றப் படுவதும் வாயுவால் தான்.

எனவே பிறந்த குழந்தையின் முதல் இயக் கத்கத்திற்குக் காரணமாகி, அக்குழந்தையின் அன்ருட இயக்கங்கள் அத்தனைக்கும் வாயு காரணமாயிருக்கிறது. ஆகவே இயக்கத்திற்கு ஆதாரம் வாயுவும் அது செயல்படும் இடமா கிய வெளியும் சேர்ந்த வாதம் என்ற தத்துவ மாகும்.

வேருெவகையாகச் சொன்னுல், பிராண வாயு இல்லாமல் எந்த உயிரினமும் வாழமுடி யாது. நீர் இல்லாமல் எந்த உயிரினமும் தனது உணவைச் செரிபித்துக் கழிவுப் பொருட்களே வெளியேற்ற இயலாது. ஒளியும் வெப்பமும் உயிர் வேதியல் மாற்றங்களுக்கு இன்றியமை யாதன. மண்ணின்கூருகிய பருமையில்லாமல் எவ்வுயிரினத்துக்கும் உருவம் கிடைக்காது. இவையெல்லா வற்றுக்கும் மூலகாரணம் அண்டவெளியிலுள்ள வாயு. இடந்தரும் வெளியும் வாயுவும் ஐந்து மூலக்கூறுகளுக்கும் ஆதாரமாயிருக் கின்றன என்பது தெளிவா கிறது.

### வாயு பொருள்—வாதம் செயல்

அண்டவெளியில்உண்டான மேற்குறித்த ஐம்பெரும் மூலக்கூறுகளும் பிண்டமாகிய உடம்பிலும் பரிணமிக்கின்றன. இந்த ஐந்து மூலக்கூறுகளே, பிண்டத்திலும் வளி, அழல், ஐயம் என்ற தத்துவங்களாகப் பரிணமிக்கின் றன. இவை உயிருக்கு ஆதாரமான தத்துவங் களாதலால் உயிர்த்தாதுக்கள் எனப்படுகின் றன. உடலுக்கு ஆதாரமான ஏழுதாதுக்கள் பருவுடலுக்கு உருவம் கொடுப்பதாலும் இயங் குவதற்கு ஆதாரமாயிருப்பதாலும் உடல்தா துக்கள் எனப்பட்டன.

அண்டத்திலிருந்து பிண்டமாகப் பரிண மித்த வாவு, பிண்டமாக மட்டு மன்றி, பிண் டத்திலுள்ள இடைவெளிகளில் வாயு வாக வும் செயல்படுகிறது. அப்போது அது வாதம் அல்லது வளி என்ற தத்துவமாகக் கருதப் படுகிறது. இயற்கையாக ஒரு மாத்திரையில் செயல் படுவது வாதம் என்ற தத்துவம். முன் னர் கூறியபடி, வாயில் போடப்பட்ட உணவு பல மாற்றங்களுக்குப் பின் குடலுறிஞ்சி களால் உறிஞ்சப்பட்டுச்சக்கைபெருங்குடலுக் குத்தள்ளப் படுகிறது. சக்கைப் பொருளி லுள்ள அதிகப்படிநீர் உறிஞ்சப்பட்டு, சக்கை யானது மலமாக வெளியே தள்ளப்படுகிறது. மேற்கூறிய அனேத்துச் செயல்களுக்கும் துணே புரிவது வாயுவாகும்.

இவ்வாறு அண்டத்தில் படைப்பிற்கு ஆதாரமாகி, எல்லாச் செயல்களுக்கும் பிண் டத்தில் காரணமாயிருக்கும் வாயு, சுவாசத் திற்குப்பயன்படும் போது பிராணவாயுவாக வும், கீழ் நோக்கிச் செயல் படும் போது அபா ன வாயுவாகவும் மேல் நோக்கிச் செயல்படும் போது உதானவாயுவாகவும், உடல் முழுவ தும் குருதியைப் பரப்புகின்ற செயலேச் செய் யும் போது வியான வாயு வாகவும், மேற்கு

நித்த செயல்கள் இயற்க்கையளவில் மிகாமலும் குறையாமலும் செயல்படுத்த வைக்கும் தத்துவத்தைச் சமான வாயுவென்றும் இன்ன பிறவுமாகச் சித்தமருத்துவத்தில் கூறப்பட்டுள்ளது. இவைபோக, இன்னும் ஐந்து வகை வாயுக்களும் அவற்றின் தொழில்களும் கூறப்படுகின்றன. எவ்வாருயினும், உயிருக்கு ஆதாரமான பிராணவாயுவாக நுழைந்து, பல்வேறு நிலைகளில் செயல் புரியும் போது பல்வேறு பெயர்களைப் பெறுகின்றது.

### நோயின் அடிப்படையில் வாதம்

இயற்கையாக ஒரு மாத்திரையில் செயல்படும் வாதம், உணவாதி செயல்களால் கூடவோ குறையவோ செய்யலாம். எளிதில் செரிக்காத உணவுகள், கிழங்கு வகைகள் வாயுவை மிகைப்படுத்தும் உணவுப் பொருட்கள் போன்றவற்றை அளவிற்கதிக மாகப் புசிப்பதால், புசிப்பவனுடைய செரிமனத்திறனுக்கு மிஞ்சிய அளவுடைய உணவு செரிபடாமல் நிற்கும். அந்நிலையில் அது புளித்து நுரைக்கும் அங்கே வாயு உற்பத்தியாகும். வாயுவுக்கே உரித்தான அலைபாயும் தன்மையால் பல திசைகளிலும் பாயும். மேல் நோக்கியோ, கீழ்நோக்கியோ பக்கங்களிலோ செல்லும். வயிற்றுப் பேசிகளிலிருந்து சுரக்கும் செரிமன நீர்களை வறட்டும். உறுப்புக்களின் ஊடே சென்று மோதும், வயிற்றையே கலக்கலாம். வயிற்றுப் பேசிகளை அசைக்கும். இப்படி ஏற்படுகின்ற நிலைக்குத்தகுந்தாற் போல் அசீரணமந்தம், பேதி, வயிற்றுவலி முதலியன உண்டாகலாம். இந்நிலைகள் மாருமல் மேலும், மேலும் வாயு உற்பத்தி அதிகரித்துக் கொண்டே போனுல், அது குருதியுடனும் கலந்து ஆங்காங்கே திசுக்களுக்கும் தசைகளுக்கும் செல்லக்கூடும். இப்படிச் செல்கின்ற வாயு கொஞ்சம் கொஞ்சமாகச் சேர்ந்து அடர்த்தி அதிகரித்து ஆங்காங்குள்ள தசைகள், தசைநார்கள், நரம்புகள் முதலிய வற்றினூடே உலவினுல், வலி, குத்தல், நரம்புகளைத்தம்பிக்க வைத்தல் முதலியவற்றை உண்டாக்கலாம். நரம்புகள், தசைகள் முதலியவற்றை முழுவதும் தம்பிக்கவைத்து விட்டால் அதனை வாத நோய் என்று சொல்லுகிறோம். தம்பிக்கவைக்கின்ற வாயு குருதியின் ஓட்டத்தைக் குறிப்பிட்ட இடத்தில் தம்பிக்க வைத்தால், அவ்விடத்துத் தசைகளுக்கு உணவில்லாமல் அது சூம்பிப் போகும்.

வயிற்றிலேயே அதிகம் நின்று, குடல்களுக்கும் சென்று அங்குள்ள சுவர்ப் பேசிகளைக் கெடுக்கும் வல்லமையும் பெற்றிருக்கலாம். குடலினுள்ள சளிச்சவ்வுகளைக் கெடுத்து, அதனடியிலுள்ள தசைப் பகுதியையும் கெடுக்கலாம். அந்த நேரத்தில் அமிலங்கள் அதிகம் சுரப்பின், எளிதில் குடலில்புண்ணுண்டாகும். ஹைட்ரோகுளோரிக் மற்றும் பெப்சின் போன்ற அமிலங்களை அதிகம் சுரப்பதற்கு இவ்வாயு தூண்டவும் கூடும்.

வாயுவுக்கு இயற்கையாக உலர்த்தும்வன்மையுண்டு. அபான வாயுவாகப் பெருங்குடலிலே செயல் படும்போது, அளவுக்கு மிஞ்சி மலத்தை உலர்த்தி மலச்சிக்கலை உண்டாக்கலாம், பெருங்குடல், இறுதியில் கழிவுப் பொருள்களிலுள்ள நீரை உறிஞ்சுவதற்கு துணை புரிவதும் இந்த வாயுதான். உறிஞ்சும் தசைகள் பலமற்றுப் போனுலும், அபானவாவு தன் இயற்கையளவில் மாறுபட்டிருந் தாலும் உறிஞ்சும் வல்லமை குறையும். அதனுல், மலத்திலுள்ள நீர்த்துவம் கூடி, மலம் கொழகொழத்து வரும். மலத்தை வெளி யேற்றும் அபானவாயு வேகப்படுமானுல், கொழ கொழத்த மலம் பேதியாகப்பீச்சியடிக்கும்.

எனவே. வாயுவால் உண்டான பொருள் வாயுவால் பல நிலைகளில் இயக்கப்பட்டு இறுதியில் வாயு வால் வெளித்தள்ளப் படுகிறது. இதிலிருந்து, வாயுவே வாதமாக எல்லா இயக்கங் களுக்கும் காரணமாயிருக்கிறது. என்பது தெளிவாகிறது.

# தூக்குத் தண்டனை

## ( Judicial Hanging )

## (சட்டமும் மருத்துவமும்)

ப. அ. முகம்மது இக்பால், M. D. (சித்தா)
உதவி விரிவுரையாளர்.

தூக்குத் தண்டனை என்பது இன்றைய நாட்களில் அரசின் மையச் சிறைச்சாலையில் நிகழ்த்தப்படும் ஒரு செயல்முறையாகும். இதனை ஆங்கிலத்தில் 'ஜூடிசியல் கேங்கிங்கு' (Judicial Hanging) என அழைப்பர். இந்திய தண்டனைச் சட்டம் 302-பிரிவின்படி கொடூரமான கொலைக்குற்றம் செய்தவரையோ (அ) அச்செயல் புரிவதற்கு காரணமாக இருந்தவர்களையோ தூக்கிலிடுவர். தூக்குத் தண்டனை வழங்குவதற்கு மாவட்ட நீதிமன்ற நடுவருக்கு (Dt. & Sess Judge) அதிகாரம் உண்டு. ஆனால் இவர் தான் வழங்கிய அதிகாரத்தினை உயர் நீதிமன்றத்தின் (High Court) ஒப்புதல் பெற்ற பிறகே செயல்படுத்த முடியும்.

உடல்வளர்ச்சி பெறாதவர்களுக்கு (Maturity) தூக்குத் தண்டனை வழங்கப் படுவது கிடையாது. இதுபோல கருவுற்ற பெண்ணுக்கு நீதிமன்ற நடுவர் தூக்குத் தண்டனை தீர்ப்பளிக்கும்போது ஒருசில சிக்கல்கள் எழுகின்றன. அவளது வயிற்றில் வளரும் அக்குழந்தை பிறந்த பின்பே அவளது தூக்கு தண்டனையானது செயல்படுத்தப்படும். தூக்குத்தண்டனை வழங்க நீதிமன்றம் நடுவர் தீர்ப்பளிக்கும்போது, அத்தீர்ப்பு நியாயமற்றது என பாதிக்கப்பட்டவர் கருதும்பொழுது நாட்டின் தலைமையகத்திலுள்ள உயர்நீதி மன்றத்திற்கு( High Court ) முறையீடு செய்யலாம். மேற்படி தண்டனை விதிக்கப் பட்டவர், தலைமை நீதிமன்றத்தில் தீர்ப்பளிக்கப்பட்ட 30 தினங்களுக்குள் மேல் முறையீடு செய்ய வேண்டும் என்பது விதி. உயர்நீதி மன்றத்திலும், தலைமை நீதிமன்றத்தில் அளித்த தண்டனையே உறுதி செய்து விட்டால் உயர் நீதிமன்றத்தில் குற்றம் அவ்வாறு சாட்டப்பட்டவர் தான் தலைமையகத்திலுள்ள உச்ச நீதிமன்றத்திற்கு (SupremeCourt) மேல் முறையீடு செய்ய உத்திரவு கேட்க வேண்டும். (Leave Appeal to Supreme Court) உயர்நீதி மன்றத்தில் உத்திரவு கிடைத்த பின்பு தான் உச்ச நீதிமன்றத்திற்கு மேல் முறையீடு செய்ய முடியும். அவ்வாறு செய்யப் பட்ட மேல் முறையீடு உச்ச நீதிமன்றத்திலும் நிராகரிக்கப்பட்டால்நாட்டின் ஜனதிபதிக்கு மன்னிப்புக்கோரி (MercyPetition) மனு அனுப்பலாம். அவ்வாறு அனுப்பப்பட்ட மனுவும்தலைவரால் தள்ளுபடி செய்யப்பட்டால் தான் ஒருவருக்கு வழங்கப்பட்ட தண்டனை உறுதி செய்யப்பட்டதாகக் கொள்ளப்படும்.

நாட்டின் தலைமையகத்திலுள்ள உச்ச நீதி மன்றத்திற்கு (Supreme Couot) மீண்டும் ஆராய முறையிடலாம். இவ்வாறு விண்ணப்பிப்பது நீதிமன்ற நடவடிக்கை முடிந்த ஏறத்தாழ எட்டு நாட்களுக்கு மேலாகக் கூடாது. உச்ச நீதிமன்ற நடுவர் வழக்கினை மீண்டும் ஆராய்ந்து, முன்னர் பிறப்பித்த கட்டளை முறையானது அல்லது முறையற்றது என தீர்ப்பளிக்க முழு அதிகாரமுண்டு.

ஒருவருக்கு தூக்குத் தண்டனை வழங்க உறுதி செய்த பின், அவரை அதே சிறைச்

சாலையில், அவர்களுக்கென தனிமைப்படுத்தி வைப்பதற்கான அறைகளில் அடைக்கப்பட வேண்டும். அவ்வறையில் பிறர் அவரைக் காண வேண்டும் என நினைத்தால் அச்சிறைச் சாலையின் கண்காணிப்பாளரிடமிருந்து முன் அனுமதி பெறவேண்டும்.

ஒருவருக்கு தூக்குத் தண்டனை உறுதி செய்யப்பட்டு விட்டால், அவ் உறுதியினை 21 நாட்களுக்கு குறைவு படாமலும் 28 நாட்களுக்கு மேலாகாமலும் நிறைவேற்றப்பட வேண்டும். மேலும் தூக்குத் தண்டனை செயல்படுத்தும் நாளானது அரசு பணி நாட்களிலே செயல்படுத்த வேண்டும். ஒருவருக்கு அச்செயலை நிகழ்த்துமுன் எந்த நாளில் எந்த நேரத்தில்அது செயல்படுத்தப்படுகின்றதுஎன் பதனை எழுத்தோலை மூலம் அவருக்கு தெரிவிக்கவேண்டும். இதனைசெயல்படுத்துவதற்கு முன் இந்தியத் துணை குடியரசுத் தலைவரின் ஒப்புதலைத் தொடர்புடைய சிறைக் கண்காணிப்பாளர் பெறவேண்டும்.

தூக்குத் தண்டனையை நிறைவேற்றுவதற்கு அரசின் மையச் சிறைச்சாலைகளில், அதற்கென தனி அறைகள் அமைக்கப்பட்டிருக்கின்றன. அவ்வறைகளில் வைத்தே அதனைச் செயல்படுத்த வேண்டும். தூக்குத் தண்டனை எப்பொழுதும் பொழுது புலர்ந்த பின்னரே செயல்படுத்தப்படும். அப்போது சிறைக் கண்காணிப்பாளரும், மருத்துவ அதிகாரியும், குற்ற வழக்கு நீதிமன்ற நடுவர் (Magistrate) அல்லது சென்னை மையச் சிறைச் சாலையின் காவல்துறை ஆணையாளர் உடனிருக்க வேண்டும். ஒருவரைத் தூக்கிலிடும் போது அவரது நெருங்கிய உறவினர்களோ அல்லது நண்பர்களோ, அதனைப் பார்ப்பதற்கு சிறைக்கண்காணிப்பாளர் வாய்ப்பளிக்கலாம் எக்காரணத்தை முன்னிட்டும் பதினாறு வயதுக்குட்பட்டவரை விடக்கூடாது. மேலும் வாய்ப்புப் பெறுவோர் எண்ணிக்கை பன்னிரண்டுக்கு மேல் இருக்கக்கூடாது.

தூக்குத் தண்டனையை நிறைவேற்ற ஒவ்வொரு மையச் சிறைச் சாலையிலும் அதற்கென அமைக்கப்பட்டிருக்கும் மேடையைத் தூக்கிலிடுவதற்கு முதல்நாள் எவ்வாறு செயல்படுகிறது என்பதைத் தொடர்புடைய அதிகாரிகள் நன்கு கவனித்துக் கொள்ள வேண்டும். எப்பொழுதும் அம்மேடையானது ஆயத்த நிலையில் இருக்கவேண்டும். தூக்கிலிடுவதற்கான 25 மி. மீ. குறுக்களவுள்ள ''மணிலாக் கயிறு'' ஒவ்வொரு சிறைச் சாலையிலும் பாதுகாப்பாக வைக்கப்பட்டிருக்கும். தூக்கிலிடுவதற்கு முதல் நாள், தூக்கிலிடுபவரின் எடையைத் தெரிந்து கொண்டு அவ்வெடைக்கு ஒன்றரை மடங்கு உள்ள எடையினை அக்கயிற்றில் கட்டித் தொங்க விட்டுப் பார்ப்பர். இதிலிருந்து கயிற்றின் திறனையும் வன்மையையும் தெரிந்து கொள்வர். தூக்கிலிடுபவரின் எடையும் அவர் வீழ்த்தப்பட வேண்டிய அளவு வீதமும் தரப்பட்டுள்ளன. தூக்கில் தொங்குபவருடைய கால்கள் எக்காரணத்தை முன்னிட்டும் தரையைத் தொடக்கூடாது.

| | | | |
|---|---|---|---|
| எடை 41·452 கி. கிராம் வரை | . | | 198 செ. மீ |
| எடை 57·15 | ... | -- | 183 செ. மீ |
| எடை 69·853 | --- | ... | 168 செ. மீ |
| எடை 69·858 கி. கி. மேற்பட்டிருந்தால் | | | 152 செ. மீ |

தண்டனை நிறைவேற்றப்படுமுன் அவரது கைகளை முதுகுப்புறமாக சேர்த்துக்கட்டி, இரு கணுக் கால்களையும் சேர்த்துப் பிணைத்து கட்டிவிட வேண்டும். ஒரு கருப்புத் துணியால் முகத்தை மூடிவிட வேண்டும். மூக்குத் துளைக்கு மட்டும் அத்துணியில் ஒரு துளை அதிலிருக்க வேண்டும். தூக்குத் தண்டனை நிறைவேற்றப்படுமுன் அவரது உடல் அடையாளங்களைக் கண்டு தெரிந்து கொண்டு தூக்கிலிடுபவர் அவர்தானா என்பதை உறுதி செய்து கொள்ளவேண்டும்.

தூக்குமேடையில் அவரை நிறுத்தி கழுத்தினைச் சுற்றிக் கயிற்றினைச் சுருக்குப் போட்டு முடிச்சானது வலப்புறம் அல்லது இடப்புறமாக இருக்கச் செய்து விசையைஅழுத்துவதன் மூலம்தூக்கு மேடைப் பலகையானது கீழ்விழுந்து தொங்கிவிடும் உடல் பளுவால் கழுத்தில் சுருக்கு விழுந்து தூக்கிலிடப்பட்டவர் உடல்

தரையிலிருந்து ஏறத்தாழ ஏழு அடி உயரத்தில் தொங்கும். ஏறத்தாழ 30 மணித்துளிகள் தொங்கியபின் மருத்துவர் அவரது உடலை பரிசோதனைசெய்து அவரது உடலில் முற்றிலும் உயிர்பிரிந்துவிட்டது என்று சான்றிதழ் வழங்கியபின் அந்த உடலினை கீழே இறக்க வேண்டும். தூக்கிலிடப்பட்டவரின் நெருங்கிய உறவினர்களோ அல்லது நண்பர்களோ இறந்தவருடைய உடலைக் கேட்கும்போது, அதன் பிற்பட்ட நிலையில் பாதகமான சூழ்நிலைகள் எதுவும் நேரிடாது என சிறைக் கண்காணிப்பாளர் முழு மன நிறைவு அடைந்தால் அவ்வுடலை உறவினர்களிடம் ஒப்படைக்கலாம். தனக்கு முழு நிறைவு ஏற்படவில்லையென்றால், அவ்வுடலைச் சிறைச்சாலையில் புதை குழிக்கென ஒதுக்கப்பட்ட இடத்தில் புதைப்பதற்கு முழு அதிகாரமுண்டு.

இவ்வாறு ஒருவரை தூக்கிலிட்டபின் இந்நிகழ்ச்சி செயல்படுத்தப்பட்டது குறித்து அக்கட்டளை பிறப்பித்த மாவட்ட நீதிமன்ற நடுவருக்கும், மாநிலச் சிறைச்சாலை உயர் அதிகாரிகளுக்கும் தொலைவரி (Telegram) மூலம் தகவல் தெரிவிக்க வேண்டும்.

சட்டத்தின் அடிப்படையில் தூக்கிலிடப்பட்டவர்களைப் பிணக்கூறு ஆய்வு மேற்கொண்டால், தற்கொலை, தற்செயலால் தூக்கிலிட்டு தொங்கப்படும் பிணத்தில் காணும் குறி குணங்களிலிருந்து சில முக்கிய மாறுபாடுகளைக் காணலாம். வெளித் தோற்றத்தில் கயிற்றின் முடிச்சானதுசெவிமடலின் கீழ் உள்ள தாடைக்கு வலம் அல்லது இடப் புறத்தில் காணப்படும். மேலும் தூக்கு மேடை திடீரென விசையால் கீழ் தள்ளப்படுவதால் தூக்கிலிடுபவனின் பாரமானது கீழ் நோக்கி வேகமாக இழுப்பதால் உயிர்ப்பு தடை (Asphyxia) ஏற்பட்டு உயிரிழப்பு நிகழும். கழுத்தில் கயிற்றின் பதிவு, சிராய்ப்புகள் காணப்பட்டால், நாக்கு வெளித்தள்ளல், வாயில் உமிழ்நீர் வடிதல் போன்றன வெளித் தோற்றத்தில் காணப்படும். தூக்கிலிடப்படுவதால் உடலின் பளுவானது கீழ் நோக்கி வேகமாகத் தள்ளப்படுவதால் முள்ளந்தண்டின் கழுத்துப் பகுதி 3 ஆவது, 4 ஆவது என்புகளின் முறிவு ஏற்படும். இவ்வாறு என்புகளின் முறிவு ஏற்படும் போது முள்ளந்தண்டின் உட்புறம் செல்கின்ற தண்டுவடமானது பாதிக்கப்பட்டு, இறப்பு உடனே ஏற்படும். மூன்றாவது நான்காவது முள்ளந்தண்டு எலும்புகளில் முறிவு காணப்படவில்லையானால் நிச்சயம் அவ் எலும்புகளின் இடப்பெயர்ச்சி ஏற்பட்டு அதன் தொடர்பாக உயிரிழப்பு நிகழும். இது தவிர கழுத்தானது இறுக்கப்படுவதால் ''கரோதித்து நாடியின்'' (Carotid artery) சுவரானது பாதிக்கப்பட்டுக் கிழிவுடன் காணப்படும், மேலும் உயிர்ப்புத் தடையில் (Asphyxial death) காணப்படும் ஏனைய அனைத்துக் குறிகுணங்களும் காணப்படும்.

அமெரிக்கா போன்ற மேல்நாடுகளில் தூக்குத் தண்டனை விதிக்கப் பட்டவனை தூக்கிலிடாமல் மின்சாரத்தை அவன் மீது பாயச்செய்து உயிரிழப்பு நிகழ்த்துகின்றனர். தண்டனை நிறைவேற்றுபவரை அதற்கென அமைக்கப்பட்ட நாற்காலியில் உட்கார வைத்துக் கட்டிவிடுவர். பின் ஏறத்தாழ 1800 ஓல்ட் 7 ஆம்பியர் வேகத்துடன் செல்லும் உயர்மின் அழுத்தத்தை ஏறத்தாழ ஒரு மணித்துளி அளவில் உடலில் செலுத்துவர். இவ்வாறு செலுத்துவதால்உயிரிழப்பு நிகழும் இப்படி செய்வதால் எவ்வகைச் சிக்கலுமின்றி மிக விரைவில் உயிர் பிரிந்துவிடும். அமெரிக்காவில் இம்முறையே தற்போது நடைமுறையிலுள்ளது, இதனை ''மின் அழுத்தச் சாவுத் தண்டனை'' [''Judicial Electrocution''] என்பர்.



# சூரியா வர்த்தம்

மருத்துவர்; கு. பரமேஸ்வரன் B.I.M.

உறைவிட மருத்துவ அலுவலர், விரிவுரையாளர்,

துறைத்தலைவர் - மருத்துவம் பொதுவும், சிறப்பும்.



**வேறு பெயர்:** எழுஞாயிறு

**இயல்:**

வாதம் அதிகரிப்பதால், சூரிய உதய காலம் முதல் மறையும் காலம் வரை தலை வலியைக் கொடுக்கும் நோய்.

**நோய் வரக்காரணங்கள்:**

பொதுவில் இது வாத நோய் எண்பதிற்குள் ஒன்ருக இருப்பதால், அந்நோய் வருவதற்குரிய காரணங்களேயே இதற்கும் கொள்ளலாம். துவர்ப்புச் சுவையுள்ள பொருள்கள் உருளைக்கிழங்கு, வாழைக்காய் போன்ற கிழங்கு காய்களை உண்ணல், பயறு வகைகளில் துவரம்பருப்பு, பச்சைப்பருப்பு நீங்கலாக மொச்சை, காராமணி, கடலைப் பருப்பு போன்றவற்றை உண்ணல், ஆகிய காரணங்களால் வாயு பெருகி வாதம் மிகுதிப்பட்டு இந்நோய் வரும். மேலும் இந்நோய் எல்லோருக்கும் வருவதில்லை. அதுவும் குறிப்பாக பகற்பொழுதிலேயே வருகிறது. ஆகையால் அண்டத்தில் ஏற்படும் மாற்றங்கள் நம் உடலிலும் ஏற்பட்டு அதனுல் சில நோய்கள் வரும் என்ற சித்தர்களின் கருத்துக்கு ஏற்ப சிலருக்கு, சில பருவ காலங்களில், வாதம் அதிகரித்த நிலையில், சூரியஒளி ஒவ்வாமையாகி, அதனுல் இந்நோய் வரக்கூடும் என்றும் கொள்ளலாம். அண்ட மாறுபாட்டால், குற்றங்கள் விகற்பப்பட்டு, சில பருவ காலங்களில், சிலருக்கு நோய்கள் வருகின்றன என்பதற்கு உதாரணமாக இங்கு அம்மை நோய், ஊழிநோய் (வாந்திபேதி) பக்கமந்தாரகாசம் போன்ற நோய்களைக் குறிக்கலாம். இது போக புலிப்பாணி முனிவர் 500-என்ற நூலில் இன்னின்ன நட்சத்திரத்தில் சுரம் வந்தால், இத்தனை நாட்களில் தீரும், அல்லது கொல்லும் என்பது போன்ற கருத்துக்கள் மிகுதியும் காணப்படுகின்றன. எனவே மேற்கூறப்பட்ட காரணத்தையும் ஏற்புடையதாகக் கொள்ளலாம்.

**குறிப்பு:**

இந்நோயை ஆங்கில மருத்துவ முறையில் சொல்லப்படுகின்ற "MIGRAINE" என்ற நோய்க்கு ஒப்பிடலாம். 'Migraine' என்ற நோயில் காணப்படுகின்ற குறிகுணங்கள் ஏறக்குறைய சூரியா வர்த்த நோயில் காணப்படுகின்ற குறிகுணங்களை ஒத்ததாக இருக்கின்றன. PRICES TEXT BOOK of THE PRACTICE OF MEDICINE என்றநூலில் MIGRAINE-க்கு Definition சொல்லும் போது

"A common malady of which the only essential characteristic is recurring intense headaches which usually develop on walking in the morning and which, while often unlateral, may be bifrontal, occipital or general" என்று கூறப்பட்டுள்ளது. இந்நோய் வரக் காரணம் (Aetiology) கூறும் பகுதியில் "Nothing is known with certanity as to the essential cause of migraine, numorous factor, such as errors of refraction, disorders of digestion and of endocrine function and psychological disturbances have all been evoked as res ponsible causes but it is probable that at most they are never more than precipitating factors in susceptible individuals. There is considerable indirect evidence that the immediate cause of the attack is a peroxysmal variation in the calibre of the cerabral blood vessels

either spasom or diletation or the one followed by the other, but proof is at present lacking.

ஆங்கில மருத்துவ முறையில் தலைவலியைப்பற்றி Micraine என்று சொல்லப்படும் ஒரு நோய்தான் குறிக்கப்பட்டுள்ளதாகத் தெரிகிறது. ஆனல் சித்த மருத்துவ நூல்களில் தலைவலியைப் பற்றியே, வாதநோய் எண்பதின்கீழ், சிலேத்துமத் தலை நோக்காடு, சன்னிவாதத் தலைநோக்காடு, இரத்தபித்த தலை நோக்காடு, கிருமி தலை நோக்காடு, சூரியாவர்த்தம், சந்திராவர்த்தம் ஒரு தலைவலினை ஏழு வகை கூறப்பட்டுள்ளது. இவை எல்லாவற்றிலும் காணும் குறி குணங்கள் அனைத்தும் 'Migraine' என்று சொல்லப்படும் நோயில் காணும் குறிகுணங்களை ஒக்கும்.

குறிகுணங்கள்:

''கந்தமாம் வலப்பக்க மிடப்பக்க மாதல்
கண்ணடியும் மூக்கடியும் புருவம்பற்றி
புந்தமாம் புருவத்தினு லூசி
குற்றல்போல் வலிக்குங்
கண்தானும் சுருங்கிக் காணும்
பந்தமா முடம்பெங்கும் பாரமாகும்
பகற்போது தாழ்த்தவுடனே மட்டாம்
துந்தமாந் துந்துமிபோல்
வலியுண்டாகும்
சூரியாவர்த்தத்தின் சுருபமாமே.''

நெற்றியின் வல இடப்பக்கங்கங்கள், கண்ணின் அடி, மூக்கின் அடி, புருவம் ஆகிய இடங்களில் குத்தல், வலி தாங்க முடியாமையால் கண் சுருங்கிக் காணுதல், உடல் பாரமாய்த் தோன்றல் போன்ற குறிகுணங்கள் காணும். இக்குறிகுணங்கள் சூரியன் உதயம் ஆகின்ற காலையிலே தொடங்கி, பகலெல்லாம் இருந்து சூரியன் மறைந்தவுடன் குறைந்துவிடும். காலையில் சூரியன் எழுகின்றபோது தலைவலி தொடங்குவதாலேயே இதை எழு ஞாயிறு என்று கூறலாயினர்.

மருத்துவம்:

இது எண்பது வகை வாத நோய்களில் ஒன்றுனதால், வாதத்தை தன்னிலைப்படுத்த, நோய் நிலையும், நோயாளியின் நிலையும் அறிந்து பருவகாலத்திற்கேற்ற கழிச்சல் மருந்தைக் கொடுக்க வேணடும். அம்மருந்து நோயாளி ஏற்றுக் கொள்ளுகின்ற வகையில், தைலமாகவோ, மாத்திரையாகவோ, மெழுகாகவோ அல்லது குடிநீராகவோ இருக்கவேண்டும். கழிச்சலுக்குக் கொடுத்தபின் இதற்கு நேர்மருந்தான கௌரிசிந்தாமணி செந்தூரம் ஒரு அரிசி எடையுடன் திரிகடுகு சூரணம் ஐந்து அரிசி எடை சேர்த்து தேனில் கலந்து ஒரு நாளைக்கு இரண்டு அல்லது மூன்று முறை கொடுத்துவர வேண்டும். கௌரி சிந்தாமணி செந்தூரத்துக்கு பதிலாக சண்டமாருதச் செந்தூரம் அல்லது அயவீரச்செந்தூரம் அல்லது சிவனுர் அமிர்தம் போன்ற மருந்துகளையும் வழங்கலாம். தேரையர் தைல வர்க்கத்தில் கூறப்பட்டுள்ள முறைப்படி தயாரிக்கப்பட்ட அரக்குத் தைலத்தை, வாரம் ஒருமுறை, அல்லது இரு முறை தேய்த்து, வெந்நீரில் குளித்து வரவேண்டும். மேற்குறித்த மருந்துகளை வழங்கிவர சூரியாவர்த்த நோயில் காணும் குறிகுணங்கள் குறைந்து நாளடைவில் நோய் பூரண குணமடையும்.

---

## உரிமை

''உரிமை இன்றேல், மூளை ஒரு குகையாகிவிடும்; அங்கே கட்டுண்ட கருத்துக்கள், திறக்கமுடியாத வாயிலில் மோதி மோதி மடிந்து போகும்.'' – இங்கர்சால்



# குழந்தை உணவும் பேணும் முறையும்

டாக்டர். K. வைத்தீஸ்வரன் M.D. (Siddha)
தலைவர், குணபாடம் துறை.

குழந்தைச் செல்வங்களே ஒரு நாட்டின் எதிர் காலத்தை காக்கும் சந்ததிகள் என்றால் மிகையாகாது. குழந்தைகளின் உணவு சரியாக அமையப் பெறாவிடில் அதன் உடல் வளர்ச்சி பாதிக்கப் படுவதோடு அறிவு வளர்ச்சியும் பெரிதும் பாதிக்கப்படும். மேலும் உணவைச் சரிவர அமைத்துப் பேணி பாது காக்காத நிலையில் பல தொடர்ந்த நோய்களும் வருவதற்கு வழி வகுத்துவிடும். இதனை நன்குணர்ந்து நமது இந்திய அரசு மதிய உணவு திட்டத்தின் மூலமாகவும், பல சமூக சேவை நிலையங்கள் மூலமாகவும், உலகச் சுகாதார நிறுவனத்தின் (W.H.O.) மூலமாகவும் பணியாற்றி வருகின்றது.

குழந்தைகள் வயது வந்தவரிடமிருந்து பல நிலைகளில் வேறுபட்டுக் காணப்படுகிறது. உதாரணமாக அதன் வளர்ச்சி வேகத்திலும் உடலின் செயல் தன்மையிலும் மாறுபட்டுக் காணப்படுகிறது. இந்த மாறுபாட்டின் அடிப்படையில் குழந்தையின் உணவும் சக்தியை அளிக்க வல்லதாகவும், வளர்ச்சிக்கு உதவுவதாகவும் இருத்தல் வேண்டும். முக்கியமாக உணவில் நீர், புரதம், கொழுப்பு மாவுபொருள் இடம் பெறல் வேண்டும், சில அடிப்படை குறிக்கோள்களைக் கொண்டதாக உள்ள குழந்தைகள் உணவும், பேணி பாதுகாத்தல் முறைகளும் எதிர் நோக்கும் இலட்சியத்தை அடைய எளிதாகும். அவையாவன

I. குழந்தைகளுக்கும், பாலர்களுக்கும் சாதாரண சூழ்நிலையும் வளர்ச்சிக்கு உதவ கூடிய வகையில் அமைதல் வேண்டும்

II. உணவு மேற்கூறியவர்களுக்குப் போதிய அளவு வெப்பத்தை அளிக்க கூடியதாகவும் (calorie), நீர்த்துவம் கூடியதாகவும், புரதம், வைட்டமின், மற்றும் உலோக உப்பு சத்துக்கள் நிறைந்ததாகவும் இருத்தல் அவசியம். மேலும் இவ்வுணவு குழந்தைகள் விரும்பி உண்ணும் வகையில் சுவையாகவும், நல்ல நிறமுள்ளதாகவும் இருத்தல் வேண்டும்

III. கட்டுப்பாடான அதே நேரத்தில் சீரான உணவுப் பழக்கத்தைக் குழந்தைகளுக்கும், பாலர்களுக்கும் சொல்லித்தரல் வேண்டும். இப்பழக்கம் வளர்ந்து பெரியவர்கள் ஆனாலும் சீரணக்கோளாறும், அதன் தொடர்பான நோய் நிலைகளும் வராமல் தடுக்கப்படும். கட்டுப்பாடான, சீரான உணவுத் திட்டம் இயல்பான நிலையிலுள்ள குழந்தைகளுக்கு எவ்வளவு முக்கியம் வாய்ந்ததோ அதே அளவு நோய் நிலையிலுள்ள குழந்தைகட்கும் அவசியமாகிறது.

IV. கர்ப்பிணிகளுக்கு தகுந்த போஷாக்கு அளித்தல்நல்லது. ஆரோக்கியமான தாய்மார்களுக்கு பிறக்கும் குழந்தைகள் ஆரோக்கியத்துடன் சீரான வளர்ச்சியுடையதாகவும் இருக்கும். அடுத்தடுத்து சிறிய கால இடைவெளியில் பல குழந்தைகளைப் பெற்றெடுத்த தாயும், குழந்தையும் வன்மையின்றிக் காணப்படுவதால், அதன் சீரான வளர்ச்சிக்குப் பெரு முயற்சியும் அவசியமாகிறது.

V. உணவுப்பழக்கம், உணவின் அளவு, தரம் ஆகியவற்றை அடிக்கடி (சுமார் 6மாதத்துக்கு ஒருமுறையாவது) பரிசீலனை செய்தல். குழந்தை பிறந்தது முதல் 10வயதிற்குள் அதன் வளர்ச்சிக்கேற்ப அளவு. தரம் பல்வேறு விதமாகத் தேவைப்படுகிறது.

குழந்தைகட்கும், பாலர்கட்கும் வளர்ச்சி விகிதம், வயது, (SEX) பால் ஆகியவற்றிற்குத் தகுந்தாற் போல் உணவின் தேவை வேறு பாடு அடைகிறது, உணவில் கீழ்க்குறிப் பிடப் படும்தேவைகள் நிறைந்திருத்தல் அவசியம்.

1) நீர்
2) கலோரி வெப்பம்
3) மாவுப் பொருள் (carbo hydrates)
4) புரதம் (proteins)
5) கொழுப்பு
6) வைட்டமின், உலோக உப்பு சத்துக்கள் மற்றும் மனுேநிலை, சூழ்நிலைகள்.

நீர்:-

உடலின் அன்ருட வளர்ச்சிக்கு நீர் மிகவும் அவசியமாகிறது. தினம் உட்கொள்ளும் நீரின் அளவு வயதிற்குத் தகுந்தாற் போல் மாறுபாடு அடைகிறது அதாவது உட்கொள்ளும் தேவை நீரின் அளவு குழந்தை வளர வளரக் குறைகிறது. நீரின் தேவையை உடலின் நிறையையும் வயதையும் கொண்டு கணக்கிட்டுக் கூறலாம்.

| | | |
|---|---|---|
| 1 வயதிற்கு கீழ் | — சுமார் 150 மி.லிட்/ 1 கிலோ. | |
| 2½-5 வயதுவரை | — 100 மி.லிட் to 90 மி.லிட் | கிலோ |
| 5-12 வயது வரை | — 80 மி. லிட் to 70மி. லிட் | கிலோ |
| 12-18 வயதுவரை | — 60 மி. லிட் to 50 மி.லிட் | கிலோ |
| வயதுவந்தோர் | — சுமார் 50மி.லிட் | கிலோ |

மேலும் உட்கொள்ளும் உணவின் தன்மையை பொறுத்து நீரின் தேவை அதிகரிக்கும். புரதசத்து மிகவும் குறைவாகவும், உலோக உப்பு சத்துக்கள் உள்ள உணவால் நீர் குறைவாகச் செலவழிக்கப்படுறது (உ-ம்) தாய்ப்பால் புரதசத்து அதிகம் உள்ள உணவு நிலேகளில் நீரின் தேவை அதிகமாகிறது. தினம் சராசரியாக ஆரோக்கிய நிலேயில் இருக்கும் குழந்தைகளும், பாலரும் உட்கொள்ளும் நீரின் அளவு அவர்களது உடல் எடையில் 10 முதல் 20% ஆகும். இதுவே வயது வந்தோருக்கு 2 முதல் 5% ஆகும்

கலோரி வெப்பம்:-

குழந்தைகளும் பாலரும் அவரவர் உடல் நிறைக்கு தகுந்தாற் போல் சக்தி கலோரி வெப்பம் உடல் இயக்கத்திற் தேவைப்படுகின்றது உடலுக்கு தேவையான கலோரி வெப்பம் குழந்தையின் செயல்திறன் (Activity) பருவகாலம், உயரம், எடை, வளர்ச்சிவிகிதம் உணவுப்பழக்கம் ஆகியவற்றை பொறுத்து மாறுபடுகிறது. உதாரணமாக 5வயது நிரம்பிய 20 கிலோ எடையுள்ள குழந்தைக்கு சுமார் 1200 கலோரிவெப்பம் தேவைபடுறது. அதுவே 65 கிலோ எடையுள்ள வயது வந்த ஒருவருக்கு சுமார் 3000 கலோரி வெப்பம் தேவைப்படுகின்றது.

புரதம்:-

உடல் வளர்ச்சிக்குப் புரதம் இன்றியமையாதது. தினசரி நடை பெறும் உடல் வளர்சிதை மாற்றத்திற்கு 24 அமினே அமிலங்கள் மிகவும் உறுதுணேயாக உள்ளது. குழந்தைகட்கு வழங்கப்படும் உணவில் புரதச்சத்து முக்கியமாகப் பாலின் மூலமாகக் கிடைக்கின்றது. இது தவிர புரத சத்திற்கு முட்டை, வேகவைத்த இறைச்சி, மீன், பயறு வகைகள் விதைகள் ஆகியவைவழங்கலாம். கஇவைளில் மிக சிறந்ததாக கருதப்படுவது பாலேயாகும். காரணம் பாலில் புரத சத்து தவிர சுண்ண சத்து (Calcium), வைட்டமின் ஏ, பி. சத்துக்கள் உள்ளன. குறிப்பாக தாய்ப்பால் சிறப்புடையதாகும். இதில் காணப்படும் புரத சத்து 45% எளிதாக உட்கிரகிக்கப் படுகிறது. ஆனுல் பசுவின் பாலில் உள்ள புரதச் சத்து 20% உட்கிரகிக்கப்படுகிறது. தாய்பால் அருந்தும் குழந்தைக்கு தினம் 2 முதல் 2.5 கிராம் புரதச் சத்து/கிலோ உடல் நிறைக்கு கிடைக்கிறது. பசும் பால் அருந்தும் குழந்தைகட்கு தினம் 3முதல் 4கிராம்/ கிலோ உடல் நிறைக்கு கிடைக்கிறது. மிருகங்களின் பாலில் தாய்ப்பாலே விட புரத சத்து அதிகம் காணப்படுகிறது; பசும் பாலில் 3.5% ஆட்டுப் பாலில் 7% காணப்படுகிறது.

தற்பொழுது தாய்ப்பால் வழங்க இயலாத சூழ்நிலேகளுக்கும், தாய்ப்பால் ஒவ்வாத நிலேயிலும், தாய்க்கு பிள்ளே பேற்றுக்கு பிறகு பால் சுரக்காத நிலேயிலும் தாய்ப்பாலுக்கு இணேயாக உள்ள பால் பவுடர்கள் கிடைக்

ின்றன்றன. இம்மாதிரி நிலைகளில் பச்சை வேர்க்கடலையை அரைத்து பாலெடுத்து தகுந்த அளவு நீர் சேர்த்து வழங்கலாம். இதிலும் புரதச் சத்து தாய்ப் பாலைவிட அதிக விழுக்காடு உள்ளது. மேலும் சோயா விதை யினின்று தயாரிக்கப்படும் பாலை குழந்தை கட்கு வழங்குவதற்கு இந்திய விவசாய ஆராய்ச்சி நிறுவனம் சிபாரிசு செய்கின்றது. குழந்தைகட்கும், பாலர்கட்கும் எளிதில் செரிக்கக் கூடியதாகவும், தாய்ப்பாலைவிட அதிக விழுக்காடு புரதச் சத்து உள்ளதாகவும் அமைந்துள்ளது.

மாவுப் பொருள் (Carbo hydrates):-

உடல்இயக்கசக்திக்கு மாவுப்பொருள்கள் நமது உணவில் இன்றியமையாமையாகிறது. மாவுப் பொருட்கள் என்ற வரிசையில் உண வில் அரிசி, கிழங்கு, மாவு, வெல்லம், பளுப்பு சருக்கரை, மற்றும் தேன் ஆகியவற்றைக் கூற லாம். சீரண பக்குவ நிலையில் நமது தேவைக்கு மேலுள்ள மாவுப் பொருட்கள் கிளைகோஜனுக (Gly cogen) மாற்றப்பட்டு ஈரலில் சேமித்து வைக்கப்படுகின்றது. ஆனுல் குழந்தைகளின் உடலில் சருக்கரை சத்து மிகவும் குறைவாக சேமித்து வைக்கப் படுகின்றது. குழந்தைக ளுக்கும், பாலருக்கும் புரதசத்துமுழு அளவில் பயன்பட மாவுப் பொருட்கள் பயன் படுகிறது

கொழுப்பு:- (Fats)

உணவில் சக்தியை அளிக்க வல்லது, மாவுப் பொருள்களுக்கு அடுத்து இன்றியமை யாதது கொழுப்பு ஆகும். மேலும் கொழுப்பு குழந்தைகட்கு குளிரினின்று உடலை பாது காக்கவும் உதவுகிறது. கொழுப்பில் காணப் படும் வைட்டமின் 'எப்' என்பது தோலில் ஏற்படும் வரட்சி, பிளவு, ஆகியவற்றை வரா மல் தடுக்கிறது. தாய்ப்பாலில்காணப்படும்90 முதல் 95% கொழுப்பு எளிதில் செரிக்கும் தன்மையுடையதாக உள்ளது. பசும் பாலில் உள்ள கொழுப்பு சத்து 80 முதல் 85% செரி மனமாகிறது.

தாய்ப்பால் அருந்தும் குழந்தைகளுக்கு தினம் சுமார் 5 முதல் 6 கிராம்/ கிலோ உடல் எடை அளவு கொழுப்பு தேவைப்படுகிறது. தாய்ப்பால்தவிர மற்ற பால் அருந்தும் குழந் தைகளுக்கு தினம் சுமார் 4 முதல் 5 கிராம்/ கிலோ உடல்எடை அளவுகொழுப்பு தேவைப் படுகின்றது. 1 முதல் 3 வயது வரை தினம் 4 முதல் 3.5 கிராம்/ கிலோ உடல் எடை அள வும்; 3 முதல் 7 வயது வரை தினம் 3 முதல் 2.5 கிராம்/ கிலோ உடல் எடை அளவும்; 7 வயதிக்கு மேல் 2.5 முதல் 2 கிராம்/ கிலோ உடல் எடை அளவும் தேவைப்படும்.

வைட்டமின், உலோக உப்பு சத்துக்கள்;-

உடலிலுள்ள பல்வேறு திசுக்களின் இயக்கத் திற்கு வைட்டமின், உலோக உப்பு சத்துக்கள் மிகவும் அவகியமாகிறது. வைட்டமின்களில் கொழுப்பில் கரையக் கூடிய ஏ, டி, இ, கே மற்றும் நீரில் கரையக் கூடிய பி, சி, உலோக உப்பு சத்துக்களில் இரும்பு சத்து, சுண்ணும்பு சத்து, அயோடின் போன்றவை மிகவும் அவ சியமாகிறது. உணவுப் பொருட்களில் முட் டை, பால், ஈரல், மாமிசம், கொட்டை வகைகள், பச்சை காய்கறிகள், கீரைவகைகள் ஆகியவற்றில் மேற்கூறப்பட்ட சத்துக்கள் காணப்படுகின்றன. தாய்ப்பாலை விட பசும் பாலில் சுண்ணும்பு சத்தும் பாஸ்பரஸ் போன்ற சத்தும் அதிகம் காணப்படுகிறது. காய் வகைகளை குழந்தையின் உணவில் சேர்க் கும் நிலையில் நன்கு வேக வைத்து பின் சேர்ப் பது நலம்.

மனோ நிலை, சூழ் நிலை:-

முன்பு கூறிய சீரான, கட்டுபாடான உணவுத்திட்டத்தின் மூலம் குழந்தையின் உணவு பழக்கத்தை நல்ல முறையில் பயிற்று விக்க முடியும். குடும்ப சூழ்நிலை, தாய் காட் டும் அன்பு,பெற்றோரின்அரவணைப்பு குழந்தை யின் மனநிலையை நல்ல நிலையில் வைக்க உத வும் மிகுந்த கண்டிப்பு,உணவுஉட்கொள்ளாத நிலையில் கட்டாயமாகத் திணித்தல், தண்டனை தருவதாகக் கூறி மிரட்டல், பேற்றோரிட மிருந்து பிரித்து வைத்தல் போன்ற நிலைகளில் குழந்தைகளின் மனோநிலையில் ஏற்படும் அதிர்ச்சி உணவு பழக்கத்தை மாறுபாடு அடையச் செய்யும். மேலும் சீரண உறுப்புக் கள் சரிவர நடைபெருமலும் தடையிருப்ப தாக கண்டறியப்பட்டுள்ளது ஆதலின் குழந் தைகட்கு உணவு வேளையில் கனிவுடன் பேசு தல், கதைகள் கூறல், இசை இவற்றின் மூலம் மனோநிலையை சரிவர இயக்க முடியும்.

முடிவு;-

இக்கட்டுரையில் உணவின் முக்கியத்து வத்தை அடிப்படையாகக் கொண்டே எழுதப் பட்டுள்ளது. ''மிகினும் குறையினும் நோய்'' நிலையை இங்கு கூறவில்லை-

# இரைப்பு நோய்
# (புப்புச இரைப்பு நோய்)
# மருத்துவம்

ஆராய்ச்சிக்குரிய ஒப்பு நோக்கு

டாக்டர் ஜி. கணபதி; எம்.டி. (சித்தா)
விரிவுரையாளர், பட்ட மேற்படிப்பு மருத்துவத்துறை -
தலைமை பொறுப்பு, இந்திய மருத்துவக் கல்லூரி.



நவீன மருத்துவத்துறையில் (Bronchial Asthma) எனப்படும் நோய், சித்தமருத்துவத்தில் இரைப்புநோய் அல்லது இழுப்பு அல்லது சுவாசகாசம் என்ற நோய் பிரிவில் அடங்குகிறது. மேலும் இந்நோய் சுவாச உறுப்புகளில் (RespiratorySystems) அசுகக் குழலின் (Bronchus) பாதிப்பால் வரக்கூடியதாகையால் அனைவரும் உணர்வதற்கு இலகுவாக புப்புச இரைப்பு என தனியாகவும் தெளிவு படுத்திக் கொள்ளலாம்.

அனைத்து நாடுகளிலும் இந்நோயினால் பாதிக்கப் பட்டவர்கள் மிகுந்தளவு இருப்பினும், முற்றிலும் குணமடையக் கூடிய அளவிற்கு நவீன மருத்துவத் துறை உட்பட மருத்துவம் தற்காலிகமானதாகவும் ஆராய்ச்சிக்குரிய சிறப்பு அம்சமாகவும் இருந்து வருகிறது. இந்நிலையில் சித்த மருத்துவத் துறையிலும் சித்தர்களால்கூறப்பட்ட சிறந்த மருத்துவம் இந்நோய்க்கு இருக்கலாம் என்ற நம்பிக்கையின் அடிப்படையில் பல ஆராய்ச்சிகள் நடைபெற்று வருவது இயற்கை.

நோய்க்குரிய மருத்துவமுறையும் (Line of treatment) மருத்துவமும் (Treatment) மருந்தின் வேலை செய்யும் விதமும் (Mode of action of the drug) பிரதானமாக நோயின் காரணத்தைப் பொறுத்து அமைகிறது. உதாரணமாக இந்நோயின் நிலை (Pathology) (1) அசுகக் குழல் சுருங்கு வதினாலும், (2)அசுகக் குழலில் ஏற்பட்ட தாபிதத்தினால் ஏற்படும் வீக்கத்தினால் அக்குழல் சுருங்கப் படுவதினாலும் (3) அக்குழல் புண்பட்ட நிலையில் கசியும் திடமானசளியின் காரணமாக சுருங்குவதினாலும் ஏற்படுகிறது. எனவே அசுகக் குழல் சுருக்கத்தை விரிவுபடுத்தி சுவாசத்தை இயற்கையானதாக்க, (1) சுவாசக் குழலை விரிவுபடித்தும் மருந்துகளையும் (Broncho dilators), தாபிதத்தையும் அதனால் ஏற்பட்ட வீக்கத்தையும் குறைக்க (2) ஆண்டி பயாடிக்கையும் (antibiotics) திடமான சளிகட்டைப் போக்க (3) கோழையகற்றி செய்கை (Stimulant expectorants) யுள்ள மருந்துகளையும் மற்றும் ஒவ்வாமை (Alergy) குணத்தைப் போக்க ஒவ்வாமை மாற்றும் மருந்துகளையும் (Antialergic, Anti Histamine) கொடுப்பது நவீனமருத்துவத் துறையில் உள்ள ஒரு பகுதி மருத்துவமாகும்.

சித்த மருத்துவப்படி வாதம், பித்தம், கபம் ஆகிய மூன்று உயிர்த்தாதுக்களில் கபமானது பல அகப்புறக்காரணங்களால் கேடடைந்து, மிகுதிப்பட்டு, எவ்வாறெனில் உணவுவகைகளில் மிகுதியும் ஐயத்தை (கபத்தை) உண்டாக்கக் கூடிய பொருள்களை உண்பதாலும், குளிர் காற்றிலிருத்தல், மலையில் வாழ்தல், பனியில் நடத்தல் முதலிய செயல்களாலும் ஆகும் இவ்வாறு கேடு அடைந்த கபம் வாதம் அல்லதுபித்தகுற்றத்தையேனும் அல்லது அவ்விரு குற்றங்களையேனும் தனக்குத் துணை கொண்டு, மூக்கு, தொண்டை,

நுரையீரல் இவ்விடங்களில் மிகுந்த குற்றத்தின் அளவாக நோயை உண்டாக்கும்.

மற்றும் இந்நோய் வருவதற்கு வாதக் குற்றமே காரணம் என ஆயுர்வேது நூலில் கூறப்படுகிறது. எவ்வாறெனில் மூச்சு உறுப்புகளின் வழியே காற்றனது இயற்கையாகச் செல்ல முடியாமல் தடைபடுவதால் ஆகும்.

சித்த மருத்துவத்தில் ஐயக்குற்றமே (கபம்) முதலானது எனக் கூறியது எவ்வாறெனில் கபமானது மூச்சு உறுப்புகளின் உள்ளிடங்களில் அடைத்துக் கொண்டு காற்றை இயற்கையாக செல்ல முடியாமல் தடுத்தலால் என்றறியலாம்.

வெளிப்படும் கோழையானது (சளி) நுரைத்து அளவில் மிகுந்து பளுவற்றுக் காணின் வாதக் குற்றம் எனலாம்

வெளுத்து கடினப்பட்டு, புலால் மணத்துடன் காணின் கபக் குற்றம் எனலாம்.

சீழ் கலந்தது போலும் மஞ்சள் நிறத்தோடும் காணிண் பித்தக் குற்றம் எனலாம்

எனவே மருத்துவ முறையில் பிரதானமாகக் கேடு அடைந்த கபக் குற்றத்தையும் அதனைத் தொடர்ந்து மற்றக் குற்றங்களையும் தன்னிலைப் படுத்துவதற்கானமருத்துவம்செய்வித்தல் சிறந்ததாகும்.

இவற்றுள் மலத்தைக் கழிக்க தேகநிலைக் குத்தகுந்தாற்போலும் பருவகாலங்களுக்குத் தகுந்தாற்போலும் குடிநீர் வகை அல்லது மாத்திரை அல்லது எண்ணெய் வகைகளை வழங்கலாம்

1. குடிநீர்:- பித்த தேகி & பித்த காலம்

| | |
|---|---|
| மூக்கிரட்டை வேர்<br>காக்கட்டான்வேர்<br>சிவதை வேர்<br>நிலவாகை இலை | வகைக்கு 10 கிராம்<br>2 லிட்டர் தண்ணீர்<br>விட்டு 250 மில்லி<br>லிட்ட ராகக் குறைத்து |

155 மி.லி உள்ளுக்குக் கொடுக்கலாம்.

2. மாத்திரை:- கப தேகி & கபகாலம்.
சஞ்சீவி மத்திரை 1 அல்லது 2 உத்தாமணிச் சாற்றில் வழங்கலாம்.

3 தைலம்:- வாத தேகி & வாத காலம்.
மாந்தத் தைலம் [உத்தாமணித்தைலம்]
10 மி.லி. வழங்கலாம்

இதுவன்றி வெவ்வேறு நூல்களில் இரைப்பு நோய்க்கான மருத்துவம் அதிகளவு கூறப்பட்டிருப்பினும் நடைமுறையில் இருப்பவை மிகக் குறைவு, எனினும் அனைத்து மருந்துகளும் கபக் குற்றத்தைச் குறைக்கக் கூடிய வெப்ப வீரிய மருந்துகளாகவும், கோழையை அகற்றக் கூடிய கோழையகற்றி செய்கை உள்ள மருந்துகளாகவும் இருக்கின்றன.

இதன் நாடுவில் நவீன மருத்துவத்தில் (Mode of action of the drug) மருந்து வேலை செய்யும் விதம் கூறப்பட்டிருப்பதற்கு சித்தர் மருந்துகளை ஒப்பிட்டு பார்க்கும் போது (1) வெள்ளெருக்கன் பூ, மிளகு (வெப்ப வீரியம்) சேர்த்து செய்யப்பட்ட சுவாசக் குடோரி மாத்திரையில் அசுகக் குழலை விரிவடையச் செய்யும் தன்மையுடையதாகாக் கொள்ளலாம். (Broncho dilator) மற்றும் ஊமத்தை இலையை உலரவைத்து சுருட்டி புகைக்க இதே செயல் ஏற்படுகிறது. (2)வெப்ப வீரியமும், கோழை அகற்றி செய்கையும் உள்ள மருந்துகளான கஸ்தூரி கருப்பு, தாளகக் கருப்புகளையும், கடைச் சரக்குகளில் சிற்றரத்தை, திப்பிலி, கோஷ்டம், தாளிசபத்திரி, அதிமதுரம், அக்கராகாரம், கண்டுபாரங்கி, சுக்கு, மிளகு, மிளகு வேர், திப்பிலி வேர், ஆகியவை சேர்ந்த மருந்துகளையும், மூலிகை வகைகளுள், துளசி, கண்டங்கத்திரி, ஆடாதோடை, கஞ்சாங்கோரை, கரிசாலை, உத்தாமணி, தும்பை மணித்தக்காளி, ஆகியவைகளை கோழையகற்றி செய்கையுள்ள மருந்து வகைகளாக கொள்ளலாம் (3) தாபித்தைக் குறைக்கக்கூடியன வாக, பவளம், முத்து, வெள்ளி, முத்து சிப்பி, தங்கம் ஆகியவற்றினல் செய்யப்பட்ட மருந்துகளையும் கொள்ளலாம்.

இதுவன்றி கற்பூராதி தைலம் போன்ற உஷ்ண வீரிய முள்ள தைலங்களை மார்பு, முதுகு பகுதிகளில் தேய்த்து, தவிடு வறுத்து ஒற்றடம் கொடுக்க அது வெப்பத்தைக் கொடுப்பதினல் கோழை அகற்றிச் செய்

கையுள்ளதாகவும், அசுகக் குழலை விரிவடையச் செய்ய சக்தி வாய்ந்ததாகவும் கொள்ள வாய்ப்பு இருக்கிறது.

இதுவன்றி பிராணாயாமம் செய்வதினால் நாடி சுத்தியின் காரணமாக உள் மூச்சில் காற்றை 64 மாத்திரையளவு கும்பிக்கும் போது சுவாச உறுப்புகள் அனைத்தும் வலிமை பெறவும் தகுந்தளவு விரிவடையவும் வாய்ப்பாக அமைகிறது.

நஞ்சுத்தன்மையின் காரணமாகவும், ஒவ்வாமையின் காரணமாகவும் தோன்றும் இந் நோய் நிலையைப் போக்க, சிவனார் அமிர்தம், பலகறை பற்பம் ஆகிய மருந்துகள் கூறப் பட்டுள்ளன.

இது போன்ற மருந்துகளை நோயாளிகளுக்கு கொடுத்து பரிசோதனை செய்வது போல் (Clinical Trial) விலங்குகளுக் குரிய (Animal Experiments) அசுகக் குழலின் தன்மையை மருந்தைச் சேர்த்து பரிசோதனை பண்ணும்போது சிலநேரங்களில் மாறுபட்ட கருத்தை தெரியப் படுத்துகிறது. உதாரணமாக கண்டங்கத்திரியை பரிசோதனை செய்து பார்க்கும் போது இரைப்பு நோயாளிக்கு அரசுக் குழலை விரிவுபடுத்தக் கூடிய (Broncho Dilator) செய்கைஇருக்க வேண்டும். ஆனால் அது கோழையகற்றி செய்கையுள்ள மருந்தாக இருந்த போதிலும் அசுகக் குழலை சுருங்கச் செய்யக் கூடிய செய்கையே உள்ளது, (Broncho Constriction) என கண்டறியப் பட்டுள்ளது. இது மாறுபட்ட செய்கையாக இருந்தாலும் அதனுடன் மற்ற மருந்துகளும் சேர்த்து வழங்கப்படும் போது நோயாளி குணமடைவது தெரிய வருகிறது.

எனவே சித்த மருத்துவத்தில் கபக் குற்றத்தைப் போக்கக் கூடிய மருந்துகள் வழங்கப்பட வேண்டும் என கூறப்பட்டிருப் பதை நவீன மருத்துவ முறைப்படிக்கு மேற் கூறப்பட்டபடி மருத்துவத்தை பிரித்துஅறிய வாய்ப்பாக இருக்கிறது. இதனால் ஒவ்வொரு பிரிவின் கீழும் பிரதானமான மருந்தை தேர்வு செய்து, தற்காலத்தில் சிறப்பாக கூறப்படு கின்ற கூட்டு மருத்துவத்தைச் செய்து நோயாளியைப் பயனடையச் செய்யலாம்.

| உதாரணப் பட்டியல் | இரைப்பு நோய் மருத்துவம் |
|---|---|
| 1. சுவாசக் குடோரி மாத்திரை | அசுகக் குழல் விரிவடையச் செய்ய |
| (ஊமத்தை இலை புகைபிடித்தல்) | ,, ,, ,, |
| 2. சிவனார் அமிர்தம் | ஒவ்வாமை & நஞ்சுத் தன்மையைப் போக்க |
| 3. கஸ்தூரிக் கருப்பு, அல்லது தாளகக் கருப்பு, தாளிசாதிச் சூரணம் இல்லது கற்பூராதி சூரணம் | கோழையை அகற்ற |
| 4. தங்கம் அல்லது வெள்ளி அல்லது முத்து பற்பம் அல்லது பவளம் | தாபிதத்தைப் போக்க |
| 5. அரத்தைக் குடிநீர் | கோழையகல |
| 6. கற்பூராதித் தைலம் &தவிடு ஒற்றடம் | சுவாச உறுப்பு விரிவடைய & கோழையகற்ற |
| 7. பிராணாயாமம் & நாடிசுத்தி | சுவாச உறுப்பு விரிவடைந்து வன்மை பெற |

மேற்குறிப்பிட்டுள்ள மருத்துவத்தை பல புப்புச இரைப்பு நோயாளிகளுக்கு வழங்கிப் பார்த்ததில் அடிக்கடி பாதிக்கப் படும் நோயாளர்களுக்கு நோயின்று இருக்கும் இடைப் பட்ட நாட்கள் தள்ளிப் போடப்பட்டுள்ளது. பலருக்கு பல ஆண்டுகள் இடைவெளிக்குப் பின் திருப்ப வந்ததாகத் தெரிகிறது.

மேலும் இம் மருத்துவ முறையை நோயற்ற காலத்திலும் நோயினளவிற்குத் தகுந் தாற்போல் தொடர்ந்து மேற் கொள்வது நல்லது. மருந்து அருந்திவரும் காலத்து உணவு மற்றும் பழக்க வழக்கங்கள் நோயாளி உடல் நிலைக்கு ஏற்றுக் கொள்ளக் கூடியதாக இருத் தல் வேண்டும் குளிர்ந்தநீர்அல்லது பதார்த் தங்களையும் மாப்பண்டங்களையும், இனிப்பு வகைகளையும் ஐயக் குற்றத்தைக் கூட்டக் கூடியதாகையால் நீக்க வேண்டும். சூடான உணவுப் பண்டங்களையே உண்ணலாம்.

சுத்தமான காற்றுள்ள பகுதியில் இருக்க வேண்டும். தூசியுள்ள இடத்திலும், குளிர்ச் சியான அல்லது மிகுதியும் வெப்பமானஇடத்திலும் வசிக்கக் கூடாது. குளிர்ந்த நீரில் குளித்தல் அல்லது பனியில் படுத்தல் போன்றவை நீக்கப்பட வேண்டும்.



இந்திய மருத்துவ முறையில்

# நரம்பு மருத்துவத்திற்கும் வர்மத்திற்கும் உள்ள தொடர்பு

டாக்டர். S. ராசாமணி B. I. M.
உதவி மருத்துவ அதிகாரி

எல்லா நோய்களும் ஏதேனும் ஒருவகையில் நரம்பு மண்டலத் தொடர்புடையனவாகவே உள்ளது. நரம்பு மண்டலம் மிக நுட்பமானது. அதற்கு வரும் நோய்களைப் போக்கி சீர்படுத்துவது மிக மிகக் கடினம். பிறவற்றில் ஏற்படும் கோணல்களை சரிப்படுத்தலாம் நரம்பு கோணிடில் நாம் ஏதும் செய்தற்கியலாது. இது பற்றியே

"அரும்பு கோணிடில் அது மணம் குன்றுமோ
கரும்பு கோணிடில் கட்டியும் பாகுமாம்
இரும்புகோணிடில் யானையை வெல்லலாம்
நரம்பு கோணிடில் நாமதற்
கென்செய்வோம்"

எனும் பழம்பாடல் ஒன்றுஎழுந்தது போலும். இத்தகைய சிறப்புவாய்ந்த நரம்பு மண்டலம் வர்மத்தில் முக்கிய பங்கேற்கிறது. எங்ஙனம் எனில் வர்மம் எனப்படுவது பேசிகள், விசிகள் பொருத்துகள், நரம்புகள் இவை பின்னி பிணைந்து இருக்கக்கூடிய மர்மமான இடமே வர்மம் என்று சொல்லப்படும். வர்மம் ஒருவனுக்கு கொண்டதென்றால் அதில் முக்கியமாக பங்கேற்பது நரம்பே ஆகும். நரம்புகள் பின்னிப் பிணைந்து கிடக்கின்ற குறிப்பிட்ட இடத்தில் குறிப்பிட்ட மாத்திரையளவுக்கு அதிகமாக அடியோ, தட்டு தலோ, குத்து தலோ படு மாயின் உணர்விழப்பு, மயக்கம், செயலிழப்பு இவற்றில் ஏதேனும் ஒன்று நிகழலாம்.

நரம்பு மண்டலத்தின் தலைமை பீடம் மூளை, மூளையின் இருப்பிடம் தலை. "தலை" என்ற சொல்லுக்கு முதன்மை, சிறப்பு, உறுதி எனும் பொருட்களும் உள்ளன. எனவேதான் எண்சாண் உடம்பிற்கும் தலையே முதன்மை என்ற பழமொழியும் வழங்கலாயிற்று. மனிதனின் வாழ்விற்கும் தாழ்விற்கும் அறிவிற்கும் ஆற்றலுக்கும் புகழ்ச்சிக்கும் இகழ்ச்சிக்கும் அவனுடைய மூளையின் அமைப்பும் அதன் இயக்கமும் அது பெறும் நலம் அல்லது நோய் இன்னபிறவும் காரணங்களாக அமைகின்றன. பல ஆயிரம் கணிப்பான்கள் (Combuters) ஒன்று சேர்ந்தாலும் அவை மனித மூளைக்கு ஈடாக மாட்டா. இத்தகைய விந்தையான மூளையின் அமைப்பைப் பார்ப்போம்.

மூளையானது பெருமூளை (Cerebrum) மூளைத்தண்டு (Frain stem) சிறுமூளை (Cerebellum) மூளையின் தொடர்ச்சியாக முதுகின் நடுவே செல்லும் தண்டுவடம் (Spinai cord) ஆகியன. தண்டுவடத்திற்கு பாகாப்பாக முதுகெலும்பு தொடர் அமைந்துள்ளது. மூளையிலிருந்தும் தண்டுவடத்திலிருந்தும் நரம்புகள் வெளிச் செல்கின்றது தலைப்பகுதியில் பன்னிரு இணைநரம்புகள் உள்ளன அவை.

1. மோப்ப நரம்பு — Olfactory
2. பார்வை நரம்பு — optic
3. கண்அசைவு பெரு நரம்பு Occlomotor
4. கண் அசைவு சிறு நரம்பு — Trochlear
5. முக்கிளை நரம்பு -- Trigemnial
6. கண் அசைவு துணை நரம்பு — Abducent
7. முக நரம்பு — Facial
8. கேள்வி நரம்பு — Auditory
9. நாத் தொண்டை நரப்பு — Glosso pharyngea'

10. உதர நரம்பு — Vagus
11. தோளசைவு நரம்பு — Acessary
12. நாவசைவு நரம்பு — Hypoglossal

என்பன. தலைப்பகுதியில் காணும் பன்னிரு இணைநரம்புகளைப் போல் கண்டத்திற்கு மேல் 37 வர்மங்கள் உள்ளது. இதனை கீழ்கண்ட பாடல் விளக்கும்.

"கேளப்பா சிரசு நடுகொண்டைக்கொல்லி
கீர்த்தி பெற ஒட்டையின் கீழ் சீறுங்கொல்லி
நாளப்பா விரல் நாலே கிழே பிடரி காலம்
நாலிறை பதிமேல் முன் சருதி வர்மம்
பாளப்பா இரண்டிறைக் கீழ் பொச்சை
வர்மம்பகராத ஒரிறை வலமே குற்றிக் கலாம்
கேளப்பா செவிக்குற்றி காலஞ் சொல்வேன்
பிடரியின் மேலிறை நாலில் முடிச்சு வர்மம்
வர்மமெடா கதிர் போல பொய்கை காலம்
வளமான கண்ணின் கீழ் நட்சத்திரகாலம்
கற்பமெடா ரண்டிறைகீழ் காம்பூரி வர்மம்
கருதுமோரின்ற வலமே மூர்த்தி காலம்
தற்மமெடாஅரையிறைகீழ் அண்ணுங் காலம்
தக்கமூன் றின்ற வலமே வெட்டுவர்மம்
கபாலமென்றகருவிழி யருகில் மந்திரக்காலம்
வளமான நெற்றி நடு பச்சி வர்மம்
பால மென்ற அறையிறை கீழ் பால வர்மம்
பகர்ந்த இரண்டிறை வலமேல் நேத்திரவர்மம்
காலமென்ற மூன்றிறை கீழ் பொச்சைவர்மம்
கருதிநிறை கையருகில் மாகாரி வர்மம்
அடியான ஒட்டையின் கீழ் அடப்பனுகும்
அதனீரகச் சிறைக்குள் முன் முடிச்சி
படியான எட்டிறை சூழல் கண்கலங்கி
பாடுகிறேன் நல்லிருப்பு அமிர்தகாலம்
துடினயா ஒட்டையின் கீழடப்பு வர்மம்
துகையான அறுவிரல் உதிரக்காலம்
விடிவான முண்டிறுக்கி உறக்க காலம்
வளமான காக்கோட்டை சுமை வர்மம்

என்பன மேற்கண்ட வர்மங்களில் சில நரம்பு களுடன் தொடர்புடையன என்பதனை உதார ணங்களுடன் காண்போம்.

1. திலர்தகாலம்:- It is the region of the nasion of the skull at the middle of the bridge of the nose at the junction of frontal and nasal bones. The supratrochleas and infra frrochleas nerves are situated lose to this area.

திலர்தகாலத்தின் குறிகுணம்

"தானுன திலர்தவர்மம் கொண்டுதானுல் தயவான வாய்பிளந்து அண்ணுந்தே தான் வானுன தலைகுழைந்து வாய் பேசாது வரிசை யாய் அறிவிழந்து குழைந்து போம் தேனுக முறிந்திடிலோ மீளாதப்பா செப்புகிறேன் கடிகையிது மூன்றே மூக்கால் தானுக குணங் களை நீயறிந்து கொண்டு தயவான கைபாகம் நாடுவோயே"

2. மூர்த்திக்காலம்:- It is situated in three locations tip of the nose and the incisive fossae of the upper jcw. Labial branch of the infra orcital nerve is in this area.

மூர்த்தி காலத்தின் குறிகுணம்

"ஓரமன்ற மூர்த்தி வர்மம் கொண்டுதானுல் உத்தமனே செய்குணத்தை உரைக்கச்கேளு ஆமென்ற மண்டையிலே உளவு குத்து அறிவு கெட்டு மயங்கும் பாரே அதன் பின்னுல் வா மென்று முன் கூட்டி வலிக் குமப்பா வரிசை யாய் சிற்றரத்தை பொடித்துக் கொள்ளும் தேவமென்ற சிறுபுள்ளடி விட்டரைத்து பொத்ததிகையும்நாளட்டத்தில் தீரும்பாரே"

3. பொய்கை வர்மம்:- It is in front of the tragus of the ear. The auriculo temporal nerve emerges at this point from in side the parotid gland.

பொய்கைவர் மத்தின் குறிகுணம்

"மதியான பொய்கை வர்மம் கொண்டு தானுல் மைந்தனே செய்குணத்தை மட்ட மாய்க் கேளுசதியானகண்புகையையும் காய்ச் சலுண்டாம் சார் பொய்கைக் குற்றியே புரு வஞ்சேரும் குதியான வாய்மூக்கில் நீரொலிக் கும் கூறின தோர் குறிகளை நீகூர்ந்து பாரு சதியான நாழிகை தான் அறுபத்தொன்று தப்பாமல் கடகு மென்றுல் சார்ந்து செய்யே"

4. நெமவர்மம்:- It is in the middle of the Supra or bital margin. The supra orbital nerve and artery emerge from the orbif at this point.

நெமவர்மத்தின் குறிகுணம்

''ஒமென்ற நெமவர்மம் கொண்டுதானல் உத் தமனே செய்குணத்தை உரைக்கக் கேளு ஆமென்ற சுவாசமது சிதறிம் போகும் அப்ப னே உடல்சுருட்டு உடல்மாரட்டும் வாமென்ற மாத்திரை தான்மீறிக் கொண்டால் மருவியே சிலேற்பனம் தானுண்டாம் தோமென்று கடி கையது எட்டுக்குள்ளே திடமாக அடங்கல் பார்த்திளக்கிக் கொள்ளே''

மேற்கண்ட வர்மங்கள் ஒவ்வொன்றும் ஏதே னும் ஒருவகையில் நரம்புகளுடன் தொடர்பு கொண்டிருப்பதனை கண்டோம்.

இனி உடற் பகுதியில் கானும் முப்பத் தொரு இணைநரம்புகளையும் அதில் கானும் வர்மங்களையும், பாதிக்கப்படும் குறிக்குணங் களையும் காண்போம்.

மூளையிலிருந்து பன்னிரு இணை நரம்புகள் வெளி வருவதே போல தண்டுவடத்தில் முப் பத்தொரு இணை நரம்புகள் வெளி வருகின் றன. இவை முதுகெலும்பு தொடரிலுள்ள முள்ளெலும்புகட்கிடையே இடை வெளி வழியே வெளி வருகின்றன. கழுத்து பகுதி யிலிருந்து எட்டு இணை நரம்பு புறப்பட்டு கழுத்துக்கும் கைகளுக்கும்செல்கின்றன. முள் ளெலும்புகட்கிடையேயுள்ள குருத்தெலும்பு திட்டு (Intor vetiebral dise) அடிபட்டோ முதுமையின் விளைவாகவோ வெளித்துருத்தி (prolapse) இருநரம்புகளின் மீது அழுத்து வதால் தான் சிலருக்கு கழுத்திலும் கைகளி லும் தாள முடியாத வலியும் வலுக்குறைவும் ஏற்படுசின்றன. நெஞ்சுப்பகுதி யிலிருந்து பன்னிரு இணை நரம்புகள் புறப்பட்டு பெரும் பாலும் கால்களுக்கும்மலக்குடல், சிறுநீர்பை, பிறப்புறுப்புகள் முதலிய வற்றிற்கும் செல் கின்றன. கழுத்துப்பகுதியைப் போலவே இங்கும் குருத்தெலும்புவெளித்துருத்திநரம்பு களின் மீது அழுத்தினுல் முதுகிலும் கால்களி லும் வலியேற்படும். சிலருக்கு கால்களில் வலுக்குறைவும் சிறுநீர் மலம்கழிவதில் துன் பமும் இனப்புணர்ச்சி கொள்ளஇயலாமையும் ஏற்படுகின்றன. மேற்கண்ட குறிக்குணங்கள் முதுகெலும்பு தொடரில் கானும் வர்மங்களா லும் ஏற்படலாம். எடுத்துக்காட்டாக 1 வலம்புரி இடம்புரி வர்மம் 2. வெள்ளுறுமி, தள்ளுறுமி வர்மம்.

**வலம்புரி இடம்புரி வர்மம்:-** It is at the posterior superior iliac spine. It is at the dimple seen in the back above the gluteal regin. It is crossed by the bran ches of sacral nerves

வலம்புரி இடம்புரி வர்மத்தின் குறிகுணம்

''உன்னியே வலம்புரி கொ... டு தென்றல் உத்தமனே மலசலம் அடைத்துக் கொள்ளும் மன்னியே வயிறாதும் சுவாசமுட்டும் மைந் தனே கைகாலும் முதிர்ந்து போம் நன்னியே தான் நாழிகை தொன்னுறுகும் நாடியே செய்யாதே வித மிட்டால் பன்னியே குருப ரனை தியானம் செய்து பதருமல் செய்து விடு பறக்குந்தானே''

**2. வெள்ளுறுமி,தள்ளுறுமி காலம்:-** It is about 7.5. cms from the middle line at the level of the and lumbar vertebra. The kidney lie deep in this region and the ilo hypo qastric and ilio in guinal nerves cross behind the kidney at this level.

**வெள்ளுறுமி தள்ளுறுமி வர்த்தின் குறிகுணம்**

''பார்க்குமாந்த வெள்ளுறுமி கொண்டு தென்றல் பாடுகிறேன் செய்குணத்தை பரி ந்து கேளு தீர்க்கமாய் அடிவயிற்றில் தரிப் புண்டாகும் செப்புகிறேன் மதிமயங்கி நீர் தான் போகும் மயக்கமுண்டாகும் நீக்கமாய் பித்தனைபோல ஆடிநேரான சன்னியோடு சீதமுண்டாம் பார்க்கவே கடிகை பதினெட் டாகும் பாலகனேரம் பறிந்து பார்த்துச் செய்யே''

வெல்லுறுமி தல்லுறுமி வாதம் கொண்ட தால் ஏற்பட்ட வாத நோயாளி:



1ம் மாதம் படுத்த படுக்கையாக இருக்கும் காட்சி.



சிகிச்சை அளிக்கும் காட்சி

மேற் கண்டவர் மங்கள் குத்து, பெட்டு, துப்பாக்கி, அடிபோன்றவற்ருல் ஏற்படும். போர் சேராத பொழுது பொது வாழ்விலும் முதுகுத்தண்டு மறை? முகமுகமாக தாக்கப் படுகிறது. உயரத்திலிருந்து கீழே விழுதல், குனிந்து வேலே செய்யும் போது முதுகின் மீது பளுவான பொருட்கள் விழுதல் விரை வுவண் டிகளில் செல்லும்பொழுது திடீரென்றுவேகம் தடைப்பட்டால் கழுத்து பிசகுதல் போன்ற வற்ருலும் வர்மம் ஏற்படலாம். தண்டுவடத் தில் காணும் வெள்ளுறுமி, தள்ளுறுமிவலம் புரி, இடம்புரி வர்மம் கொண்டால் கால்கள் செயலற்று போதல், இனப்புணர்ச்சி கொள்

மூன்ருவது மாதம் பூரணசுகம் பெறும் காட்சி



ளகிலயலடைய நீர்சரிவர இறங்காமல் துள் துளியாக இறங்கல்- மலச்சிக்கல் ஆகிய குறி குணங்கள் ஏற்படும். இந்நிலேயை துவக்கத் திலேயே மருத்துவரிடம் காட்டி கண்டறிந்து மருத்துவம் செய்தால் இந்த இரங்கத்தக்க நிலே ஏற்படாது தடுக்கலாம். வர்மம்கொண்ட தனுல் ஏற்படும் இன்னல்களே வர்மஇளக்கு முறையும் தடவு முறையையும கைகொண்டு நோய் நீங்கச் செய்யலாம்.

---

## வாழும் வகை எது?

கலேயே!
நீ வாழும் இல்லம் எது?

புன்னகையில் மலரும் நீ
சினத்திலும் சிரிப்பது ஏனோ?
காமச் சுவையில் பொங்கும் நீ
கொலே வெறியிலும் தெரிவது ஏனோ?
இடை அசைவில் மின்னும் நீ
இடியின் ஓசையிலும் ஒளிர்வது ஏனோ?

கலேயே!
நீ வாழும் இல்லம் எது?

— மெரில்



# குடற் புண்ணுக்கு குறிப்பான மருந்து

ஆக்கியோன்:

டாக்டர். செ. பாலசுப்பிரமணியம் R.I.M.P.

மருந்து செய் நிலையம்.
அரசினர் இந்திய முறை மருத்துவக் கல்லூரி,
பாளையங்கோட்டை.

உலகெங்கிலும் உள்ள மருத்துவ முறை ஒவ்வொன்றிற்கும் ஒவ்வொறு தனிச் சிறப்பு உண்டு. நவீன அலோபதி மருத்துவம் அறுவை மருத்துவத்தில் பெரிய சாதனைகளைச் செய்துள்ளது. ஹோமியோபதி மருந்துகள் தவறாக ஆட்சி செய்தாலும் கெடுதல் விளைவிக்காதவை. அதே நேரத்தில் சரியாக கணித்து மருந்து கொடுத்தால் நோய்கள் நல்ல முறையில் தீரும்.

சித்த மருத்துவத்தைப் பொருத்த மட்டில் அறுவை சிகிட்சையினால் முழுவதும் குணப்படுத்த முடியாத நோய்களை மருந்துகளாலேயே குணப்படுத்த முடியும். அப்படிப் பட்ட நோய்களில் ஒன்று குடற் புண்ணாகும்

நவீன மருத்துவப்படி பெப்சின் (pepsin) என்ற அமிலம் அதிகம் சுறந்து வயிறு, குடல் இவற்றிலுள்ள சளிச் சவ்வுகளைத் தின்று, சளிச்சவ்வுகளுக்கு அடியிலுள்ள தந்துகிகளையும் (capillaries) அரித்து புண் உண்டாக்குகிறது.

இதனாலேயே இதற்கு பெப்டிக் அல்சர் (Peptic ulcer,) என்ற பொதுப் பெயர் உண்டாயிற்று. வயிற்றில்இருந்தால்கேஸ்டிக் அல்சர் (Gastric ulcer) குக்கிப்புண் என்றும் டியோடினம் (Duodenum) என்ற பகுதியில் வந்தால் டியேோடினல் அல்சர் (Duodena, ulcer) குடற் புண் என்றும் வழங்கப்படுகிறது பொதுவாக இரண்டையுமே நாம் குடற்புண் என்றே சொல்கிறோம்.

### நோய் வரும் காரணங்கள்

மனக்கவலை, காரம், புளிப்புள்ள உணவுகளை அதிகமாக புசித்தல், சாராயம் போன்ற மதுபான வகைகளை அதிகமாக உட்கொள்ளுவதால் இப்புண் வரலாம். மேலும் நேரம் தவறி உணவு அருந்தும் பழக்கம் உள்ளவர்களுக்கும் இப்புண்கள் வரலாம்.

இந்நோய்க்கு எங்கள்பரம்பரை வைத்திய முறைகளில் பயன்படுத்தப்பட்டு வந்த ஒரு சிறந்த மருந்தை இங்கே எழுதுகிறேன்

### மருந்து

நன்றாக மேல் தோல் சீவிய சுக்கு, மிளகு சீரகம், வசம்பு இவைகளைச் சம எடை எடுத்து வசம்பை சுட்டுஎரித்து சாம்பலாக்கிக் கொள்ள வேண்டும். பின்

1 மஞ்சட் கடுக்காய்த் தோல்,
2 தான்றிக்காய் தோல்
3 நெல்லி முள்ளி
4 கருஞ் சீரகம்
5 நற்சீரகம்
6 ஓமம்

மேற் கூறிய சரக்குகளை சம எடை எடுத்து நன்றாக சூரணித்து வைத்துக் கொள்ள வேண்டும். பின் தோல் உறித்து வெள்ளைப்பூண்டு சம எடை எடுத்து நன்றாக வெண்ணை போல் அரைத்து வைத்துக் கொள்ள வேண்டும் பின்

1 கல்லுப் புத்தூள்
2 இந்துப் புத்தூள்
3 சீனாக் காரத்தூள்,

இவைகளை சமன் எடை எடுத்துக் கொள்ள வேண்டும். பின்

1 துத்தம்
2 துருசு
3 கெந்தகம்

மூன்றையும் சுத்தி செய்து எடுத்துக் கொள்ள வேண்டும். பின்

காந்தச் செந்தூரம் சம எடை எடுத்துக் கொள்ள வேண்டும்

மேற்கண்ட சரக்குகள் ஊறும்அளவுக்கு எலுமிச்சம்பழச்சாறுவிட்டுஎல்லாவற்றையும் கல்வத்தில் போட்டு நன்றாக மயனமாக அரைத்து உலர்த்தி மீண்டும் நன்றாக அரைத்து துணியில் அரித்துக் கொள்ள வேண்டும்

குறிப்பு:- துரிசை கீழ்கண்ட முறையில் சுத்தி செய்து மருந்தில் சேர்ப்பதில் சிறந்ததாக கண்டறியப்பட்டுள்ளது.

**துருசு சுத்தி**

சுத்தமான நெய்யும், சுத்தமான தேனும் சமமாக கலந்து துருசுக்குத் தேவையான அளவு விட்டு மெழுகுபதமாக அரைத்து அரைத்த விழுதை ஒரு மூசையில் அடக்கி கரி நெருப்பில் வைத்து ஊத வேண்டும் நெய்யும் தேனும் வற்றி துருசு இறுகிய பின் மூசையை உடைத்து துருசை எடுத்து பாலில் கொஞ்சம் பழச்சாறு விட்டு அந்த பாலின் தெளிவு நீரை எடுத்து, அந்த நீரில் முன்பு எடுத்தத் துருசை மூன்று நாள் ஊற வைத்து உலர்த்தி எடுத்துக் கொள்ளவேண்டும்.

**மருந்தின் அளவு:**

*$1\frac{1}{2}$ கிராம் முதல் 3 கிராம் வரையில்.*

**நாள் அளவு**

நோயின் வன்மை, மென்மைக்கு ஏற்றவாறு 10 முதல் 15 நாட்கள்வரை.

**துணை மருந்து**

நெய், தேன், மோர், நீராகாரம்.

**பத்தியம்**

மோர்சாதம் மட்டும் சாப்பிட வேண்டும் மேற்கண்ட மருந்தைஎங்களுடைய பரம்பரை பரம்பரையாக குடற் புண் நோயாளிகளுக்கு கொடுத்ததில் முற்றிலும் நோய் நீங்கி சுகமடைந்துள்ளனர்.

---

**உண்மையான சோகம்**

குறிப்பிட்ட ஒரே திறமை மட்டும்தான் ஒருவரிடம் இருக்கிறது என்றால் அதற்காகக கவலைப்பட வேண்டியதில்லை. அந்த ஒரு திறமையையும் பயன்படுத்தாதவரின் வாழ்க்கை தான் உண்மையான சோகம்.

— W. வெரர்க்

# லேசர் (LASER)

பேராசிரியர் கு. குருமூர்த்தி M. A.

(இயற்பியல் துறை)

அறிவியலின் முன்னேற்றம் தான் உலகின் முன்னேற்றமாகி விட்டது. அறிவியல் துறையிலே சிறப்பாக எலெக்ட்ரானிய துறையிலே பல முன்னேற்றங்கள் ஏற்பட்டு வருகின்றன. இவற்றில் அறிவியல், தொழிலியல், செய்தித் தொடர்பியல். மருத்துவயியல் ஆகிய துறைகளில் பலபுரட்கிகளைச் சாதித்துள்ள லேசர் மிக முக்கியத்துவத்தைப் பெற்றுள்ளது. இதை இந்நூற்ருண்டின் வியக்கத்தகு கருவி எனக்கருதலாம்.

தூண்டப்பட்ட கதிர் வீச்சால் ஒளியைப் பெருக்குவதே லேசர் ஆகும். Light amplification By Stimulated Emission Of Radiation] இது பல எழுத்துக்களின் முதற் சொற்களைக் கொண்டு உருவாக்கப்பட்ட ஒரு புதிய சொல் எனக் கொள்ளலாம். 1960-ம் ஆண்டு ஹக்ஸ் ஆய்வகத்திலுள்ள மைமான் என்ற மேதை இதைக் கண்டுபித்தார்.

அணு அமைப்பின் குவான்டம் கொள்கையின் அடிப்படையிலேயே இது இயங்குகிறது. மின்காந்தப் புலத்திலுள்ள அணுக்கள் அல்லது மூலக்கூறுகள் ஆற்றலை உட்கவர்ந்து அடிமட்ட ஆற்றல் நிலையிலிருந்து உயர்மட்ட ஆற்றல் நிலைக்குத் தாவுகிறது. மிகக்குறுகிய காலத்திற்கே இவைகள் உயர் மட்ட ஆற்றல் நிலையில் இருக்கும் இவைகள் கிளர்ச்சியுற்ற நிலையில் இருப்பதாகக் கூறுகிரேும் கிளர்ச்சியுற்ற அணுக்கள் அடிமட்ட. ஆற்றல் நிலைக்கு வரும் பொழுது கதிர் வீச்சை உமிழ்கிறது. இதை புறத் தூண்டுதலற்ற வெளியீடு எனக் கூறுகிரேும், பொதுவாக இயல்பான வெப்ப நிலைகளில் அடிமட்ட நிலையில் அதிக அணுக்கள் உள்ளன ஆனுல் உயர் மட்ட நிலையில் அணுக்களின் எண்ணிக்கையை மிகுதிப்படுத்தலாம், இதை இனத்தன் மாற்றம் எனக் கூறுகிரேும். தூண்டப்பட்ட வெளியீடு சிறப்புடையதாக இருக்க வேண்டுமாயின் கிளர்ச்சியுற்ற நிலையில் மிகுதியான அளவு அணுக்கள் இருந்தல் வேண்டும்.

பல வகை லேசர்கள்:

1) மாணிக்க லேசர்: (Ruby Laser): ஏறத்தாழ 10 செ.மீ முதல் 15 செ.மீ வரை நீளமும், °5செ.மீ விட்டமும் கொண்ட மாணிக்க உருளையின் இரு முகங்கள் தட்டை வடிவத்தையும். முழு ஒளியியல் தன்மையையும்




மாணிக்கலேசர் [படம் 1]

பெற்று இருக்கும். (படம் 1). இவைகளில் ஒன்று (F) முழு ஒளித்திருப்ப பரப்பாகவும், மற்ருென்று பகுதி ஒளித்திருப்ப பரப்பாகவும் இருக்கும். இவ்வுருளையைச் சுற்றி சுருள்

வடிவில் செனன் பளீர் விளக்கு ஒன்று உள்ளது. CR என்ற உருளைவடிவ எதிரொளிப்பானும் உள்ளது. மாணிக்கம் என்பது அலுமினிய மூன்று ஆக்சைடு ஆகும் இதில் குரோமியம் அணுக்கள் உள்ளது. செனன் பளீர் விளக்கின் ஆற்றல் மிக்க ஒளியினுல் ஒரு விடிைடியின் ஆயிரத்தில் சிலபங்கு நேரமே இது ஒளிர்விக்கப் படுகிறது. இதனுல் குரோமியம் அணுக்கள் கிளர்ச்சியுற்று தூண்டப்பட்ட ஃபோட்டான்களை உண்டாக்குகின்றன இவைபன்முறை எதிரொளிக்கப்பட்டு அணுக்களுடன் மோதி, எண்ணிக்கையில் மிகுதியாகி, பகுதி ஒளித் திருப்ப பரப்பின் வழியாக ஒரியியல், குறுகிய, இணைக்கற்றையாக வெளிவருகின்றன. இக்கதிரையே லேசர் [LB] கதிர் எனக் கூறுகிறோம். இதன் அலை நீளம் 694.3 nm. (nanometre) இது அகச்சிகப்பு பகுதியில் உள்ளது. இவ்வொளி மில்லி செகண்டு அல்லது அதற்கு குறைவாக நீடித்திருப்பினும், கதிரவனின் ஒளியைவிட ஆற்றல் மிக்கதாய் இருக்கும். ஆற்றல் மிகுந்த ஒளி வெளிவரும் பொழுது மிகஅதிக அளவில் வெப்பம் உண்டாகிறது. மாணிக்க உருளை இதனுல் பாதிக்கப்படாமல் இருக்க திரவ நைட்ரஜன் இவ்வுருளையைச் சுற்றி வைக்கப் பட்டிருக்கும்.

ஹீலியம்- நியான் வாயு லேசர்: *(Helium-Neon gas Laser)*

திடப் பொருள் லேசர்கள் தொடர்ச்சியாக ஒளியை வெளிவிடுவதில்லை. தொடர்ச்சியான ஒளியை கொடுக்கக் கூடிய ஹீலியம்-நியான் வாயு லேசர் பெல் ஆய்வகத்தில் உரு




**ஹீலியம் நியான் லேசர்** [படம் 2]

வாக்கப் பட்டது. பாபா அணு ஆராய்ச்சியல் கழகத்தின் எலெக்ட்ரானிய பிரிவினரும் ஹீலியம் - நியான் வாயு லேசரை உருவாக்கியுள்ளார்கள். குவார்ட்ஸ் குழாயில் ஹீலியம்-நியான்வாயுக்கள் உள்ளது. பகுதி ஒளித்திருப்பப்பரப்புஆடிகள்.(SM)படம்2ல்காட்டியவாறு இருக்கும். ஆடிகள் கோளக வடிவில் இருக்கும் இவைகள் பல அடுக்கு மின் கடத்தாப் பொருள்களாகிய மென் ஏட்டினுல் பூசப்பட்டிருக்கும். மின்னிறக்கத்தால் கிளர்ச்யுற்ற ஹீலியம் அணுக்கள் தம்மோடுமோதும் நியான் அணுக்களையும் கிளர்ச்சியுறச் செய்து அவைகளிலிருந்து லேசர் கதிர் கலை வெளியிடச் செய்கிறது. இதன் திறன் ஏறத்தாழ எல்லா துறைகளிலும் பெருமளவில் பயன் படுத்தப் படுகின்றன.

பயன்கள்: *(1) அறிவியல்:* வேதியியல் வினே வழியின் இயல்பையும், மூலக் கூற்றின் அமைப்பினையும் முற்ருய்தலில் லேசர் கதிர்கள் பெருமளவில் பயன் படுத்தப் படுகிறன. நிலவளவையில் பயன்படுத்தப்படுகிறது வானிலை ஆராய்ச்சி நிலையங்களில் பயன்படுத்தப் படுகின்றன. லேசருடன் இணைந்து செயல் படும் ஒரு தொலை நோக்கியைப் பயன் படுத்தி திங்களின் பரப்பினைப் பற்றிய விளக்கங்களை அறியலாம்.

*(2) தொழிலியல்:* பொருட்களை வரிசைப் படுத்த லேசர் உறு துணையாக உள்ளது. தேய்த்தல், துளையிடுதல், உருக்குதல், இணைத்தல் போன்ற பல தொழில்களிலும் லேசர் கதிர்கள் பயன் படுத்தப் படுகின்றது. பொருள்கள் அனைத்திலும் மிகக் கடினமான வைரத்தில் துளையிட இக்கதிர்களின் பயன் மிக மிகுதியானது. கன பரிமான புகைப்படம் என்பது லேசரால்உருவாகியுள்ள முற்றிலும் புதிய தொரு தொழில் நுட்பமாகும் டிரான்சிஸ்டர் தொழிலில் மிக நுண்மப் பகுதிகளை பற்றவைக்க இக் கதிர்கள் பயன்படுத்தப் படுகின்றன. மருத்துவத் துறையில் ஊசி போட பயன் படுத்தப் படும் ஊசிகளின் நயத்தை ஆராய்வதற்கு பயன் படுத்தப் படுகிறது.

*(3) செய்தித் தொடர்பு:* ஒற்றை அதிர் வெண்ணில் லேசர் கதிர்கள் இயங்குகிறது. வானொலி, தொலைக் காட்சி, தொலைபேசி

ஆகியவற்றில் ஒரே நேரத்தில் நூற்றுக்கும் அதிகமான செய்திகளை பரப்ப இதை அலைப்பண் பேற்றம் செய்யலாம், லேசர் வீச் செல்லை காட்டிகள் துல்லியமாக தொலைவை கணக்கிடுகின்றன. ராக்கெட்களையும், துணைக் கோள் நூறு மில்லி வாட்டாகும்.

ஆர்கான் வாயுவினுல் இயங்கும் கருவி ஒன்றை தேசிய இயற்பியல் ஆரய்ச்சிகழகத்தினர் உருவாக்கியுள்ளனர். வாயு லேசர் மாணிக்க லேசரைவிட மலிவானவை. கரிய மில வாயு லேசர் ஒன்று கண்டு பிடிக்கப் பட்டுள்ளது. இது தொடர்ச்சியாக ஒளியைத் தரும். இதன் ஆற்றல் 800 வாட்.

**(3) வேதியியல் லேசர்:** (Chemical Laser) வேதியியல் பிணைப்புக்களின் ஆக்கத்திலோ, அழிவிலோ உருவாகும் ஆற்றலைப் பயன் படுத்தி லேசர் விளைவை உண்டாக்கலாம் காட்டாக ஒளியினுல் பிரிக்கப்பட்ட "ட்ரைப் ளுரோமெத் அயோடைட் "டிலிருந்து கிளர்ச்சியுற்ற அயோடின் லேசர் வெளிவருகிறது. அயோடின் லேசரின் திறன் மிக மிகுதியானது

**(4) உட்புகுலேசர்:** (Injection Laser): குறை கடத்தி டயோடினுல் ஆன உட்புகுலேசர் 1962ம் ஆண்டில் அமெரிக்க அறிவியல் வல்லுநர்கள் கண்டுபிடித்தனர். காலியம் ஆர்சனைட்டயோடு இதில் சிறந்தாகும். குறை கடத்தி படிகத்தினூடு ஆற்றல் மிகுந்த மின்னேட்டத்தை செலுத்திஞல் ஆற்றல் மிகுந்த லேசர் கதிர்கள் வெளிவரும்.

**தன்மைகள்:** லேசர்கதிர்கள் (1) மிக மிகுதியான ஒளியியலில் தன்மை (2)செறிவு (3)குறுகிய ஒளி அதிர் வெண் (4) கற்றையின் விரிவுத் தன்மை ஆகியவற்றை பெற்றுள்ளது.

இத்தகைய ஈடு இணையற்ற வியக்கத்தக்க, தனித் தன்மை வாய்ந்த பண்புகள் இருப்பதால் அறிவியல், தொழிலியல், செய்தித் தொடர்பியல்,மருத்துவ இயல் ஆகியவைகளையும் வழிப் படுத்துவதில் இது பயன் படுத்தப் படுகிறது. ரேடார் செய்யும் பணிகளை எல்லாம் லேசர் சிறப்பாகச் செய்கிறது.

**(4) மருத்துவ இயல்:** புற்றுக் கழலையை சுட்டு எறிப்பதற்கு இக் கதிர்கள் பெருமளவில் பயன் படுத்தப் படுகின்றன. எரிச்சலூட்டுகிற வேதனை ஒன்றும் தெரியாமல் ஒரு மைக்ரோ விஞடியே செலுத்தப் பட்ட லேசர் கதிரிஞல், நோயாளியின் கண்ணிலுள்ள கட்டியை உடனடியாக அழிக்க முடியும். ஆர்கான் லேசர் கண் நரம்பு நோய்களை குணப்படுத்த பயன் படுத்தப்படுகிறது. ஒளியியல் தமனியிலுள்ள கட்டியை அகற்ற இக்கதிர் பயன்படுத்தப்படுகிறது. பிரிந்து நிற்கும் விழித்திரையை மீண்டும் இணையச் செய்ய இக்கதிர்கள் பயன்படுத்தப் படுகின்றன. அறுவையியலில் திசுவை அறுத்து ஆய்வு செய்வதுடன், அதை உணர்ச்சி அற செய்யவும் இக்கதிர்கள் நுட்பநய அறுவைக் கத்தியாக பயன்படுகிறது. இம் முறையினுல் நோயாளிக்கு வேதனையோ, இரத்த சேதமோ எற்படுவதில்லை.

லேசர் ஒளிக்கற்றை கருவியின் மூலம் ஒருவர் இறந்த காலத்தை இரண்டு அல்லது மூன்று மணிவேறு பாட்டில் மதிப்பிட முடியும். புற்று நோயைகுணப் படுத்தவும் இக்கதிர்கள் பயன் படுகின்றன. வைசூரித் தடங்களை தடமில்லாமல் அழிக்க பயன் படுகிறது. பார்வையிழந்வர்கள் பார்க்க இக்கதிர்களை பயன் படுத்தலாம்.

லேசர் கதிர்களின் வியக்கத்தக்க பண்புகளால் இதன் பயன்கள் எண்ணிலடங்கா. எனவே லேசர் ஒளி மக்கள் வாழ்வு மலர பல துறைகளில் பயன்படும் என்பதில் ஐயமில்லை.

---

# சாங்கியமும் மருத்துவமும்

நெல்லை க. சுப்பிரமணியன்,
வித்துவான், எம். ஏ., பி. டி.
தூய யோவான் கல்லூரி, பாளையங்கோட்டை.

முகவுரை:

சாங்கியம் என்ற சொல் இன்றும் தமிழகத்தில் வட ஆர்க்காடு தென் ஆர்க்காடு ஆகிய மாவட்டங்களில் வழக்கிலுள்ளது. சாங்கியம் என்பது அறிவு என்றே பொருள்படும். சாங்கிய யோகம் என்று இரட்டைத் தத்துவங்களாக இணைத்துக் கூறும் வழக்காறு உண்டு. சாங்கியரை அறிவர் என்றார் தொல்காப்பியர் அறிவனும் அட்டாங்க யோகமும் என்னும் இரண்டினையும் இணைத்தே அவர் வாகைத் திணையில் எடுத்தோதியுள்ளார்.

''மறுவில் செய்தி மூவகைக் காலமும்
நெறியின் ஆற்றிய அறிவன் தேயமும்
நாலிரு வழக்கிற் றாபதப் பக்கமும்.,

என்பது தொல்காப்பியம். அறிவரைச் சித்தர் எனவும் கூறுவதுண்டு. ஆகவே அறிவர் எனவும் சித்தர் எனவும் பெயர் பெற்றிருந்த தமிழர்கள் வடபுலம் சென்றபோது சாங்கியர் எனப்பட்டனர்.

மருத்துவ நூலில் சாங்கியம்:

மருத்துவ நூலார் உடலியல், உடலமைப்பியல், மனவியல், கருவியல், சட்டம் சார்ந்த மருத்துவம் முதலிய பல்வேறு துறைகளிலும்பொதுவானபயிற்சிபெறுதல்போன்று சோதிடம், சமயம், தத்துவம் முதலிய துறைகளிலும் தேர்ச்சி பெற்றிருப்பது இன்றியமையாதது. கி. பி. முதல் நூற்றாண்டிலிருந்த மருத்துவ நூலாசிரியராகிய சாகர், தேக தத்துவம் பற்றி மூல சாங்கியக் கொள்கைகளை மேற்கொண்டு உரைத்திருப்பது முற்கூறியதனை வலியுறுத்துகிறது. மேலும், கி. பி. இரண்டாம் நூற்றாண்டினரான ஈசுவர கிருட்டிணரது சாங்கிய காரிகைக்கு முன்னர், சாங்கியம் பற்றிய முழுமையான நூல் அகப்படாமலிருக்கும் நிலையில், மூல சாங்கியக் கொள்கைகளை மருத்துவ நூலாகிய சரகசம்ஹிதையில் அதன் ஆசிரியர் சரகர் பொன்போற் பொதிந்து வைத்திருப்பது தத்துவ வரலாற்றாசிரியர்க்கு உவகையூட்டுவதாகும்.

சரகர் சாற்றிய தத்துவங்கள்:

சரகர் கூற்றின் வண்ணம் வான், வளி, தீ, நீர், நிலம், புருடன் எனப்படும் சேதனன் ஆகிய தாதுக்கள் உள்ளன. வேறு ஒரு வகையில் கூறுவதாயின், இந்திரியங்கள் பத்து, மனம், பஞ்ச பூதங்கள், எண் வகைப் பிரகிருதிகள் ஆகிய இருபத்து நான்கு தத்துவங்கள் இருக்கின்றன. இவற்றுள் புருடதத்துவம் பஞ்ச பூதங்களுக்குச் சமமாகப் புகலப்பட்டுள்ளது அதுவும் ஒரு தாதுதான். மூலசாங்கியத்தின் சடப்பொருள் வாதத்தை இப்பகுதி வெளிப்படுத்துகிறது. இருபத்துநான்கு தத்துகளில் ஆன்மீகத்துக்குச் சிறிதும் இடமில்லை. இந்திரியங்களும் மனமும் சடப்பொருள்களே, புருடதத்துவத்திற்கு அதில் இடமில்லை. ஆகவே சக்கரபாணி என்ற உரையாசிரியர் ''பிரகிருதியும் புருடனும் அவ்வியத்தங்கள், அவ்விரண்டினையும் ஒன்றெனக் கோடல் வேண்டும்'' என்று விளக்கம் எழுதினர்.

ஆன்மாவைக் குறித்து சரகர் கருத்து:

பிரகிருதியும் ஆன்மாவும் இருபத்துநான்காவது தத்துவம் என்பர் சரகர். பிரகிருதியிலிருந்தே ஆன்மா உதிக்கிறது என்பது அவர் கருத்து. சடப்பொருளிலிருந்து உயிர் தோன்றுகிறது என்ற பிரகஸ்பதியின் கருத்துடன் அது பொருதமுறுகிறது.

1) ஐம்பூதங்களும் உணர்வும் சேர்ந்தது ஆன்மா 2) உணர்வே ஆன்மா 3) ஞானேந்திரிய கன்மேந்திரியங்கள் பூதங்கள் தன் மாத்திரைகள் மான் அகங்கார மனங்கள் பிரகிருதி ஆகிய இருபத்து நான்கின் கூட்டத்தில் உதிப்பது ஆன்மா 4) ஆதி, அனுதி, அழிவற்றது அழிவது என ஆன்மா இருவகை. 5) ஆன்மா என்றொரு தத்துவம் இல்லை. இவ்வாறு ஆன்மா பற்றிய கொள்கைகள் தம் காலத்தே நிலவியதனைக் கூறிய சரகர், தம் கொள்கை இன்னது என ''ஆன்மா பிரகிருதியிலிருந்து தோன்றுவது, அவ்விரண்டும் ஒரே தத்துவம்'' என்றார்.

நிரீச்சுர சாங்கியர் ஆன்ம இலக்கணம் குறித்துக் கூறுவதையே சரகர் எடுத்தாண்டுள்ளார். அக்கருத்தைச் சிறிது திரித்து, அஃதாவது ஆன்மாவுக்குப் பரிணுமத்தில் பங்குண்டு என்பதனை இயைத்து ஈசுவர கிருட்டிணர் சாங்கிய தூறிகையில்ஆன்மஇலக்கணம் வரைந்து வைத்துள்ளார். எனவே, சுவாவ வாதம் அல்லது திருந்திய சடப்பொருள் வாதம் என்பதனேடு பெரிதும் நெருங்கியது மூலசாங்கியம் என்று கார்பே வலியுறுத்தியது இங்குக் கருதற்பாலது.

மருத்துவத் துறையில் உணர்வு அல்லது உணர்வுமயம் எனப்படும் ஆன்மா மட்டும் இடம் பெறுதற்குரியதன்று. இன்பம், துன்பம், நோய், மரணம், முதுமை முதலியவை மனமும் உடலும் இயைந்ததொன்றினுக்கு ஏற்படுமே அல்லாமல், உணர்வுக்கு மட்டும் ஏற்படுவதில்லை. அவயவங்களுடன் பொருந்தியவனுகிய புருடனுக்குப் பிரகிருதியின் துணையின்றி வெளிப்பாடில்லை என்று சரகர் சாற்றியுள்ளார்.

ஆய்வின் நோக்கம் ஒன்றே:

துன்பம், துன்பத்திற்கு மூலகாரணம், துன்பத்தை நீக்கும் வழி, கடைப்பிடிக்க வேண்டிய முறை என்று மருத்துவ அறிஞர் நூலினைத் தொடங்குவது போன்றே, மூவகைத் துன்பம், அவற்றின் அடிப்படைக் காரணம், அவற்றை விலக்கும் வழி, நீக்குவதற்கு மேற்கொள்ள வேண்டிய நெறிமுறை என்று சாங்கிய அறிஞர் ஈசுவரகிருட்டிணர் தம் நூலினைத் தொடங்குகின்றார். காணப்பட்ட உலகத்தால் காணப்படாத கடவுளின் உண்மையைக் கூறவேண்டுவது போன்று, அருந்துயர் குரம்பையின் மூலமே ஆன்மாவை அனுமான அளவையால் உணரவேண்டுவதாயிருக்கின்றது. ஆகவே, உயிரைப் பற்றிய உண்மைகளையும், அஃது உடம்பு என்னும் குடம்பையுள் உறையும் போது அடையும் தன்மைகளையும் தத்துவ நூல் மருத்துவ நூல் ஆசிரியன்மார் ஆய்கின்றனர். இந்தியத் தத்துவங்களுள் முந்தியது சாங்கியம். தேகத் தத்துவம் பற்றிச் சாங்கிய அறிஞர் பண்டே கண்டறிந்த உண்மைகள் பலவாகும்.

குணங்களின் செயல்கள்:

சாங்கியத் தத்துவம் பற்றி இப்போது கிடைத்துள்ள சுருக்கமான பழைய நூல் சாங்கிய காரிகை. அதில் முக்குணம் பற்றிப் பின் வருமாறு உளது:

> திரிகுணத் தொடர்பினைத் தெரிதரின் அம்மா
> எரிவிளக் கொளியும் திரியும் நெய்யும்
> புரைவ தாமெனப் புகல்வர்
> தரைபுகழ் சாங்கியம் தவப்பயின் றோரே.

தம்முள் முற்றும் முரண்பட்ட முக்குணங்களும் விளக்கின் ஒளி எரிதற்கு எண்ணெயுந் திரியும் துணைசெய்வது போலச் செயலாற்றும் என்பது இந்நூற்பாவின் பொருள். ஒன்றுக்கொன்று மாறுபட்ட திரியும் எண்ணெயும் ஒளி தொடர்ந்து எரிதற்கு எவ்வாறு துணை செய்து பொன்றிவிடுகின்றனவோ, அவ்வாறே ஒன்றினேடொன்று இயைபற்ற இராசத தாமதகுணங்கள் புருடனின் சத்துவ குண மேம்பாட்டிற்காக செயலாற்றுகின்றன.

முக்குணங்களும் பிரதீபம் போலவும் சுந்தோ பசுந்த நியாயம் போலவும் ஐவளிப் பித்துப் போலவும் செயல்புரிகின்றன. என்று வேறிரண்டு உவமைகளையும் சேர்த்துரைத்தார் வாசஸ்பதி மிஸ்ரா.

ஒரு தாய் வயிற்றில் உடன் பிறந்தோராகிய சுந்தன் உபசுந்தன் என்னும் அசுரர் இருவரும் தம்முள் ஒற்றுமையுடன் வாழ்ந்து பின்பு திலோத்தமையின் காரணமாகத் தம் முட் பொருதழிந்தனர் என்பது பழைய வரலாறு.

பிரகிருதியின் உட்கூறுகிய இராசத தாமத குணங்கள் தம்முள் உடன்பட்டுறைந்து பின்பு புருடனின் சத்துவ குணமாட்சி காரண மாகத் தம்முள் முரண்பட்டு அழியும் என்பது சாங்கியம். உடம்பின் அகத்தேயுள்ள ஐயம் பித்தம் ஆகிய இரண்டும் படைப்பிற்குக் காரணமாகிய வளிக்காகத் தம்முள்ளே வேறுபாடெய்திப் பயன்படும் என்பது மருத்துவம். இராசத தாமத குணங்கள் வேருடன் பெயர்த் தெறியப்பட்டால், பழவினைகள் பாறும் வண்ணம் வினைவிளைவோ மறு பிறவியோ ஏற்படாத நிலையைப் புருடன் நண்ணுவான்.

துன்ப நீக்கமே வீடு:

நோய், நோய் முதல், அது தணிக்கும் வாய், வாய்ப்பச் செயல் ஆகிய நால்வகை நெறிகளைப் பின்பற்றியே மருத்துவ அறிஞர் நூல்களில் ஆய்வை மேற்கொண்டனர். தத்துவ அறிஞர் ஆன்மாவைப் பற்றிய அவித்தை நீங்கி, மேன்மையான அழியாத இன்பத்தில் வைகுவதற்கு வழிகாண முனைந்தனர். பாடாண வகைகளைப் பழங்காலத் திலேயே பாங்குற வுணர்ந்திருந்த பதினெண் சித்தர்களோ, ஆன்மா உறைதற்கு ஆலயமாகிய உடம்பும் அழியாமல் வைகுவதற்கு இரசவாதம் முதலிய வழிகளில் ஈடுபட்டனர்.

முடிவுரை:

உயிரை மேவிய உடம்போடு கூடிய உலகியல் வாழ்வுக்குச் சாங்கியம் மருத்துவம் ஆகிய நூல்களின் அறிவு இணைந்து பயன் விளைவிப்பது என்பது இதுகாறும் உரைத்த வற்றல் உய்த்துணர வேண்டுவதாகும்.

**Books consulted:**

1) A History of Indian Philosophy I. Surendra Nath Das Gupta.
2) Classical Sankhya Larson.
3) Lokayata, Debiprasad Chattopaddhyaya.
4) Sankhya Karika - Mainkar, T. G.
5) தொல்காப்பியம்.
6) சாங்கியகாரிகை,
நெல்லை. க. சுப்பிரமணியன்.

---

★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★

## அண்ணாவின் பொன்மொழிகள்

நமது தாய் மொழியான தமிழ், உயர் தனிச் செம்மொழி. உலகில் வேறு எந்த இனத்துக்காவது தாய் மொழியாக இருந்திருந்தால் இத்தனை காலத்துக்குள் உலகப் பொது மொழியாகி இருக்கும்.

★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★

ற்றியே மருத்துவ அறிஞர்
வை மேற்கொண்டனர்.
ஆன்மாவைப் பற்றிய
மேன்மையான அழியாத
வதற்கு வழிகாண முனைந்
வகைகளைப் பழங்காலத்
வுணர்ந்திருந்த பதினெண்
ன்மா உறைதற்கு ஆலய
அழியாமல் வைகுவதற்கு
ய வழிகளில் ஈடுபட்டனர்.

ிய உடம்போடு கூடிய
ருச் சாங்கியம் மருத்துவம்
அறிவு இணைந்து பயன்
பது இதுகாறும் உரைத்த
ர வேண்டுவதாகும்.

:

y of Indian Philosophy
ra Nath Das Gupta.
Sankhya Larson.
Debiprasad Chattopa-
Karika - Mainkar, T. G.
ப்பியம்.
ரிகை,
நல்லே. சு. சுப்பிரமணியன்.

★ ★

★

செம்மொழி.
மொழியாக ★
ப் பொது
★

★ ★

# கண் நோய்கள்



டாக்டர் வே. ஸ்டான்லி ஜோன்ஸ் B.A, B.I.M.
பயிற்சி மருத்துவர்.

நம் கண்ணை இரண்டு இமைகள் காக்கின்றன. குட்டம், வாய்க் கோணல் (Facial Palsy) இமையில் தழும்புகள் ஏற்படுதல் முதலிய நோய்களில் இமைகள் கண்ணை மூட முடியாத நிலை ஏற்படும். இதனுல் கருவிழிக்கு பாதுகாப்பில்லாமல் தூசிகள் விழுந்து கருவிழியில் புண் ஏற்படும். இதனுல் பூ விழுந்து விடும். கண் பார்வை மங்கி விடும் புண் ஏற்படும் போது கண்ணில் நீர் வடிதல், சிவப்பு நிறம், வலி முதலியன ஏற்படும் இப்படி கண் இமை மூட முடியா விட்டால் உடனே ஏதாவது கண்மை போட்டுக் கையினுல் இமையினை தாழ்த்திக் கண்ணை கட்டிவிட வேண்டும். பின்னர் மருத்துவரிடம் காண்பித்தால் இரண்டு இமைகளின் ஓரங்களையும் சேர்த்து தைத்து விடுவார்கள் நோய் நீங்கிய பின்னர் அதை திறந்து விடுவார்கள்.

கருவிழியானது உண்மையில் கருப்பு நிறமுடையது அன்று இது கண்ணுடிபோல் நிறமற்றதாக தான் இருக்கும். கரு விழிவழியாக ஒளிக் கதிர் உள்ளே சென்று கருவிழி வளைந்து இருப்பதால் ஒளிக் கதிர்களும் வளைந்து உள் செல்கின்றது. கருவிழியில் ஏதாவது ஒரு பூ விழுந்து விட்டால் ஒளிக்கதிர்கள் கண்ணுக்குள் புக முடியாத காரணத்தால் கண்பார்வை குறைந்து விடும். கருவிழியில் விழும் பூ கரையவே கரையாது. கண்ணிற்குள் விழித்திரை என்ற ஒன்று தொங்க விடப்பட்டிருக்கிறது கருவிழியின் நிறம் அந் தவிழித்திரையின் நிறத்தைத் தான் காட்டுகிறது. இது சிலருக்கு கருப்பாகவும் சிலருக்கு நீல நிறமாகவும் தெரியும். இந்த விழித்திறையின் மத்தியில் ''பாப்பில்'' (Paipl) என்ற சிறு துளை உள்ளது.

இது சுருங்கவும் விரியவும் முடியும் வெளிச்சம் அதிகமானுல் சுருங்கும் இருட்டு அதிகமானுல் விரியும், இது போல் சில மருந்துகளால் செய்ய முடியும். முக்கியமாக கண் நரம்புகள் கெட்டு விடுதல் (Optic Atroplıy) கண்ணின் நீர் அழுத்தம் மிகுதி பட்டாலும் பாப்பில் பெரிதாக இருக்கும் பிறகு சுருங்காது.

**கண்ணில் பூவிழுதல்:-** விழித்திரைக்கு பின்னுல் கண்மணி (lens) இருக்கிறது. இது கண்ணுடி போல் இருக்கும். இது கரு விழி போல் ஒளிகதிர்களை வளைத்து ஒளித்திரையில் (Retina) ''மாக்குலா'' என்ற இடத்தில் ஒளிக் கதிர்கள் குவிந்து விழுமாறு செய்கின்றது. ஆகவே கரு விழியும் கண்மணியிம் ஒளிக்கதிர்களை உட் பக்கமாக வளைத்து ''மாக்குலா'' என்ற இடத்தில் விழச் செய்கின்றன. கண் மணியில் பூ விழுந்திருந்தால் ஒளிக்கதிர்கள் உட் செல்லாது. கண்மணியில் பூ விழுவதை தான் ''Cataract'' அல்லது ''புரை'' என்று சொல்லுவர். 50 வயதுக்குமேல் பார்வை இழந்தால் ''Cataract'' இருக்கும். இதற்கு மற்றெரு காரணம் உண்டு அதனை ''க்ளா கோமா (Glau Coma) அல்லது ''கண்நீர் அழுத்த நோய்'' என்று சொல்லுவார்கள். இந் நோய் கண்ணினுள் உள்ள நீர் அழுத்தம் அதிகமாகி சிறிது சிறிதாக நரம்பழுத்தம் ஏற்பட்டு கண்பார்வைகுறையும்.

கண்மணியில் புரை விழுந்தால் அதை அறுவை மருத்துவ மூலம் குணப்படுத்தலாம். கண் நீர் அழுத்தை முதலிலேயே கண்டு பிடிக்க விட்டால் நாளடைவில் கண் நரம்பு பழுது பட்டு கண் பார்வை முழுவதும் போய்

விடும் இதை அறுவை மருத்துவம் செய்தும் பயனில்லே- கண்ணில் புரை, கண் நீர் அழுத்தமா என்பதை கண்டு பிடிப்பதற்கு இரண்டு முறைகள் உள்ளன. அவைகளில்

1 கண்ணில் வெளிச்சம் பாய்ச்சும் போது பாப்பில் எப்படி இயங்குகிறது என்பதை கவனிக்க வேண்டும் அதிகமாக சுருங்கினுல் "கண்புரை" என்றும் மெதுவாகவும் சிறிது சிறிதாகவும் சுருங்கினுல் "கண்ணீர் அழுத்தம்" என்றும் தெரிந்து கொள்ள வேண்டும். மேலும் கண்ணீர் அழுத்தம் இருக்கும் போது சிறிது தலைவலியும் இருக்கும், விளக்கை பார்த்தால் அதை சுற்றி வானவில் போல பல நிறங்ளில்வளையங்கள் தோன்றும்.

கண்மணியானது "சிரிலியர்பாடி" (Ciliary) என்ற ஓர் உறுப்பினின்றும் தொங்க விடப் பட்டிருக்கின்றது. இந்த Cili ary body யில் சிறப்பாக ஒரு தசை நார் உள்ளது. இது சுருங்குவதால் தான் "கிட்டப் பார்வை" பார்க்க முடிகிறது. தசை நார் சுருங்குவதால் கண்மணி சற்று பருத்து அதன் வளைவு அதிகமாகி ஒளிக்கதிர் கண்ணுள் சென்று மாக்குலா வில் ஒன்றுகூடி வருகிறது இந்த தசை நாரை "அட்ராபின்" "ஹோமட்ரோபின்" போன்ற மருந்துகளைக் கண்களில் இடுவதால் வலிமை யற்றதாக செம்யமுடியும். அதுபோல் "டிப்தீரியா" கண்ணில் நீர் அழுத்தம் "முதலிய நோய்களுச்கும் தசை நாரை வலுவற்றதாக செய்யும். இவ்வாறு வலுவற்றதாக உள்ள நிலையில் இது சுருங்க இயலாததால் கிட்டப் பார்வை தெளிவாக தெரியாது. எல்லோருக்கும் 40 வயது ஆகும் போது இந்த தசை நார் சிறிது வலிமை குறைவதால் கிட்டபார்வை சிறிது தொல்லை தரும். இதை தான் "வெள்ளெழுத்து" (Presbyopia) என்பார்கள்.

கண்மணிக்கு பின்னுல் "விட்ரியஸ்', (Vitr cous) என்ற சவ்வு போன்ற ஒரு பொருள் இருக்கிறது. இது தான் கண்ணுக்கு உருவத்தை கொடுக்கிறது. இந்த விட்ரியாஸ் கண்ணுடி போன்று ஒளிக்கதிர்களை ஊடுருவச் செய்யும், சில சமயம் அடிபடுவதாலோ கூர்மையான ஆயுதங்கள் கண்ணை தாக்கு வதாலோ விட்ரியஸ் அதிகம் வெளியே வந்து கண் சுருங்கி, பார்வையும் போய் விடும் விட்ரியஸிக்கு பின்னுல் ஒளித் திரை (Retina) இருக்கிறது. இந்த ஒளித்திரையில் தான் அதிலும் குறிப்பாக "மாக்குலா" என்ற இடத்தில் தான் நாம் பார்க்கும் ஒவ்வொரு பொருளின் நிழல் விழுகிறது. இந்த மாக்குலாவில் இரத்தம் சோர்ந்தாலும் பார்வை குறையும்.

ஒளித்திரைக்கு பின்னுல் "கோராய்ட்" (Choroid) என்ற உறுப்பும் அதற்கு பினனுல் "வெள்ளை விழியும்" (Sclera) இருக்கிறது இதில் ஏராளமான இரத்த குழாய் உள்ளது மற்ற உறுப்புகளுக்கு குருதி வழங்க உதவுகிறது. (Conjunctiva) படலத்திலிருந்து ஒருவகை கண்ணீரைச்சுரந்து கண்ணை எப்போதும் சிறிது ஈரமாகவே வைத்திருக்கிறது. அதிகமாக கண்ணீர் உற்பத்தியாகும் இடம் கண்ணின் மேலேயும், வெளியேயும் ஆர்பிட்" (Orbit) என்ற எலும்பு பெட்டியில் உள்ள கண்ணீர் கோளங்கள் தான் (Lacrinal glaub).

## காந்தியடிகளின் கருத்துரைகள்

1 மனிதனைப் பிடிக்கும் நோய்களிலெல்லாம் மிக மிகக் கொடியது, மோசமானது அச்சம் என்னும் நோய்தான்.

2. கடமைகளைச் செய்யாமலே உரிமைகளைத் தேடினுல் அவை கானல் நீராகிவிடும்.

3. எனக்கு நகைச் சுவை இல்லாது போயின் என்றோ நான் தற்கொலை செய்து கொண்டிருக்கவேண்டும்.

# கம்பன் காவியத்தில் தமிழ் மருத்துவக் குறிப்புகள்

L. முத்துகிருட்டிணன்,

தமிழ்நாடு செவிலியர் சங்க உறுப்பினர்.

முதலில் இராமயணத்தின் கடவுள் வாழ்த்துப் பாடலேயே எடுத்துக் கொள்ளு வோம்.

''உலகம் யாவையும் தாமுள ஆக்கலும்
நிலைபெறுத்தலும் நீக்கலும் நீங்கலா
அலகிலா விளையாட்டுஉடையார் அவர்
தலைவர்; அன்னவர்க்கேசரண் நாங்களே!

பல ஆயிரம் வருடங்களுக்கு முன்னதாக தோன்றிய சித்தர் மெய் ஞான விஞ்ஞானம் சித்தர் மெய்ப்பொருள் பற்றி விளக்கும் பொழுது உயிர்கள் எல்லாம் இறுதியில் பரம் பொருள் அல்லது பரப்பிரமம் சென்று அடை கின்றன. சாங்கியம் கூறும் மூலப்பிரகிருதியும் ஒன்றே. ஆக கடவுளைக் கூறவந்த அவர், நாடு, இனம், மதம், ஆகிய வலைகளுக்குள் சிக்காமல் அவர் தலைவர் அன்னவர்க்கேசரண் நாங்கள் என்கிறார். என்ன பரந்த மனப் பான்மை மேல்நாட்டு பெரும் கவிஞர்கள் என்று கூறப்படும் சேக்ஷ்பியர், ஹோமர், விர்ஜில், மில்டன், ஷெல்லி, என்பவர்களும் ஹிப்போ கிராட்டீஸ் போன்ற மருத்துவ மேதைகளும் சாக்ரடீஸ் போன்ற தத்துவ ஞானிகள்கூறாத அத்தனை கருத்துக்களையும் கம்பன் காவியத்தில் நாம் காணலாம். பால காண்டத்தில் சரயு நதியைப்பற்றி கூற வந்த கம்பர்சித்தர்வைத்தியம் கூறும் ஐவகை நிலங்களையும் உடல் உள்ளம் இவைகள் சித்தர் கூறிய காயகற்ப முறைப்படி செயல் பட்டால் நேர்மையான நல்வாழ்வு வாழ முடியும் என குறிப்பிடுகிறார். இதோபாடல்

''முல்லையை குறிஞ்சி ஆக்கி
மருதத்தை முல்லை ஆக்கி
புல்லிய நெய்தல் தன்னை
பொரு மருதம் ஆக்கி
எல்லையில் பொருள்கள் எல்லாம்
இடைதகுமாறும் நீரால்
செல்லுது நதியில் செல்லும்
விளையெனச் சென்றது அன்றே''

அடுத்து கோசல நாட்டு வளம் பற்றி பாட வந்த கம்பர் காவிரியோடும் சோழ வள நாட் டையும் தமிழ் நாட்டையும் பின்னணியாசப் பாடும் ஒரு பாடலில்

''வரம்பெலாம் முத்தம் தத்தும்
மடையெலாம் பணிலம் மாநீர்க்
குரம்பெலாம் செம்பொன் மேதிக்
குழியெலாம் கழுநீர்க் கொல்லை.''

என்கிறார். பணிலம் என்றால் சங்கு. சங்கு, முத்து, பொன் செங்கழு நீர் இவைகளின் மருத்துவப்பயன்களையும் அவைகளைப் பற்றிய அறிவையும் கம்பர் நன்கு தெரிந்திருக்கிறார். அன்றைய சித்தர்களும் அவைகளின் உபயோ கம் பற்றி பாடுகிறார்கள். இதோ சித்தர் பாடல் முத்தைப்பற்றி.

''அத்தி சுரம் சோபை அருசி, துர்ப்பலம்
கண் நோய்
பித்தவிடம் சீதள நோய் பேசுகபம் -
சுத்தவயிரிய
நட்டத் தோடு தாது நட்டமும் போம்
உயிரிரு நன் முத்திருந்தா லோது''

''கசியா இரத்த பித்தங் கண் நோய்களோடும்
பசியாலும் வாதம் பரக்கு மிசிவுடனே
தங்கும் மூளை விரணம் தானகலுமே வெள்ளை
சங்கமது உண்டாயிருற்றால்''

என்கிறார் சங்கைப்பற்றி ஒரு சித்தர் Water lilly என்று ஆங்கிலத்திலும் தாவர இயல் பெயர்

படி Pontederia vaginalis (சீதேவிச் செங்கழு நீர்ப்) பற்றிய ஒரு சித்தர் பாடல்.

கல்லெனும் பாஷாணத்தைக் கட்டுவிக்கும் மேகத்தைக்
கொல்லும் உடலைக் குளிர்விக்கும் உல்லாசம் ஆக்கும்
உயிர் நிலையை ஆதரிக்கும் எஞ் ஞான்றும் மாகற்ப மூலிகை மகிமை''

அடுத்து நாட்டுப் படலத்தில் மக்கள் நலம் ஆரோக்கிய வாழ்க்கை இவை பற்றி இரண்டு பாடல்கள் குறிப்பிடுகிறார்

''கூற்றம் இல்லை ஓர் குற்றம் இன்மையால்
சீற்றம் இல்லை தம் சிந்தையின் செம்மையால்
ஆற்றல் நல்லறம் அல்லது இலாமையால்
ஏற்றம் அல்லது இழிதகவு இல்லையே''

மக்கள் கோபம் தாபம் அகற்றி சிந்தையிற் செம்மையால் நன்கு வாழ்கின்றனர். திருமூலர் திருமந்திரத்தில் ஒரு பாடலில் சிந்தையிற்செம்மையை மெய் ஞானம் எனகுறிப்பிடுகிறார். இதோ திருமூலர் பாடல்.

''உடம்பார் அழியின் உயிரார் அழிவர்
திடம்பட மெய் ஞானம் சேரவும் மாட்டார்
உடம்பை வளர்க்கும் உபாயம் அறிந்தே
உடம்பை வளர்த்தேன் உயிர் வளர்த்தேனே

கோசல நாட்டில் வீசும் நறும் காற்று மக்களை ஆரோக்கிய மாக வைக்கிறது சுத்தமான பிராண வாயு (Oxygen) கலந்துள்ளது என்பதை குறிப்பிடுகிறார். இதோ பாடல்

''கோதைகள் சொரிவன குளிரிளநறவம்
பாதைகள் சொரிவன பருமணி கனகம்
ஊதைகள் சொரிவன உறை உதும் அமுதம்
காதைகள் சொரிவன செவிநுகர் கனிகள்''

ஊதைகள் என்றால் நறுங்காற்று உறை உதும் அமுதம் என்றால் சுத்தமான பிராண வாயு உறைந்துள்ள நறுங்காற்று என பொருள் படும். பிராண வாயுவின் முக்கியத்தை சித்தர் நூற்களில் எவ்வாறு குறிப்பிடப்பட்டிருக்கின்றது என் பார்ப்போம்.

''ஆவியென்ற பிராணவாயு புருவமீது அடங்கினால் மறுபிறவியுண்டாம் பாரு!
ஆவியென்ற பிராணவாயு முக்கோணத்தில் அடங்கினால் மறுபிறவி இல்லை இல்லை!
ஆவியென்ற பிராணவாயு மூலத்துள்ளே அடங்கினால் வெளி வெளியாய் வளர்ந்து நிற்கும்! ஆவியென்ற பிராணவாயு அறு கோணத்தில் அடங்கினால் வெளியோட வெளியாய் போமே! ஆக இந்த இரண்டு பாடல்களையும் உற்று நோக்கும் போது கம்பரின் மருத்துவ அறிவுபுலனாகும்

''இன்னொரு பாடலைப் பார்ப்போம்:-

தாய் ஒக்கும் அன்பின் தவம் ஒக்கும் நலம் பயப்பின்
சேய் ஒக்கும் முன்னின்று ஒரு செல்கதி உய்க்கும் நீரால்
நோய் ஒக்கும் எனின் மருந்து ஒக்கும் நுணங்கு கேவின்
ஆயப்புகுங்கால் அறிவு ஒக்கும் எவர்க்கும் அன்னான்''

இந்தபாடல் அரசியல் படலத்தில் வருகிறது நாட்டின் மன்னன் தாயாகவும், சேயாகவும், தவமாகவும் இருப்போதோடல்லாமல் மருந்தாகவும் அறிவாகவும் விளங்குகிறான் மக்களுக்கு ஆக மருந்தை ஒப்பிடும் முறை மருந்தியலைப்பற்றி கம்பர் தரிந்திருந்ததினாலேயாகும்

கீழ்வரும் கம்பரின் பாடலில் இலக்கிய நயத்துடன் மருத்துவ குறிப்புகளையும் பார்ப்போம்

''எண்ணில்லா அருந்தவத் தோன் இயம்பிய சொல்
மருமத்தின் எறிவேல் பாய்ந்த
புண்ணில் ஆம் பெரும் புழையில் கனல் நுழைந்தா
லெனச் செவியில் புகுத லோடும்
உள்நிலாவிய துயரம் பிடித்து உந்த
ஆர் உயிர் நின்று ஊசலாட
கண் இலான் பெற்று இழந்தான் என உழந்தான்
கடுந்துயரம் சால வேலோன்''

வர்மம்; என்றால் மருமம் அல்லது வர்ம இடம் மர்மமான இடம் என்று பொருள் படும். அந்த இடத்தில் வேல் பாய்ந்தால் வலி எவ்வளவு இருக்கும் அதோடுமட்டிமா? அந்த புண்ணில் மேலும் தீயைக் கொண்டு சுட்டால் எப்படியிருக்கும் வேதனையின் அளவே சொல்ல முடியாது! மேலும் ஒரு உவமை சொல்கிறார் கண் தெரியாதவன் மருத்துவத்தால் கண்பார்வை பெற்று மீண்டும் ஏதோ ஒரு காரணத்தினால்

கண்ணை இழந்தால் எந்த வித வேதனை இருக்குமோ அந்தவித வேதனை யடைந்தான் என்கிறார், கம்பர் மருத்துவக் கருத்துகளை ஒப்பு நோக்கும் தன்மையைப் பாருங்கள்.

அடுத்ததாக அயோத்தியா காண்டத்தில் தாடகை வதம் முடிந்தபின் மிதிலை நகருக்கு இராமனையும், இலக்குவனையும் அழைத்துச் செல்கிறார். அரண்மனை மேல் மாடத்தில் இருந்து சீதை ராமனை நோக்குகிறாள். ஊர்வலத்தில் வரும் பொழுது இராமனும் நோக்குகிறான் காதல் மலர்ந்தது அதைத் தொடர்ந்து காதல் நோயும் வளர்ந்தது. படுக்கையும் நொந்தது. பாலும் கசந்தது, மேனி மெலிந்தாள் அரண்மனையில் சீதைக்கு நடக்கும் வைத்தியத்தையும் செவிலியப் பராமரிப்பையும் பற்றி பாடுகிறார் பாருங்கள்

''தாயரின் படி சேடியர் தாதுஉகு
வீ அரித்தளிர் மெல் அணை மேனியில்
காய் எரிக் கரியக் கரிய கொணர்ந்து
ஆயிரத்தின் இரட்டி அடுக்கினர்''

தாது உகுவீ அரித்தளிர் என்றால் பசும் சத்துடைய மெல்லிய தளிர் இலைகள் என பொருள்படும். மெல்லிய பசும் தளிர் மூலிகைகளை கொண்டுவந்து பரப்பி அதன் மேல் சீதையை படுக்கவைத்தனர். காதல் நோயால் வாடிய சீதையின் உஷ்ணத்தினால் அந்த இலை வாடிக் கருகின. கருகிய இலைகளை எடுத்து விட்டு மேலும் மேலும் கொண்டு வந்து அடுக்கினர் இன்னும் ஒரு பாடலை பாருங்கள்

''தாதியர், செவிலியர், தாயர், தவ்வையர்
மாதுயர் உழந்து உழந்து அழங்கி மாழ்கினர்
யாது கொல் இது என எண்ணல் தேற்றினர்.
போதுடன் அயினிநீர் சுழற்றிப் போற்றினர்''

தாதியர் என்றால் A.N.M, செவிலியர் என்றால் (Nurse), தாயர்என்றால் டாக்டர், தவ்வையர், என்றால் Maternity Asst ஆகிய நால்வரும் மிகவும் துன்பப் பட்டு வருந்தி சீதைக்கு பணி செய்தனர் ஆரத்தி முதலிய திருஷ்டி சுற்றிப் போடும் காரியங்களையும் செய்தனர். ஆகவே வைத்தியதுறையில் பல்வேறு துறை மாதர்களையும் கம்பர் காட்டுகிறார்.

அடுத்தபடியாக வில்லை ஒடித்து சீதையை மணம்புரிகிறான் இராமன். இராமன் திருமணத்திற்கு கோசல நாட்டிலிருந்து மிதிலைக்கு தசரதர் படைகள் எல்லோரும் புறப்பட்டு வருகின்றனர், வருகிற வழியில் சந்திர கயிலமலை என்ற மலை அடிவாரத்தில் பரிவாரங்கள் தங்குகின்றன. அங்கு யானைப்படையினர் யானைகளை மரங்களில் கட்டி வைத்து விட்டு ஒய்வு எடுக்கிறார்கள் அதில் ஒரு மரம் ஏழிலம் பாலை மரம். ஏழிலம் பாலைப்பட்டையின் மணம் மதம் பிடித்த யானையின் மூக்கில் இருந்து ஒழுகும் நீரின் மணத்தைப் போலிருக்கும் கம்பரின் மருத்துவ தாவர இயல் அறிவை இங்கு கவனிக்க வேண்டும். ஆக இந்த யானை யானது ஏழிலம்பாலைமரத்தை ஆலேசத்துடன் தாக்கியது அந்தமரத்திற்கு மதம் பிடித்து விட்டதோ என எண்ணி மரத்தை ஒடித்து தூள் தூளாக்கியது. இதை ஒரு பாடலில் கம்பர் காட்டுகிறார்

''பாத்த யானையின் பதங்களின் படுமதம்நாற
காத்த அங்குசம் நிமிர்ந்திட கால்பிடித்து ஒடி
பூத்த ஏழிலம் பாலையை பொடி பொடி ஆக
கரத்திரங்களால் தலத் தோடும் தேய்த்தது.
ஒரு களிறு''

இந்த ஏழிலம் பாலை மரத்தை தாவர இயல் பெயர்படி Alstonia Scholoris என்று சொல்கிறார்கள் இது ஒருகிருமி நாசினி, இந்த பட்டையால் குஷ்டம் குணமாகும் என்று சித்தர் நூலில் கூறப்பட்டிருக்கிறது

இவ்வாறு பல மேற்கோள்களை காட்டலாம் இரண்டு காண்டங்களில் இருந்துதான் இங்கு காட்டப்படுகிறது.

---



# இந்திய முறையில் பல் மருத்துவம்

பி. முருகன்,
இறுதியாண்டு B.I.M.

முன்னுரை:

ஒரு மனிதனுக்கு முக்கியமான உறுப்பு முகம். இந்த முகத்திற்கு அழகை கொடுப்பது பற்கள். இந்த பற்கள் இல்லை என்றால் முகத்திற்கு அழகு இல்லை. பற்கள் இருந்தால் வார்த்தைகளை ஒழுங்கான முறையில் உச்சரிக்க முடியும். இவை இல்லை என்றால் ஒழுங்கானமுறையில் வார்த்தைகளை உச்சரிக்க முடியாது. பற்கள் இருப்பதால்தான் நாம் உண்ட உணவு நன்றாக அறைக்கப்பட்டு விழுங்கப்படுகின்றன. பல் நமக்கு இன்றியமையாதது என்பதை கூறும்போது

''பல் போனால் சொல் போச்சு''

''ஆலும் வேலும் பல்லுக்குறுதி
நாலும் இரண்டும் சொல்லுக்குறிதி''

என்று கூறப்பட்டுள்ளது.

பற்கள் ஒரு தடவை விழுந்து முளைக்கின்றன. அவை ஒன்று குழந்தை பருவத்தில் முளைக்கும் பற்களுக்கு பாற்பற்கள் (Milk teeth) என்று பெயர். இதற்குப் பின்பு முளைக்கும் பற்கள் எல்லாம் நிலையான பற்கள் கடைசியில் முளைக்க கூடிய பல்லுக்கு அறிவுப்பல் என்று பெயர். இது தவிர நாம் பற்களை சரியான முறையில் சுத்தம் செய்யவில்லை என்றால், இருமல், சலதோஷம், காய்ச்சல், காது நீர் வடிதல், கழிச்சல், இந்த கழிச்சல் சில நேரங்களில் மஞ்சள் நிறமாகவோ, அல்லது பச்சை நிறமாகவோ, செரித்தும் செரியாததுமாக செல்லும், இனி இக்கட்டுரையின் கீழ் பற்களால் உண்டாகும் நோய்கள் என்ன, என்ன என்பதை பற்றியும் அவற்றை எவ்வாறு போக்குவது என்பது பற்றியும் இதன் கீழ் நின்று ஆராய்வோம்.

**நவீன முறை மருத்துவத்தில் பல் தேய்க்கும் முறைகள்:**

1) காலையில் எழுந்த உடன் பல் துலக்கும் முன் தனது ஆள்காட்டி விரலைக்கொண்டு பல் ஈறு பக்கமும் பல்லிலும் தேய்க்க வேண்டும். இப்படி தேய்ப்பதால் இரத்த ஓட்டம் உண்டாகும்.

2) நல்ல மிருதுவான பிரஷ்ஷைக் கொண்டு முதலில் வெளிப்பக்கம் உள்ள பற்களை தேய்க்க வேண்டும். பின்பு உள்பக்கம் உள்ள பல்லை தேய்க்க வேண்டும்.

3) பல்லைத் தேய்க்கும் போது முதலில் மேல் உள்ள பற்களை மேலிருந்து கீழ்நோக்கி தேய்க்கவேண்டும்.

4) கீழ் உள்ள பற்களை கீழ் இருந்து மேல் நோக்கி தேய்க்கவேண்டும்.

5) பின்பு பல்லை வட்ட வடிவமாகத் தேய்க்க வேண்டும்.

6) மேலும் வெளி நாடுகளில் பல்லை தேய்ப்பதற்கு மின்சாரத்தினால் ஆன பிரஷ்களை உபயோகப் படுத்துகின்றனர். பற்களை ஆறு மாதத்திற்கு ஒரு முறை பல் மருத்துவரிடம் காட்டுவது நல்லது.

**இந்திய முறை மருத்துவத்தில் பல் தேய்க்கும் முறைகள்:**

**பல் தேய்க்க உபயோகிக்கும் குச்சியின் அளவு:**

பொதுவாக துவர்ப்பு, கைப்பு உள்ள குச்சிகள்தான் பயன்படுத்தப்படுகின்றன. மேலும் இந்த குச்சிகள் பட்ட மரங்களிலிருந்தோ அல்லது வாடிய மரங்களிலிருந்தோ இல்லாமல் நல்ல செழிப்பாக

உள்ள மரங்கள் அல்லது செடிகள் கொடிகள் இவற்றிலிருந்து குச்சியை எடுக்கவேண்டும். பல் தேய்க்கப் பயன்படும் குச்சியின் அளவு சிறுவிரற் பருமனும் சாணளவு நீளமும் உள்ள தாயும் இருக்கவேண்டும்.

குச்சிகளை உபயோகிக்கும் விதம்;

1) குச்சியைக்கழுவி, ஒரு நுனியை நன்றாகக் கடித்து மிருதுவானகுஞ்சம் போலச் செய்துகொள்ளவேண்டும். நுறைவரும் மட்டும் சுவைக்க வேண்டும்.

2) இடமிருந்து வலமாக ஒவ்வொரு பல்லை யும் நன்றாகத் தேய்த்து இடுக்குகளிலிருக் கும் ஊத்தையைப் போக்கவேண்டும்.

3) பின்பு அதே குச்சியை இரண்டாகப் பிளந்து நாவை வழிக்கவேண்டும். பின்பு 12 தடவை வாய் கொப்பளிக்கவேண்டும்.

பற்களில் வரக்கூடிய நோய்கள்:

பல்லில் முக்கியமாக இரண்டுவித நோய்கள் உண்டாகின்றன. அவைகளாவன:

1) பல் சிதைவு நோய் அல்லது சொத்தை நோய்.

2) பல் ஈறையும், பல்லை சுற்றி உள்ள எலும்புகளையும் தாக்கும் நோய்.

1. பல் சிதைவு நோய் (or) பல் சொத்தை நோய் உண்டாவதற்குரிய காரணங்களும் தடுக்கும் முறைகளும்.

நாம் உண்ட உணவில் உள்ள துணுக்கு கள் பல்லில் தங்கி அவை அங்கே பல நாட் கள் இருந்து கிருமிகளாகவும் அமிலங்களாக வும் மாறி, பற்சிப்பியையும் புல்லில் உள்ள வேர்க்குள்ளே செல்கின்றன. இதனால் பல் வேர் (Root Swelling) வீங்கிக் காணப்படுகின் றன. பின்பு இதில் சொத்தை உண்டா கின்றது.

இதைத் தடுக்க:

''வரும் முன் காப்பது நன்று'' என்பதற் கேற்ப நாம் சாப்பாட்டுக்குப் பின்பு நன்றாக பல்லைத் தேய்த்து அதாவது நாம் உண்ட உணவுத்துணுக்குகள் பல்லில் தங்காவண்ணம் பார்த்துக்கொள்ளவேண்டும்.

1) பல்லின் வேரில் வீங்குகின்ற வீக்கத்திற்கு இந்திய முறை மருத்துவத்தில்உபயோ கிக்கப்படும் மருந்துகள்.

1] ஏதாவது ஒரு எதிர்ப்பு சக்தி மருந்து (Anti-biotic Medicine) ஒன்று கொடுக்க வேண்டும். (உ-ம் ரசகெந்தி மெழுகு)

2] ஏதாவது ஒருவலி நிவர்த்தி (Analge-stic) மருந்து ஒன்று கொடுக்கவேண் டும். (உ-ம் தாளி சாதி சூரணம்)

3] ஏதாவது ஒரு வீக்கத்தை குறைக்கக் கூடிய (Anti-inflamatory drug) ஒன்று கொடுக்கவேண்டும். (உ-ம்) திரிகடுகு சூரணம்.)

4] வெளிபிரயோகமாக (External applli cation) அரக்குத் தைலம். இலவங்கப் பட்டைத் தைலம் இவைகளில் ஒன் றைத் தடவ வேண்டும்,

5] கிராம்பை தணலில் வதக்கி வாயி லிட்டுச் சுவைக்க பற்களின் ஈறு கெட் டிப்படும்.

2) பல்லில் இரத்தக் கசிவுக்குக் காரணம்:

பல்லில் (Calcium) கேல்சியம் சத்துக் குறைவதால் பல்லின் ஈறிலிருந்து இரத்தக் கசிவு ஏற்படுகின்றன.

பல்லில் இரத்தம் கசிவதைத் தடுக்க:

இந்திய முறை மருத்துவத்தில் கேல்-சியம் சத்து நிறைந்துள்ள பற்பங்கள், பழவகைகள், இவை போன்றவைகள் கொடுக்கப்படுகின்றன,

கொடுக்கப்படும் பற்பங்கள்:

1) முத்துசிப்பிப்பற்பம் 2) முத்துப் ப்ற்பம் 3) பவளபற்பம் இவை போன்று கேல்சியம் சத்து நிறைந்த பற்பங்கள்.

பழவகைகள்:

1) தக்காளி 2) ஆப்பிள் 3) ஆரஞ்சு 4) காட்டு நெல்லிக்காய் 5) கேரட் போன்ற பழவகைகள். இது தவிர முட்டை, மீன் இவைகளும் கொடுக்கப்படுகின்றன.

மேலும் மேலை நாடுகளில் குடி நீரில் புளோரின் சேர்த்து குடிக்கிறார்கள். இதனால் பல்லுக்கு நல்லது. இது போன்று தினசரி

நாம் சாப்பிடும் காய்கறிகளிலும் கேல்சியம் சேர்ந்த காய்கறிகளே அதிகமாக சேர்த்து சாப்பிட வேண்டும். இதனுல் பல் வன்மை பெறும்.

மேற்கூறிய இவைகள் தவிர சித்த மருத்துவத்தில் பல்பொடியாகவும், வாய் கொப்பளிக்கக் குடிநீரும் கொடுக்கப்படுகின்றன. அவைகள் யாவன;

1) கருவேல் (Acacia arabica) பட்டையை உலர்த்திப் பொடி செய்தேனும், சுட்டு கரியாக்கியேனும் பற்களேத் தேய்த்து வர பல்லாட்டம் ஈறில் இரத்தம் வடிதல் நீங்கும்,

2) கடுக்காயைப் பொடி செய்து பல்துலக்க ஈறுவலி ஈறிலிருந்து வடியும் இரத்தம் நிற்கும்.

3) பீக்கருவேல் (Acacia farmesiana) பட்டையை முறைப்படி குடிநீரிட்டு வாய் கொப்பளித்து வர பல்லீற்றிலிருந்து வரும் குருதி நிற்கும்.

4) காவிக்கல்லேக் கொண்டு பல் துலக்கிவர பல்வலி, பல்கூச்சம், பல்ஈற்றில் இரத்தம் முதலியன நீங்கும்,

3. பல்லரணேக்கு: (GINGIVITIS)

1) கல்நார்பற்பத்தை 5 முதல் 10 அரிசி யெடை தேனில் கொடுக்கவேண்டும்.

2) வெளிப்பிரயோகமாக பல்துளி தைலத்தைத் தடவவேண்டும்.

3) பொடிகள்:

1] பாக்கை வறுத்துப் பொடித்து அவ்வெடைக்கு காசுக்கட்டி, இந்துப்பு, ஓமம், படிகாரம் சேர்த்துப் பொடித்து பல் தேய்த்துவர பல்லரணே, ஈறுவீக்கம், வாய்நாற்றம் முதலியன நீங்கும்.

2] சீனக்காரத்தைக் கொண்டு பல் தேய்க்க பல்லரணே தீரும்.

4) கொப்பளி குடிநீர்:- நறுவிலி (Cordia angstifolia) கொட்டையைக் குடிநீரிட்டு வாய் கொப்பளித்து வர பல்லரணே, பல்லசைவு, ஈறுகட்டு இவை நீங்கும்.

4. பற்புழுக்கு (Canin Teeth):

1) சூடனே பற்பொடியுடன் சேர்த்து பல் துலக்கிவர, வாய்நாற்றம் பற்புழு நீங்கும்.

2) காற்ரேடிக்காய் (ஆதொண்டை) பூண்டு, மிளகு, சுக்கு, பனேவெல்லம் இவற்றை நேர்கூறுகச் சேர்த்தரைத்துத் துணித் துண்டிற் பூசிப் பற்களிடையே புழுவுள்ள இடத்தில் வைக்கலாம்.

3) பாகலிலேச்சாறு, சிறுவழுதுணேச்சாறு எள்நெய் இவற்றை ஓரளவாகக் கூட்டி வாயிலிட்டுக் கொப்பளிக்கவும்.

5. பற்சுற்று, பற்கொதிப்பு இவற்றிற்கு மருந்து:

1) இருவேலி, விலாமிச்சு, கீழாநெல்லி, எருக்கு, உத்தாமணி, நத்தைச்சூரி, சிவனர் வேம்பு குறுந்தொட்டை, பேராமுட்டி, சிறுபீளே, சண்பகமொட்டு, கருஞ்சீரகம், திப்பிலி, சுக்கு தேவதாரு இவைகளேக் குழிப்புட நெய்யிறக்கிப் பயன்படுத்திக் கொள்ளவும்.

6. பல்கூச்சத்திற்கு (Hypersensitivity)

நவீன மருத்துவத்தில் Emoform, Sensoform, Thermoseal போன்ற Pasteகளே உபயோகப் படுத்துவது போல நம் இந்திய முறையில் பல் கூச்சத்திற்கு கீழ் கண்டவைகள் பயன்படுத்தபடுகின்றன.

1) காவிகல்லேக் கொண்டு பல் தேய்த்துவர பல்கூச்சம் நீங்கும்.

2) நாயுருவி (Achyranthes aspera) பச்சை வேரால் பல் துலக்கிவர பல் அழுக்குகள் நீங்கி அழகுண்டாகும்.

7. பல்லாட்டத்திற்கு மாற்று :

[Chronic Destructive Peridonn]

1) சுக்கு, மிளகு, மஞ்சள், கடுக்காய், இந்துப்பு, வெளிச்சப் பிசின், திப்பிலி, வெங்காரம். முதியார் கூந்தல், வேலிப்பருத்தி வேர், பெருமருந்துவேர், கழற்சிப்பருப்பு ஓரளவாக தூக்கிப் பொடித்து தேனிலிழைத்துப் பல்லாட்டத்திற்கும், பற் கட்டிக்கும் பூசி வெந்நீரில் வாய்க் கொப்புளித்து வரவும்.

2) காய்ச்சுக்கட்டியை வைத்து பல்தேய்த்து வர பல் அசைவு நின்று உறுதிபடும்.

3) தூதுளை வேரால் பற்றுலக்கி வெள்வே லெண்ணெயை உபயோகிக்கலாம்.

4) ஆலம் விழுதைக் கொண்டு பல் துலக்க பல் இறுகும்.

5) புதினு பூண்டினை நன்ருக உலர்த்தி பொடித்து பல் துலக்கிவர பல் வன்மை பெறும்.

6) கருவேல் இலை பற்களிலுண்டாகும் பல வகைப்பட்ட நோய்களைப்போக்கி அவை களை கல்லுக்கு ஒப்பாய் அசையாமல் நிலைக்க செய்யும்.

8. **பொதுவாக பல்வலிக்குப் பயன்படுத்தும் மருந்துகள் : (Dental pain)**

பொதுவாக பல்வலி என்றுல் ஏதாவது ஒரு Anti-biotic, ஒரு Analgesics, ஒரு external application oil, ஒரு Mouth wash இவைகளை கொடுக்கவேண்டும்.

**உள் மருந்துகள் : (internal medi cines)**

1) கல்நாற் பற்பத்தை 5 to 10 அரிசி யெடை எடுத்து தேனில் கொடுக்க வேண்டும்.

2) இலவங்கப்பட்டை இலையிலிருந்து எடுக்கும் எண்ணெயை பல்வலிநோய்க்கு கொடுப்பதுண்டு.

3) நவாச்சராத்தை நன்னுரிவேர்க் குடிநீரில் கொடுக்க பல்நோய் தீரும்.

**வெளி மருந்துகள் : (External application)**

1) சாதிக்காய்த்தூளை நீரில்போட்டு வாலை யிலிட்டு வடிக்கின்ற எண்ணெயை பல் வலிக்குப் பூசலாம்.

2) எல்லாவித பல்நோய்களுக்கும் பல்துளி தைலத்தை வெளி பிரயோகமாக பயன் படுத்தலாம்.

**வாய் கொப்பளிக்க: (Mouth wash)**

1) திரிபலா சூரணம் 10 to 15 அரிசியெடை எடுத்து வெந்நீரிலிட்டு வாய் கொப் பளிக்க வேண்டும்.

2) ஒரு அக்கரகாரத் துண்டை வாயிலிட்டு மென்று வருவதாலும், அக்கிரகாரத்தை ஊறல் செய்து வாய் கொப்பளித்து வரு வதாலும் பல்வலி நீங்கும்.

3) ஒதி மரம் அல்லது உதிரமரம் இதன் பட்டையை குடிநீர் செய்து வாய் கொப் பளிக்க பல்வலி, வாய்ப்புண், நாப்புண் தீரும்.

4) குடசப்பாலைப்பட்டையை குடி நீரிட்டு வாய் கொப்பளிக்க வலி தீரும்.

**பல் தேய்க்க:**

1) காட்டாமணக்கு பாலை வலியுள்ள பல் லில் வைக்க, பல்வலி குணமாகும். பல் வலி உள்ளவர்கள் இதன் குச்சியில் பல் துலக்கி வருவதுண்டு.

2) சுக்கை வாயிலிட்டு மெல்லபல்வலிபோகும்

3) தாளிசபத்திரியை பொடித்துப் பல் தேய்க்க பல்வலி நீங்கும்.

4) நந்தியாவட்டத்தின் வேரை வாயிலிட்டு மென்றுல் பல்வலி நீங்கும்.

5) வெட்பாலை (Wrightia-tinetoria) இலையை மென்று சுவைக்க பல்வலி நீங்கும்.

6) வெங்காரத்தை கொண்டு பல் தேய்க்க பல்வலி போகும்.

9. **பல்கழலை: (Odontoma)** பல்வஸ்துவினுல் இக்கழலை ஏற்படும் பல் அம்சம் வேரி லிருந்து (or) வளரும் பல்லிலிருந்து இது கிளம்பும். உண்டாகும்போது சீத சவ்வுக்கீழ் மறைந்திருக்கும். 20லிருந்து 25 வயதுக்குள் இது எழும்பும். அப்போது சீழுண்டாகலாம். இதனுல்தான் அதைப் பற்றி முதலாவது கவனிக்க நேரிடுகிறது இவை பலவகைப்படும்.

1) **ஆவரகப்பல்கழலை; (Epithelial odon-tome)** பல்லின் தந்த உருப்பிலி (Enamel organ)ருந்து எழும்பும் பல பைகளுள்ள கழலை. கீழ்தாடையில் ஏற்படும் நீர்ப் பைக்குள் எண்ணை போன்ற வழவழ வென்ற (εgrlairy) நீர் இருக்கும்.

2) பைப்பல் கழலே (Folliculor odontome): தாசன நீர்ப்பை தந்த நீர்ப்பை (Dentigerouscyst) என்று அழைக்கப்படும். பிசின் போன்ற நீருள்ள பையுள்ளது, பை உறையில் சரியாய் வளராத சிறிய பல் ஒன்று சம்பந்தமாக இந்த நீர்ப்பை ஏற்படும். பெரிதாக வளர்ந்திருக்கும்.

3) நார் வஸ்து பல்கழலே (Fibrous odontome):- நார் வஸ்து சுற்றிக்கொண்டு அது வளராதபடி தடுப்பதால் இது ஏற்படும். பல் உறையைச் சுற்றியிருக்கும் நார்வஸ்து மிதமிஞ்சி வளர்ந்து பல்லேச் சூழ்ந்திருக்கும் பைக்குள் பல்லிருப்பதால் இதற்கும் முற்றும் நார்வஸ்துவாலுண்டாகும் கழலேக்குமுள்ள வித்தியாசமறியலாம்.

4) கலப்புப் பல்கழலே:-

தந்த வஸ்து, பல்வஸ்து, சாந்து வஸ்து இவற்ருல் அமைப்புப் பெற்றவை. தாடைகளில் (Jaws) கிளம்பும் பல்வேரின் (or) வித்துவி சகல அம்சங்கள் (or) சில அம்சங்கள் ஒன்ருகக் கலந்து உண்டாகும். இது பிராயத்திலேயே ஏற்படலாம். மிருதுவானதும் இலகுவாக அமுங்காததுமான கட்டியாகத் தோன்றும் சாசுவத பல்லிற்குப் பதிலாக இது கிளம்பும். சீழ் போன்ற வடிநீர் வெளியாகும். மேல் பாகம் அழுகுவதினுல் சிலவேலே இக்கட்டி வெளியே தள்ளப் படலாம். மூக்கு வளேயில் (or) மேல் தாடை ஓடு(Maxillary sinus)வில் இக் கழலேயை எலும்புக்கழலே என்று தப்பிதமாய் எடுத்துக் கொள்வதுண்டு. இக் கழலேயை வெட்டினுல் தகடுகள் போன்ற அமைப்பைப் பார்க்கலாம்.

முடிவுரை:

மேற்கூறிய பல் நோய்கள், எல்லா மருந்துகளிலும் தீரவில்லே என்ருல் அந்த பல்லே எடுத்து விடுவதுதான் நல்லது. இக் காலத்தில் நவீன முறையில் பல்லே எடுப்பதற்கு Local Anaetheisa injection போட்டு மரக்கச் செய்து பற்களே எடுத்துவிடுகிருர்கள். ஆனுல் வேறு சில நாடுகளில் Acupuncture என்ற முறைப்படி எந்தப் பல்லே எடுக்க வேண்டுமோ அங்கு மரக்கசெய்து அந்த பல்லே எடுத்துவிட்டு பின்பு அந்த இடத்தை பழைய நிலேக்குக் கொண்டுவருவார்கள். ஆனுல் இந்திய முறை மருத்துவத்தில் முன் காலத்தில் பல்லே எடுப்பதற்கு ஒரு மூலிகை இருந்ததாக் கூறப்படுகிறது நாம் எந்தப் பல்லேஎடுக்கவேண்டும் என்று நினேக்கிருேமோ அந்தப் பல்லின் மேல் அந்த மூலிகையின் பாலேத் தடவினுல் பல் தானுகவே கீழே விழுந்துவிடும். அப்படிப்பட்ட மூலிகைகள் முன் காலத்தில் கிடைக்கப் பெற்றன. ஆனுல் இப்போது கிடைப்பது அரிது.

பார்வை:

1) நோயில்லா நெறி.
2) குணபாடம் மூலிகை.
3) குணபாடம் II & III
4) இரணநூல்

---

## நாட்டிற்கு ஆபத்து

ஒரு நாட்டிலுள்ள மக்களில் சிலர் மூடர்களாயிருப்பதில் ஒன்றும் துன்பம் வந்து விடுவதில்லே. அவர்கள் தங்களே அறிவாளிகள் எனக் கருதிக்கொண்டு செயலாற்றத் தொடங்கும்பொழுதுதான் துன்பம் விளேயத் தொடங்குகின்றது.

ஒரு நாட்டிலுள்ள மக்களில் சிலர் அறிவாளிகளாக இருப்பதில் ஒரு பயனும் உண்டாவதில்லே. ஆனுல் அவர்கள் "தங்களால் எதுவும் செய்ய இயலாது" என்று நினேக்கும் பொழுதுதான் அன்நாட்டிற்கு ஆபத்து விளேயத் தொடங்குகிறது.

— கி. ஆ. பெ.

# தாலாட்டுப் பாடலில் தமிழ் மருத்துவம்

ச. ஆதிநாராயணன், III B. S. M. & S.

முன்னுரை:

தாலாட்டுப் பாடலை அறியாதவர் எவருமே இல்லை. ஏனெனில் அனைவருமே தாலாட்டுப் பாடலை கேட்டு வளர்ந்தவர்கள் தாம். தொட்டிலில் தவழும் குழந்தைக்கு உண்டாகும் நோயையும் அதனைத் தீர்க்க உதவும் மருந்தினையும் பாமர மக்கள் தாலாட்டுப் பாடல் மூலமாக பாடியுள்ளனர். ஒரு தாய் தன் குழந்தையை தொட்டிலில் இட்டு தாலாட்டும் போது பாடும் பாடல்களையும் அவற்றின் கருத்துக்களையும் இங்கு காண்போம்.

உடல் வலி:-

குழந்தை தொட்டிலில் கிடந்து அழுவதைக் கண்டு, அக்குழந்தைக்கு ஏற்பட்ட நோயினைக் அறிந்து விட்டாள் போலும். அதனால்.

உடம்பெல்லாம் நோகுதாம்மா? - கண்ணே
உனக்கு ஒத்தடம் தான் கொடுக்கட்டுமா?
ஏலமும் இஞ்சிச் சாறும் — கண்ணே உனக்கு
எட்டுச் சொட்டு கொடுக்கட்டுமா? — கண்ணே,,

என்று பாடுகிறாள்.

குழந்தையின் உடல் வலிக்கு புற மருந்தாக ஒற்றடமும், அக மருந்தாக ஏலமும், இஞ்சிச் சாறும் கலந்து எட்டுச் சொட்டும் கொடுக்கட்டுமா கண்ணே என பரிவுடன் கேட்கிறாள்.

ஒத்தடம்:

ஒத்தட முறைகள் நோய்க்கு ஏற்றவாறு பல வகையுண்டு என்பதை,

"எண்ணெயிலே ஒத்தடமும் — கண்ணே
வெந்நீரில் ஒத்தடமும்
இன்னம் வேறே ஒத்தடமும் — கண்ணே
உனக்குக் கொடுக்கத் தாதி யுண்டு கண்ணே,,

என்று பாடுகிறாள்.

எண்ணெய் ஒத்தடம் என்பது வாதம் தொடர்பாக வரும் முடக்கு வாதம் (Paralysis) பட்ச வாதம் (Hemi-plegia), கீல் வாதம் போன்ற நோய்களை குணப்படுத்த உதவுகின்றன. பின் வெந்நீர் ஒத்தடமும் கொடுக்கப் படுகின்றன. இவை குழந்தையின் புற மருந்தாகின்றன.

தலை வலி:

"மண்டை யிடி பொறுக்கலையோ கண்ணே
உனக்கு மருந்தரைத்துப் போடட்டுமா
கோரோசனை கொடுக்கட்டுமா?"

என்றும்,

''மண்டையிடி தைலங்கூட — கண்ணே
உனக்கு மாமன் வாங்கி வாராரு
தொந்தரவு செய்யாமே — கண் மணியே
தொட்டிலிலே தூங்கிடம்மா"

என்றும் பாடுகிறாள்

குழந்தைக்கு தலை வலி வந்தால் கோரோசனையை தாய்ப் பாலில் அரைத்துக் கொடுப்பார்கள். மேலும் நீர்க் கோவைக்கு வெளிப் பிரயோகமாகவும் இதனை பயன் படுத்தி நோயினைத் தீர்ப்பர்.

மண்டையிடித் தைலம் என்பது நீலகிரித் தைலம், யூகலிப்டஸ் எண்ணெய் முதலியன ஆகும். இவை மண்டையிடியை போக்குவதால் 'மண்டையிடி தைலம்' என வழங்கப் படுகிறது. குழந்தை மண்டையிடியினால் அவதிப்படும் பொழுது இத்தைலத்தை தடவி நோயினை குணமாக்கினார்கள்.

கை, கால் வீக்கம்:

''கை காலு வீக்கத்துக்கு — கண்ணே உனக்கு
கணை எண்ணெய் வாங்கித் தாரேன்
மலை போலே வந்தாலும் — கண் மணியே
பனி போல விலகிடு தம்மா!''

குழந்தைகளுக்கு ஏற்படும் ஈரல் நோயினால் கை, கால் வீக்கம் ஏற்படும். அதற்கு கணை எண்ணெய் சிறந்த மருந்து எனக் கூறுகின்றாள்.

கணை எண்ணெய்:

வசம்பு — ஒரு துண்டு
மூக்கிரட்டை வேர் — சிறிது

இரண்டையும் இடித்து ஆமணக்கு எண்ணெயில் கலந்து காய்ச்சி வடி கட்டி எடுத்துக் கொள்வதே 'கணை எண்ணெய்' எனப்படும். வாரம் ஒரு முறை இவ்வெண்ணெயினை குழந்தைகளுக்கு கொடுத்து வர வீக்கம், காமாலை, சோகை, ஈரல் வீக்கம் முதலியன தீரும்.

வயிற்று வலி:

''வயிற்றுளைச்சல் மிஞ்சிப் போய்க் கண்ணே
உனக்கு வயிற்று வலி வந்துடுச்சா?
வெற்றிலையும் உப்பும் வச்சிக் — கண் மணியே
வெறும் வயிற்றில் தின் னுடம்மா''

மிகையான அளவு உணவு உண்டதன் விளைவாக வயிற்றுளைச்சல் ஏற்பட்டு வலியுண்டானல் வெற்றிலையில் சிறிது உப்பு வைத்து வெறும் வயிற்றில் உட்கொண்டால் வயிற்று வலி தீரும் என்று கூறுகிறாள்.

குடலேற்றம்:

''குடலேற்றம் என்றிட்டாலும் — கண்ணே
கறுப்பி குடல் தட்டுவாள் பயப்படாதே''
என்கிறாள்.

குழந்தையை தலை கீழாக தூக்குவதாலும் தாழ்ந்த பகுதியில் தலை வைத்துப் படுப்பதாலும் குடல் தன் நிலை தவறி ஏற்றம் கண்டு அதனால் வயிற்றிரைச்சல், பேதி முதலியன ஏற்படும். இதனை நிறுத்த எந்த மருந்தாலும் முடியாது என்பதை

''குடலேற்றம் தெரியாமல் கோடிப் பணம் செலவழித்தான்''
என்ற பழமொழி உணர்த்துகிறது.

குடலேற்றம் கண்ட குழந்தையை குப்புற படுக்க வைத்து, நடு முதுகின் மேல் சாம்பலை தடவி விடுவர். இடுப்புப் பகுதியிலிருந்து கழுத்துப் பகுதி வரையுள்ள முள்ளந் தட்டுச் சதையினை இரண்டு விரல் இடை வெளியிட்டு இரு கைகளால் நெட்டை வாங்குவது போல் மடித்துத் தூக்குவர். இவ்வாறு இரண்டு முறை செய்தால் குடலேற்றம் நீங்கி வயிற்றிரைச்சல், பேதி முதலியன தீரும். இம்முறை தற்காலத்திலுள்ள PHSIOTHERAPY போன்ற ஒரு வகை உடற் பயிற்சியாக அமைந்துள்ளது.

முடிவுரை:

மேற்கண்ட பாடல்களின் மூலம் அக்கால தாய்மார்கள் தமிழ் மருத்துவத்தை எங்ஙனம் அறிந்துள்ளனர் என்பதையும், எவ்வளவு எளிய முறையில் மருந்துகளை பயன்படுத்தினர் என்பதும் புலனாகிறது. இன்றும் நம் தமிழகத்தில் மக்கள் இம்மருந்துகளை பயன்படுத்தி வருகின்றனர்.



# சித்த மருந்து

ப. மணிவாசகம், B.A.,
II B. S. M. S.

I குமரிக்கண்டம் கண்ட திந்த கொள்கை மருந்து
கோலத்தமிழ் பெற்றெடுத்த ஞால மருந்து
அஞ்சும்வினை ஒட்டிவைக்கும் அறிய மருந்து
ஆதிசிவன் தந்த திந்த சித்த மருந்து!

பொதியமலை அகத்தியனும் சொன்ன மருந்து
போற்றும் குகை வனந்தனிலே பிறந்த மருந்து
அரிதான சத்துமுள மூலிகை மருந்து
ஆருயிரின் நோய் தீர்க்கும் சித்த மருந்து!

II கட்டுகளங்கு சுண்ணமென்று வகுத்த மருந்து
காரியத்தில் வீரியமாய் விளங்குமருந்து ... உயிர்
விட்டதேகம் விழித்தெழவும் குளிகை மருந்து
உயர் ஞானியவர் செய்துவித்த சித்த மருந்து!

அட்டசித்தும் பெற்றுவிக்கும் அரிய மருந்து
ஆலகால விடந்தனையும் போக்கு மருந்து
கட்டிவைத்த உடல்தனையே காக்கு மருந்து காய
கல்ப மென்று கண்டுவைத்த சித்த மருந்து!

III சித்தர்களின் யோகத்தால் வந்த மருந்து
சீவர்களின் பாவத்தைப் போக்கு மருந்து
ஒற்றரெனும் நாடியினல் அறியு மருந்து
ஓங்கு குற்றம் சமப்படுத்தும் சித்த மருந்து!

பொன்னிறமாய் உடல் விளங்க தங்க மருந்து
புடமிட்டால் பொடியாகும் பற்ப மருந்து
செந்நிறமாய் விளங்குவதும் சிறந்த மருந்து
செந்தூரம் என்றழைக்கும் சித்த மருந்து!

IV உலோகவகை உபரசமாய் பிரிந்த மருந்து
உப்புகளாய் பாடாணங் கண்ட மருந்து
செப்புவகை நோய்ப்பெயருங் கொள்ளு மருந்து
சீவசக்தி தாவரத்தில் தழைத்த மருந்து!

விந்துவுடன் நாதமுமாய் விளங்கு மருந்து
விளைநிலமாய் உயிர்தழைக்க வந்த மருந்து
சந்ததமும் சிவரசமாய்க் கலந்த மருந்து
சாகாமல் நிலைநிறுத்துங் குருகுளிகை மருந்து!

V அகமருந்து புறமருந்தா யான மருந்து
ஆலவிட மதனையும் அழிக்கு மருந்து
உடனீரா யுள்குடிக்க உவந்த மருந்து
உயர்போத நாதத்தில் ஓங்கு மருந்து!

நரைத்தெரியா நற்குடியா யாக்கு மருந்து
நரர்களையேத் தேவர்களாய்க் காக்கு மருந்து
குறையிருந்தால் மருந்ததனின் குற்ற மறிந்து
முறைத்தெளிவாய் முன்னுரைத்தார் முறிவு மருந்து!

VI பயனீளக் கொடுப்பதற்காய்ப் பகர்ந்த மருந்து — பழகிச்
செயநீரிற் சேர்த் தரைக்கும் சீவ மருந்து
திறனுடனே வலிமைதனைப் பெற்ற மருந்து — பெருந்
திராவகத்தில் உருவாகி வளர்ந்த மருந்து!

பத்தியமாய்க் கடைப்பிடித்துப் பழகு மருந்து — பாரில்
நித்தியமா யுடல்விளங்க சோதி மருந்து
சத்தியமாய்ப் பெரியோர்கள் தேர்ந்த மருந்து - சித்த
வைத்தியமாய் தமிழ்கொண்டு தழைத்த மருந்து!

VII முக்குற்றஞ் சமப்படுத்தும் மூல மருந்து — திரு
மூலரவர் கண்டுரைத்த மூத்த மருந்து
சொற்குன்றம் போல்விளங்கும் நூலு மறிந்து — பொருள்
சோதித்து சுத்தி செய்வர் தீட்சை மருந்து!

ஆதார மாறுக்கும் ஆகு மருந்து — சிவப்
பேருக்குங் குண்டலியை யெழுப்பு மருந்து
நேராக்கும் உள்வெளியின் மூச்சு மறிந்து — உயிர்க்
காலாக்கும் பிராணனதைப் பிடிக்கு மருந்து!

VIII போகமுனி சொல்லிவைத்த புனித மருந்து
போற்றிப்பாட புலவர்களைத் தந்த மருந்து
நாதமுனி கண்டதிந்த லிங்க மருந்து
நாடுசுரம் ஓடவைக்கும் சித்த மருந்து!

அனைத்துலக மருந்தினிலும் நல்ல மருந்து
ஆருயிரின் இயக்கத்தை அறிந்த மருந்து
தினைத் துணையுங் கொடுத்திடலா முப்பு மருந்து
திலகமென புவிபோற்றும் சித்த மருந்து



# பிரளி நிதானம்



டாக்டர், ஜோசப்

சீர்பெறும் கமல பாதம் திருவடி தன்னைப் போற்றி
பாரநூல் அணிந்த மங்கை பைங்கொடி உமையாள் பெற்ற
ஆர்பெறும் பொதிகை வாழும் ஆறுமுகக் கடவுளன்பால்
1 பேர்பெற பிறந்த பாலன் பிரளிநோய் தன்னைச் சொல்வார்.

சொல்லிய பிரளிதானும் துடர்ந்திடும் விபரம் கேளு
மெல்லியாள் அருந்தும் அந்த மாங்கிஷ முறுகதாற்றித்தாலும்
நல்லகம் எண்ணெய் தண்ணீர் கலர்ந்து விஷத்தினாலும்
2 தொல்லை தேர் முலையதில் துடர்விஷம் படருமென்றே.

அடர்ந்திடும் பிரளிவாய்வு அக்கினி பிரளி பச்சை
துடர்ந்திடும் சுரப் பிரளி, சுந்த்தரப் பிரளியோடு
சுடர்ந்திடும் பிரளி துட்டு கட்டுடன் குறுக்குந்தீரை
3 படர்ந்திடும் விஷப்பிரளி பகர்ந்தநல் பிரளியாமே.

ஆமென்ற சுவாசகாய மதிசாரப் பிரளியோடு
காமென்ற விமலகண்டம் கட்டுசெய் பிரளி முக்கல்
தாமென்ற இளைப்பு விக்கல் நடுக்கலாம் பிரளியோடு
4 தாமென்ற பேர் மூவாறும் சாத்தியம் அசாத்தியங்களே.

சாத்தியமாம் வாய்வுப்பிரளி, தருமக்கினி பிரளி பச்சை
பார்த்திடும் சுரப்பிரளி பருந்துட்டுப் பிரளி தீரை
கரந்திடும் மஞ்சள் தொந்தம் கடு நடு நடுக்கல் தானும்
5 சேர்ந்திடும் ஈளைப்பிரளி ஐந்தும் திடம் பெறத் தீருமென்றே.

நீலதுடி மலகண்டன் திறமுள்ள முறுக்கல், விக்கல்
வேறுன சுவாசம் முக்கல் — பிரளி நீர்ப்பிரளியோடு
ஆறுன விஷப்பிரளி அதிசாரம் இருமலுந்தான்
6 தீனத்து அசாத்தியந்தான் செய்குணம் சிகிச்சை கேளே

**வாய்வுப் பிரளியின் குணம்:-**

கேளே பலவுந்தான் கெட்டும் கிறுகிறென்று சுரம் காயும்
நாளே கழியும், வயறூதும் நவின்றே முலையுண்ணுது
தூனென் அலறும், துடிதுடிக்கும், சுற்றும் கண்கள் பருமுளியாய்
நாளே வாய்வுப் பிரளியிது நன்றாய் உரைத்தார் நண்ணுதலே.

**எண்ணெய்:-**

கேளேரண்டம் எண்ணெய் படி, கிளறும் வெந்தயம் ஈரெண்டு
நாளே சுருக்கியிலே சாறரையும், நல் ஈருள்ளி அரிந்திட்டு
சூளக்காச்சி இவ்வப்பதத்தில் சூடவேயிடித்துக் கொடுப்பீரேல்
8 நாளே வாய்வுப் பிரளியது நன்றாய்த்தீரும் கண்டீரே.

**அக்கினி பிரளியின் குணம்:-**

அக்கினி பிரளியது காந்தல், இருமல், காச்சலுமாய்
உண்டால் பாலுடன் தட்டும் உணந்த மலமும் தான் கறுக்கும்
கண்டால் குழவிபீனல் நாறும், கரையும் விளறிகுரல் கம்மும்
9 திண்டார் குழலாளே செய்யும் குணங்கள் இதுவாமே.

**எண்ணெய்:-**

குமரிச்சாறும்,, மருதகியும் கூட்டி கழாயமிட்டிறுத்து
வேருஞ் சீரகம் ரோகிணியும் ஓமக்காயம், இந்திப்பூ
சவாசரெண்டத் தெண்ணெய் தாளில்தக்க மெழுகுபதம் வடித்து
10 தர்மம் அறவேதான் கொடுக்கில் சாற்றும் பிரளி தவறிடுமே.

**பச்சைப் பிரளியின் குணம்:-**

குடுவேன் பாலன் அடிவயறும் இனைந்தே வலித்து விரணமுடன்
வடுவே களியும்படி காட்டிதான் பச்சையிலையின் நிறம் போலே
கடுகே சிறுக சுரம் காயும், கை கால் அசதிமிகவாகி
11 மடவார் கையில் தரியாது மருவும் பச்சைப் பிரளியிதே.

**மருந்து:-**

நயமாய் உதரும் பிரண்டையிலே, நரியார்பயறு இலையுடனே
பயமாய் ஈருள்ளி இவையெல்லாம் வாட்டிப் பிளிந்த சாறுதன்னில்
பயந்தீராவின் புல்லுரு விதமாய் உரைத்துக் கொடுப்பீரேல்
12 நயந்தீர் பச்சைப் பிரளியது மாறிப்போகும் கண்டிரே.

**கால்ப்பிரளியின் குணம்:-**

குதம்போல் வயறுதான் பொருமி குடலைப் பிரட்டி வாந்திக்கும்
அதிகசுரமும் காய்ந்துவரும், அலறும், முலையும் உண்ணுது
பதிகத்துடன் நீர் இறங்காது பாவை பயந்து கண் சுழலும்
13 துதிகம்போலே முகம் மினுங்கும், சுரத்தின் பிரளி என்று எண்ணே.

**நெய்:-**

ஏரெண்டெண்ணெய் கால்படியில் இசையும் குன்றிவேருடனே
சீராயிக் கொற்று இலையும் தான் சேர்த்துப் பிளிந்த சாறுசமன்
பாரும் பூடு வெந்தயமும் பதிவாய்ப் புகழஞ்சி அரைத்து
14 நேரே எரித்து மெழுகுபதம் நிகழும் கரண்டி அளவாமே

அளவாய்க் காயும் சுரமோடு அடர்கிரந்தி வரும் மேனி
வளம் போல் ஊதி வீக்கமுடன் வரியாய் நயவ முளியாது
களங்கமிருந்து கல பிணக்கும் கா, காவென்று சுவாசமுமாய்
15 வளம்போல் இந்த குணம் கண்டால் மரிக்கும் பிளைப்பது அரிதாமே.

**துட்டுப்பிரளியின் குணம்:-**

துட்டுடன் மலமும் கட்டி துறங்கல்போல் உதரம் நொந்து
மட்டுடன் முலையுண்ணுது, வானதியும் அதிகம் உண்டாமே
பட்டைவாய் புனலும், நாறும், பாலகன் உடல்தளர்ந்து.
16 வெட்டென காயும் மேனி, என்றிடும் பிரளிதுட்டே

**எண்ணெய்:-**

தோகையர் பால் முன்னுழி செறியசின்னி பொடுதலையும்
வாகர் பெரியதும் வகையுடன் வளரும் பருத்தி, ஈருள்ளி
வாரும் சாறு வகையுளக்கு, வளர் வெள்ளுள்ளி, இந்திப்பு.
17 தாகும் காந்தமரை கழஞ்சி சாற்றிலரைத்துக் காச்சுவதே
காய்ச்சு மெழுகுபதம் வடித்துக் காசிடைக்கொடு வென்னீர் விட்டு
சேசித்துட்டுப் பிரளியது இசையும் மாந்தம் வயறூதல்
வாச்சும் பத்தியம் அன்னைக்கு வாகாய் காக்கவிள் வீரேல்
18 தீர்ச்சை படுவ தீருமென்று சேரவுரைத்தார் செந்துருவே.

**முறுக்கப் பிரளியின் குணம்:-**

முறுக்கும் பிரளியது ஊதுவயறு வாயுவதும்
கறுக்கும் மலமும் போகாது, கண்ணும் பெரிய முளி முளிக்கும்
மருவும் முறுக்கும் வலிவலிக்கும், வாயில் நுரைதான் தள்ளி
19 வந்திருக்கும் முலையுண்ணுது தீனதந்தகக் குணந்தானே.

**எண்ணெய்:-**

தாணுதிருடிப்பால் ஈருள்ளிச்சாறு, நால்கழஞ்சி
வேணுஞ் சிற்றேரெண்டு எண்ணெய் விளங்கும் பத்துசுவடதிலே
பூணும் காயம் ஒருகழஞ்சு புகழ எரித்து மெழுகுபதம்
20 தோணவடித்து காசிடை கொள்ள சுடுநீருடனே புகட்டிடுமே.

**தீரப்பிரளியின் குணம்:-**

இடம் பெரிய தீரப்பிரளியது இசைந்தே வயிற்றுள் பிரண்டெழுந்து
உடனே யிரைந்து சத்தலுமாகி உறக்கமன்றி அலறிஅழும்
துடியே துடிக்கும் மலங்கழியும், சுமைபோலக் காயும் முலையுண்ணுர்
21 அடவாய் இளைக்கும் குணம் கண்டால் அறிவாய்த் தீரேப்பிரளியென்றே.

**மருந்து:-**

முசுட்டைத் தண்டும் பனங்கதிரும், முதலி மலரும்
பிறித்தி மண்டை காட்டில் வகை ஐமோதம் கழாயமிட்டுதான்
இறக்கி வாட்டி அரைத்து கொடுத்திடுகில் மாறும் தீரேப் பிரளியது
22 மாட்டில் விழுந்து பயந்து ஒடும் நன்று இதனைக் கொள்வீரே.

**விஷப்பிரளியின் குணம்:-**

கொள்ளும் விஷத்தின் பிரளியது இடுக்கிய தலையின் நடுகில் நடுக்கம்
கள்ளுப்போலே நீர் இறங்கும், கழிபோல் மலமும் கழிந்து
உள்ளம் காய்ந்து வியர்வையுமாய் ஒற்றக் கரைந்து துவக்கிவரும்
23 தள்ளை முலையுண்ணுதுசாகும் பிழையாதறிவீரே.

**பேதப் பிரளியின் குணம்:-**

பேதப்பிரளியின் குணம் கேளாய் பொருமு வயறு இரைப்புண்டாகும்
கோதாய் மலமும் போகாது குடலைப்பிரட்டி வாந்திவரும்
மாதர் முலையுண்ணுது, வலுவைக் குறைக்கும், வாயுலரும்.
24 மோதாய் மூக்கும் மூச்சுண்டாம் முழியே சுழலுஞ்சித்தமிதே

சித்தா இளைக்கும், ஜலம் ஒழுகும், திட்டுத்திட்டென முக்கும்
முத்தாய் மூக்கில் நீரெடுக்கும், முதர்ந்த குணத்தைக் கண்டினல்
சுற்றுங்காட்டு மேதிப்பால், கலரையெண்ணெய் ஏரண்டம்
25 வற்றக் காச்சி காசிடைகொள், வயறுகழியும், வலிதீரும்.

**தொந்த பிரளியின் குணம்**

வலிக்கும் வயறு கொளுந்துடனே மாந்தத்துட்டு கழிச்சலுமாய்
வலித்தும் முலையுண்ணுது வருமூச்சுடனேயிடு நடுக்கல், குளிர் தாகம்
பேய்போல் முளிக்கும் குரல் கம்மும், சிலித்தே இளைக்கும்.
26 பரதவிக்கும் சாதும் யிளையாதாயிளையே

இளகி சுரமும் காய்ந்திருக்கும், வேர்வை நெஞ்சு தலைநோகும்
பளகிக்களையும் பலரெத்தம் பால் முலையுண்ணுது அலறிவரும்
தழுகிகை, கால் அழுக்கேறும், தள தள என்ற முகம் மினுங்கும்
27 அளவு மிகுந்தால் இரைபோகும் அதிசாரத்தின் பிரளியிதே.

**விமல கண்ட பிரளியின் குணம்:-**

இரைப்போடு களைப்புண்டாகி இசைந்ததோர் விரைவாய் நிற்கும்
கரைப்போடு கையும், காலும் கஞ்சுகங் நீரு வாங்கும்
வாப்பட வலியுண்டாகி வாயில் நீர் பதையுந் தள்ளும்
28 விரப்பட விளித்துக் கொல்லும் விமலகண்டன் பிரளிதானே.

தளர்ந்த கால் கண்ணும் சுண்டும் சாயும் நீர்பலமோடெல்லாம்
உன்னிய மருடன்போலே உண்டபாலெதிரெடுக்கும்
தென்னையும் பூவுங் கய்யான் சீர் கமதிரமேலம்
29 பொன்னுங்காணி கழாயமிட்டு புகட்டதிரு பூ மாதே.

**கண்ட பிரளியின் குணம்:-**

பூருப் பூரென்ன வாங்கும் போகாது மலமும் நீரும்
நீரு நீராக மூக்கில் நின்றுதான் சாயும் வேற்கும்
மூரு மூரென்றே காயும் முக்கலும் திட்டுமுட்டும்
30 வேறுவகைப் பிள்ளை யிளைப்பது பெரியோர் சொல்வார்.

**கண்டகப் பிரளியின் களிப்பு :**

வார்பொரி இளநீரப்பம் மலர் சந்தம் கமுகன்பூவும்
நீரடைக்காய் தாம்பூலம் நின்றநாழி துாபதீபம்
சீரகறி வெண்சோற் மஞ்சள் செறுகொட்டை சுதடு
31 மாவால் சீர்பிள்ளை உருவால் வைத்து சீலையும் மதுவுமாமே.

மதுவொடு வெல்லம், எள்ளுவகை அஞ்சு சாவல்கோழி
இதுவும் முன்னரியும் பச்சையெல்லாம் தாய்ப்பிள்ளையைத் தலையைச்சுற்றி
பெரிய பஞ்சச்க்ஷரத்தை வைத்துப் பின் சுடுகாடு தன்னில்
32 தெரியவே கிரியை செய்ய தீர்ந்திடும் திண்ணந்தானே.

**இளைப்புப் பிரளியின் குணம் :**

இருமிடும் இளைத்துக் காயும் தேகமும் புண்போல் நோகும்
வருமலங் கட்டுண்டாகி, வாய்மூலை நவிடாது
துரிதத்தில் இளைப்புண்டாகி சொறிந்திடும் தேகமெல்லாம் இருமி
33 காரண இளைப்புப் பிரளியென்று தானிசைந்த வாறே.

வாறுன ஆடாதோடை, தூதளை, கண்டங்கத்தரியும் முதலியார் பூ
கூறுக தெற்றிமலர் கிளரும் தோலும் கேளு, நிலவேர், மிசிறுமுட்டை நொச்சி
வாறுக சொறியணங்கு செறியதேக்கு வரும்வசம்பு, மல்லி சிங்கிமுட்டை யரத்தை
34 நீறுக இஞ்சிசமன் கழாயமிட்டு நின்பளண்ணை சேர்த்தூட்ட நில்லாதென்றே.

**விளைப்பப் பிரளியின் குணம் :**

நில்லாது விளல்கால் நின்றசுரம் வாத கபம்
சொல்லாது பொருமலாகும், தூக்கமும் அரைக்கண்ணுகும்
அல்லாத வீக்கம் மூச்சு அதிகமாய்க் குளிரும் கை, கால்
35 கல்லாரு முலையுண்ணுது கடினமென்றுரைத்தார் மேலோர்.

**நடுக்கல் பிரளியின் குணம் :**

மேலெல்லாம் நடுநடுங்கும், விசனமாய் வயிற்றினுள்ளே
பாலது கொண்டால் தட்டும் பனித்துஉடன் விட்டுப்போகும்
சீலமாய் சிவக்கும் கண்ணும், நிலவிளி அதிகமாகும்
36 கொல்லப்புருவ மடமாதே! கூறும் நடுக்கல் பிரளியிதே.

**கழாயம் :**

அரிசிவகையும், திரிகடுகும், அழகாய் கழாயமிட்டு இறுத்து
முருங்கை முருக்கின் நெட்டரிந்து முறுகசைத்து, அதில் பிளிந்து
பருத்த வசம்பு அதிலுரைத்து, வரிவாய்க் கரண்டி உள்ளூட்ட
37 உரைத்த நடுகால் பிரளியிது ஓடுங் ஓடுங் கண்டீரே.

கண்டீர் பிரண்டையிலை வாட்டி கசக்கி, பிளிந்த சாறுதனில்
வண்டீர் காயம் தனிலுரைத்து வலுவாய் மூன்றுநாளூட்ட
கொன்றே பிரளிவயிறடியும், குமட்டும் நேசில் பருந்தீரை
38 உண்டாப்போலே பரந்தேறும் உள்ளில் விரணம் ஆறிடுமே.

**கிரியை :**

கமுகன்பூவும், இளநீரும், கருதி அஞ்சு பணியாரம்
திமிரப்பாலும் பழம் நெய்யும் தேனும் சர்க்கரையிட்ட மிற்றம்
வமுத தெற்றி, பிச்சி, மலர்வாசம், புழுகு சாராயம்
39 குமரில் பொரியும் தரியுடனே கோலரூபந் தீபமுமாய்

ஆகுளும் மஞ்சள் மாவாலே அழகால் பிள்ளை உருவெழுதி
வாகும் கொட்டைத் தட்டுடனே வஸ்தீரமடைக்காய் தாம்பூலம்
வேகுஞ் சோறு, உழுந்தம் சோறு, விளங்கும் இரத்த சோறென்றல்
40 தாதுமிவையெல்லாம் வைத்து சுப்பாவில்லா யின்னங்கேள்

சென்றூர் பூவின் சாவலுடன் இயல்பாய் எல்லாம் ஆனதின்பின்
கந்தார் சந்தன ராமிச்சம், கடுகை இடித்துப் பொடியாக்கி
நன்றாய் இடித்து நீர் சொரிந்து நலம்பெற தீட்ட களாமறுதிகன்றுள்
41 முலையாள் குளவி தலை கண்டுகொண்டு கோத்திரியோடொளிவாயே.

எடுத்திட இதனைக் கொண்டு இயலுறத் தியானஞ்செய்து
தொடுத்திடும் குளத்தின்கீழே துரைமடையருகில். வாய்க்காலுக்கடுத்ததோர்
குழவி தோஷம், கனபக்ஷிப் பறவை, புள்ளு, இழுத்திடுந்
42 தேரை தோஷம் இடுங்குழத் தோஷமெல்லாம்.

**பிரளி பதினெட்டுக்கும் குளிகை :**

வில்லேப்பட்டை, அதிமதுரம், மிளகு, கிரும்பு, மாயக்காய்
நல்ல சீரகம், இந்துப்பு, நவிலும் கொட்டம், இலவங்கம்
சொல்லுக் கடுக்காய் வால்மிளகு தேற்ருன்கொட்டை திற்பிலியும்
43 அல்லக் காயும் ரோகிணியும், அக்கரு, அரத்தை, செறுதேக்கு
செறிய சீரகம், வெண்பித்தும், சேந்த நிலவேரோடரத்தை
முதிய உளிஞையோடு பூடு, முலேப்பால், நொச்சி குடிநீரில்
உறவே கட்டஇளைப்பு, இருமல், உற்றப்பிரளியோடு மாந்தம்
44 அறிய நாய்முள் சுரமும் வாந்திவிக்கலது போமே.

**துட்டுப் பிரளிக்கு நெய்:-**

போமே துட்டுப் பிரளிக்குப் பொருந்தும் கும்மட்டிச்சாறு
தாமே சிற்றேரெண்டெண்ணே, தவருதொன்று உழக்கதிலே
ஆமே நிம்ப எண்ணேகொண்டு அறிய மூக்கறைச்சாரணேவேர்
45 நாமே கடலாடியின் வேரும் நல்ல தானிக்காயளவே.

அளவையிட்டு ஈருள்ளி அரிந்தே கரைத்துள்ள தனில்
வளம்பொலெடுத்துக் காசிடைதான், மறக்கும் பிரளித்துட்டு
மலம் அளஞ்சேர் நின்ப எண்ணேயுமாம், அதிலும் இந்தவிதமாகும்
46 தளஞ்சேர் களங்களிதுவென்று தவருதுரைத்தார் தைதலுக்கே.

**பிரளி பதினெட்டுக்கும் எண்ணெய்:-**

கையாந்தகரை, படர்பருத்தி கனத்த மஞ்சணுத்தியே
எடுமெய்யாம் ஆவரையூர் முதலிதும்பை, விளங்கும் ஓரிலேத்தாமரையும்
கையான், கொளிஞ்சிச்சாறு, வகைக்குக் கருதும் அரைக்கால்
47 ரெண்டும் துய்ய எண்ணேப்படி காலில் துலக்கிருள்ளி கால்படுமே.

காயும், வசம்பும் மஞ்சளோடு, கனத்த கொளிஞ்சி வெள்ளரிவேர்
நேசமுடனேதான் கழஞ்செடுத்துமே மூப்பதமாய்த்தான் வடித்து
தாயும், காசிடை அளவாக தவருதே விட்டு வெந்நீரும்
பாயும் பிரளி பதினெட்டும் பறந்தே ஓடும் பார்தனிலே.

— அகஸ்தீசர் திருவடிகளே சரணம்

பிரளி நிதானம் முற்றும் —

குறிப்பு:- N.B. குழந்தைகளுக்கு உண்டாகும் நோய்களில் ஒன்ருன பிரளி நோய்
— பற்றிய உரையை வாலவாகடம் என்ற ஓலேச்சுவடி
யிலிருந்து வெளிக் கொணர்ந்தவர் டாக்டர் A.M. ஜோசப், பி. எஸ். சி; பி. ஜ. எம்;
[Traditional Heale r]

# அறியாத மருந்து

சி. சேகர், II B. S. M & S,

சித்தர்கள் தாது, தாவர, சங்கமப் பொருட்களிலிருந்து சித்த மருந்துகளை தயாரித்தனர். அதைப் பற்றி பல நூல்களில் எழுதியும் வைத்துள்ளனர். இம்மருந்துகளின் செய்முறையை அறிந்த பல மருத்துவர்கள் அவற்றை செய்து நோய்களை குணப்படுத்தி வருகின்றனர். இவ்விதமிருந்தாலும் பல ஏடுகள் நமக்கு கிடைக்காமல், பல அரிய மருந்துகளின் செய்முறைகள் நமக்கு கிடைக்காமலுள்ளது.

சித்தர்கள் தாது, தாவர, சங்கமப் பொருட்களிலிருந்து மருந்துகளை தயாரித்தது மட்டுமன்றி மனிதனின் உடலிலுள்ள பல உறுப்புகளையே மனிதனுக்கு உதவும் மருந்தாகச் செய்துள்ளனர்.

''ஊனுக்கு ஊன் இடலே உசிதம்'' என்பதற்கேற்ப கண்டுள்ளனர். உதாரணமாக பேரண்ட பற்பம் செய்ய மனிதனின் மண்டை ஓட்டை பயன்படுத்துகின்றனர். பேரண்ட பற்பத்தின் செய்முறையையும் பலனையும் நாம் அறிந்துள்ளோம். ஆனல் இது வரை நாம் அறியாத ஒரு மருந்தையும் மனித உடலிலிருந்து எடுத்து செய்துள்ளனர்.

''கொடிச்சுண்ணம்'' எனும் மருந்தின் செய்முறை ஒரு பழைய ஏட்டிலிருந்து எமக்குக் கிடைக்கப் பெற்றது. இதனை எழுதிய ஆசிரியர் யார்? என்பது தெரியவில்லை. ஏட்டில் பல ஏடுகள் கிழிந்து உருக்குலைந்து காணப்பட்டதால் அறிய முடியவில்லை. எஞ்சியிருந்த ஏட்டில் இம்மருந்தின் செய்முறை காணப்பட்டது.

பேரண்ட பற்பத்தில் மனிதன் இறந்த பின்பு அவனின் மண்டை ஓட்டை சுத்தி செய்து பற்பமாக்கி நோய்களுக்கு கொடுத்தனர். ஆனல் கொடிச் சுண்ணத்திலோ மனிதன் பிறக்கும் போதே அவனுடன் பிறக்கும் ''நஞ்சுக் கொடி'' யிலிருந்து மருந்து தயாரிக்கும் முறையைக் கண்டுள்ளார்கள். இம்மருந்தின் செய்முறையை இங்கு படைக்கிறேன்.

''சாற்றுகிறேன் பிறப்பிக்கும்போது பிண்டம்
தன்னுடனே பிறந்தானேர் தனித்துலர்த்தி
யேத்துவோமிது கண்டால் சகல நோயும்
யெந்த வழி போகுமென்றே கும்பாரு
கூற்றவனுமில்லையப்பா குலையுமுல்லை குரு
டருக்கும் கையதுவும் கூடும் கூடும்
பார்த்துவரப் பின்னலே உன்னைக் கண்
டால் பயித்தியமும் பிணி மூன்றும்
பறக்கும் பாரே

அப்பனே அதையெடுத்து செய்யு
மார்க்ககம் அறைகிறேன்
யகண்ட சட்டிக்குள்ளே வைத்துப்
பரவாய்த்
தோடையிலை சாறு நாழி சுண்ட விட்டு
பிறகெடுத்து
பற்பம் பண்ண செப்பியே நோய்க்கு
யணுவளவு
தாக்கிப் பாரு செக சால வைத்தியமும்
கைக் குள்ளாச்சு
தப்பிதமில்லையடா மறைந்த நூலை தல
வாக வுந்தனுக்கும் சாற்றினேமே''

**விளக்கம்:-**

பிறக்கும் போதே உடன் பிறக்கும் பொருளான நஞ்சுக் கொடியை எடுத்து உலர்த்தி அகலமான ஒரு சட்டிக்குள்ளே வைத்து ஆடா தோடையிலைச் சாறு போதுமான அளவு விட்டு 1 நாழிகை சட்டியை எரித்து சாற்றை சுண்ட வைத்து பின் கொடியை எடுத்து பற்பம் பண்ண வேண்டும்.

இந்த சுண்ணத்தை நோய்க்கு அணு அளவே தர வேண்டும். இதனல் சகல நோயும் பறந்து விடும். எமனும் நம்மிடம் வர அஞ்சுவான். குருடருக்கு இம்மருந்தைக் கொடுக்க பார்வைதனைப் பெறலாம். இதனல் பயித்தியத்தையும் போக்கலாம். பிணி மூன்றும் பறக்கும் பாரே என்பதால் வாத, பித்த, கப சம்பந்தப்பட்ட பிணிகளும் தீரும்.

இது போன்ற பல அரிய மருந்து பொக்கிஷங்களை தந்த சித்தர்களின் பல அரிய சுவடிகள் காலப் போக்கில் அழிந்து சிலவே எஞ்சியுள்ளன. அந்நூல்களின் பலன் அறிந்து செய்தால் நம் சித்த மருத்துவம் மென மேலும் தழைக்கும்.

# ஐவகைத் திணையும் அருங்குண மூலிகையும்

பண்டிட் P. முத்துக் கருப்பபிள்ளை,
தலைவர், சித்தவைத்திய சங்கம் மதுரை.

ஆழிசூழ் உலகாம் இவ்வண்டத்தின் கண் நீர் வற்றத் தொடங்கிய பின் முதலில் தோன்றிய நிலப்பரப்பு - தமிழகமும், அதனைச் சார்ந்த பகுதிகளும்; முதலில் முளைத்தெழுந்த மூலிகையினம் - அருகும், அதனைச் சார்ந்த பூண்டுகளும்; முதலில் பிறந்த குடியினர் - தமிழரும், அவர் தம் வழிமுறையினரும்; முதலில் பேசப்பட்ட மொழி - (அகரத்தையே முதலாவது ஒலி வடிவமாய்க் கொண்ட) - தமிழ்; தமிழரால் முதலில் மேற்கொண்ட தொழில் - வேளாண்மை; தமிழர்தம் பிணி நீக்க முதலில் மேற்கொண்டது - தமிழ் மருத்துவக்கலை; மருத்துவக் கலையினை முதலில் போதித்தது - தத்துவச் சித்தர்கள்; சித்தர்களால் செப்புவிக்கப் பெற்றது - ஆய கலைகள் அறுபத்து நான்கு; காலத்தால் முந்தியது, கோலத்தால் அழியாதது, குவலயத்தோருக்கு வழிகாட்டுவது - ஞாலத்தில் சிறந்ததான தமிழும், தமிழர் தம் கலைகளும் மட்டுமேயாகும் என்றுள்ள மறுக்கவியலாத, மாற்ற முடியாத, ஒப்புக் கொண்டே தீரவேண்டிய இவ்வுண்மைகளை உலகெங்கிலும் பிற்காலத்தில் தோன்றிய அறிவுலக மேதைகளும், ஆய்வறிவாளர்களும், சரித்திர நூலோரும், தகமைசால் சான்றோரும் அட்டியின்றி ஏற்றுக் கொண்டுள்ளனர் என்பதை நாமறிவோம்!

அவ்வகை இலக்கியச் சான்றுகளுள், ஒல்காப் பெரும் புகழ்த் தொல்காப்பியம் செப்புவது பற்றிச் சிறிதாய்வோம். இந் நூலின் படி, பண்டைத் தமிழகம் குறிஞ்சி - முல்லை - மருதம் - நெய்தல் - பாலை என்ற பெயர்படும் ஐவகைப்பட்ட நிலப்பிரிவுகளாக வகுக்கப் பெற்றிருந்தமை புலனாகிறது. இந்த ஐ வகைப்பட்ட நிலமும் ஐவகைத் திணை என அழைக்கப் பெற்றன. இங்கு, ஐவகைத் திணை பற்றியும் - அங்குள்ள சிறப்பு மூலிகையின் இணைப்புப் பயன் பற்றியும் ஓரளவு கூறப்பட்டுள்ளது.

## ஐவகைத் திணை (நிலம்)

குறிஞ்சி நிலம்:- இது நோய்க்கு இருப்பிடமாகிய மலைநிலமாகும். இங்கு விளையும் பொருட்களுக்கு வன்மையுண்டு. சேவற் கொடியையுடைய முருகனது இடமாகிய குறிஞ்சியில் -பிணிக் கூட்டத்தின் தளபதியாகிய கபநோயும், மற்றும் குருதியை உறிஞ்சும் சுரமும், வயிற்றில் ஆமைக்கட்டியும் உண்டாகும். இங்கு விளைவனவற்றுள் குறிஞ்சி, வேங்கை, காந்தல் முதலிய மலர் வகைகளும் - தேக்கு, அகில், அசோகு, நாகம், மூங்கில், சந்தனம் முதலிய மரவகைகளும் சிறப்புடையனவாகும்.

இந்நிலத்தின் அகவொழுக்கம் (காதல வாழ்வு) குறிஞ்சிக்குரிய ஒழுகலாறு எனப்படும் குறிஞ்சித்திணையாகும். குறிஞ்சி என்பது பன்னிரு ஆண்டிற்கொருமுறை மலரும் சிறப்புடையதொரு செடியாகும். இதனைப் போன்றே பன்னீராண்டளவில் பூப்பெய்திய தலைமகளைத் தலைவன் களவினுட் புணரும் நெறிக்கு குறிஞ்சித்திணை எனப் பெயராகும். இக்குறிஞ்சியினைப் பற்றி குறுந்தொகை எனும் இலக்கியம் "......சாரல்; கருங்கோற் குறிஞ்சிப் பூக் கொண்டு, பெருந்தேன் இழைக்கும் நாடனொடு நட்பே." என இயம்புகின்றது. இதிலிருந்து, குறிஞ்சிப்பூ மலர்ந்தபின் வண்டினுக்குத் தேன் மிகத் தருவது போன்றே - தலைவி பூப்படைந்தபின் தலைவனுக்கு மிக்க இன்பத்தினைக் களவினுள் அளிப்பாள் என அறியலாம். இதன்மூலம் குறிஞ்சித் திணையின் பொருத்தத்தினை உணர்ந்து, வியக்கலாம்.

குறிஞ்சி நிலத்தின் புறஒழுக்கம் (வீர வாழ்க்கை) வெட்சித்திணைக் குறியீட்டைக் கொண்டதாகும். இத்திணைக்குரிய மறவர் பசு நிரையினைக் கவர அயர்வின்றி, பசிதாகத்தைப் பொருட்படுத்தாமல் வெட்சி மலரணிந்து செல்வர் - கவர்ந்தும் வருவர். இவர்களைப் போன்றே தமது பசுவினை இழந்து விடாமல் காப்பதற்கும், இழந்தபின் மீட்பதற்கும், வெட்சியோடு கரந்தைமலர் சூடி எதிர்த்துப் போராடுவோரும் மறவரே. வெட்சி மலர் சோர்வையும், தாகத்தையும் போக்கினுல், கரந்தையின் மணமோ வீர எழுச்சியினைத் தந்து மாற்றானை அழிப்பதற்குச் செயல்படுத்தும். வெற்றி தெய்வமாகிய கொற்றவைக்குரிய மலர் வெட்சியும் - அழிவு தெய்வமான உருத்திரனுக்குரிய மலர் கரந்தையும் ஆகும். கரந்தை என்பது விட்டுணு கரந்தை, சிவகரந்தை எனப் பலவகைப் படினும் - அழிக்கும் தெய்வம் சிவமாக இருக்கும் காரணத்தால் இப்போருக்கு சிவகரந்தையினையே கொள்ளல் வேண்டும். இவையெல்லாம் சித்தர்கள் பல்லாற்றானும் உணர்ந்து கூறியதேயாகும். திணைகளுக்குரிய, மூலிகையின் மருத்துவக் குணங்கள் பலவாகும். ஒன்றிரண்டுக் கீழே கூறப்பட்டுள்ளது அவை.

(1) குறிஞ்சி பன்னிரு ஆண்டுக்கொரு முறை மலரும் ஒரு கற்ப மூலிகையாகும். இது, புணர்ச்சியினுல் இழந்த சக்தியை மீட்டுத் தருவதுடன், உடலுறவின் இன்பத்தையும் பெருக்க வல்லதாகும். மேலும், அழகும் வலிவும் கூடி, வாழ்நாளையும் பெருக்கும் (2) நறுமணமிக்க வெட்சிச் செடியின் மலரினுல் மேகச் சூடு, தாகம் சுரம் உடல் அசதி, கழிச்சல் வெள்ளை, குருதிக்கொதிப்பு, இரத்த வாந்தி, குமட்டல், விக்கல் முதலியன நீங்கும். (3) சிவ கரந்தையினுல் தாது நட்டம், வாந்தி சுவையின்மை, பசிக் குறைவு, வாதாதிக் குற்றக் கலப்பு, கரப்பான், சொறி முதலிய பிணிகள் நீங்குவதுடன்; உடலுக்கு அழகும், வலிவும் செழிப்பும் கூடும்.

(2) முல்லை நிலம்:- இது, கால் நடை வளம் கொண்டதாகும். பாற்கடலில் பள்ளி கொள்ளும் திருமாலின் இடமாகிய முல்லைப், பகுதியில்-பிணிக் கூட்டத்தின் அமைச்சரான **பித்த நோயும்**, மற்றும் வல்லைப் பிணியும், வாதசார்பான பிணிகளும் வந்தெய்தும். இங்கு விளைவனவற்றுள் முல்லை, குல்லை, தோன்றி, பிடவம் முதலிய மலர் வகைகளும்; கொன்றை, காயா, குருந்து முதலிய மரவகைகளும் சிறப்புடையனவாகும்.

இந்நிலத்தின் அகவாழ்வு எனக் கூறப்படும் காதல் வாழ்க்கைக் குரிய குறியீடு முல்லைக் குரிய ஒழுகலாறு எனப் பொருள் படும் முல்லைத்திணை என்பாதம். அதற்குரியபொருத்தமாவது- முல்லை கார்காலத்தில் மலரும் சிறப்புடையதொரு கொடியினமாகும். அக்கொடி போன்றே தலைவி கார்காலத்தில் தலைவனது வரவுக்கெனக் காத்திருந்து, அவன் வரவு நோக்கி அகம் மலருவாள். இப்பொருத்தத்தினுல் இந்நெறி அகவாழ்வில் முல்லைத் திணை எனப் பெயர் பெறும். முல்லை மலர் மொக்காக இருக்கும் பொழுது கூர்மையாயும், மலர்ந்த பின் மென்மையாகவும் அழகாகத் தோன்றும். இங்ஙனமே, தலைவி மாற்றான் தீண்டா வண்ணம் முள் போன்ற கூர்மையுடையவளாகவும் - தன் கணவனுக்கு மென்மை யொடு, தூய்மையும் அழகு முடையவளாகத் தோன்றுவாள், முல்லையின் மலரும் இலையும் சீழ்க் கட்டிகளையும், முலைப் பால் கட்டியதனுலான தொல்லையையும் நீக்குவாது போன்ற இம் முல்லை கணவனைப் பிரிந்து கலங்கி யுள்ள தலைவியின் மனத் துன்பத்தையும் நீக்கி, அவளுக்குப் பிரிவினைத் தாங்கும் சக்தியினைக் கொடுப்பதாகும் எனச் சிறப்புரைக்கப் படும்.

முல்லைத்திணைக்குரிய புறத்திணை வஞ்சியாகும். வெட்சிப் போரில் தோற்றோடிய படையினரை, ஆருச்சினத்துடன் வெற்றி பெற்ற மறவர் கூட்டம் வஞ்சிப் பூச்சூடி தொடர்ந்து சென்று போரிடுவர். தோற்றோடியவரும் தமதுயிரைப் பொருட்படுத்தாது வஞ்சியொடு காஞ்சிப்பூச் சூடி எதிர்த்துப் போராடுவர். இவ் வீரவொழுக்கம் வஞ்சித்திணை எனப் பெயர் படும். வாடாத் தன்மையுடைய வஞ்சி செம்மை நிறமுள்ளதாகும். இம் மலரின் சாரம் உள்ளக்கிளர்ச்சியை ஊட்டுவதால் போர் வெறியினைத் தூண்டும். காஞ்சிக்கு, ஆற்றுப் பூவரசு என்ற பெயருமுண்டு. இது ஆற்றோரத்தில் வளருவதால் இதன் வாழ்வு நிலையற்றதாகும். எனவே. நிலையாமையைக் குறிக்க

ஆன்றோர் காஞ்சியைக் கூறுவர். இதனால் உடல் வலி, அயர்வு தாகம் நீங்கும். வஞ்சி மறவர்கள் வஞ்சிமலரையும்,அதனைத்தடுக்கும் மறவர்கள் வஞ்சியொடு, காஞ்சியினையும் சூடிப் போரிடுவது கருத்துள்ள காட்சியாகும்.

நிற்க, முல்லை நிலத்திற்குரிய ஊசி மல்லி கைப் பூ எனவும் கூறப்படும் முல்லையினால் கணமாந்தம், வயிற்றுப்புசம், சிசுக்களுக் குரிய உதிரசம்பவப் பிணிகள், சோபை, சுரம் முதலியன நீங்கும். இம்மலரை மாலை யாகவோ, கூந்தலிலோ அணிந்துகொள்ள இதன் நறுமணத்தால் மூளைக்கு ஊக்கமும், தெளிவும் தருவதுடன்; தனது மனநோயால் விளைந்து தொல்லைதரும் உட்சூட்டுப் பிணி களையும் அகற்றிவிடும்.

(3) மருதநிலம்: இது நீர்வளம் மிக்கதா கும் வச்சிராயுதத்தையுடைய இந்திரனின் இடமாகிய மருதத்தில் சிருட்டிகர்த்தாவான பிரம்மன் எக்காலமும், எந்நோயையும் உண் டாக்கவொட்டான் எனக் கூறப்படும். அதா வது, இங்கு விளையும் அறுசுவைப் பொருட் களை உண்டுவர மக்களது முக்குற்றப் பிணி களும் நீங்கும் என உணரலாம். இங்கு விளை வனவற்றுள் தாமரை, குவளை, செங்கழு நீர் முதலிய மலர்வகைகளும், காஞ்சி, வஞ்சி மருதம் முதலிய மரவகைகளும் குறிப்பிடத் தக்கனவாகும்.

இந்நிலத்திற்குரிய காதல்நெறி மருதத் திணையாகும். மருதம் என்பது நீர் நிறைந்து வயல் சூழ்ந்து, வளப்பமுடன் தன்னிச்சை யாக வளரும் தன்மையுடையதுபோல் வளம் செரிந்த வாழ்வுடைய தலைவன் தன்னிச்சை யாகப் பரத்தையரோடு திரிவதும், அது கண்டு வருந்தும் தலைவி ஊடல்கொள்வதும் இத்திணையின் சிறப்பாகும். இம்மருத மரம் பரத்தையின் தீய உறவால்வந்த பால்வினை நோயினை நீக்குவதுடன்; கருப் பையையும், மூளையையும் வலுப்படுத்தும் தன்மையும் கொண்டதாகத் திகழுவதால், இப்புனித மரத்தின் பெயரால் இத்திணை அழைக்கப் பெறுவது சாலப் பொருந்துவதாகும்.

மருதநிலத்திற்குரிய வீரவாழ்வு நெறி உழிஞைத் திணையாகும். உழிஞைக் கொடிக்கு முடக்கொற்றான் என்ற பெயருமுண்டு. மாற்றான் படையொடு சென்று அரணைச் சூழ்ந்துகொள்ளலும் கோட்டையினுள்ளி ருக்கும் மன்னனும், படையினரும் கோட்டை விடாது பாதுகாத்தலும் இத்திணையின் சிறப் பாகும். காட்டரண், நீரரண், மதிலரண் போன்ற தடைகளை கடக்க, மறவர் கூட்டம் உழிஞைக் கொடியினைச் சூடிப் போரிடுவர். முன்னேறி வருபவர்களைத் தடுக்கும் மறவர் உழிஞையொடு, நொச்சியைச்சூடிப் போராடு வர். முடக்கினை ஒழித்து, மூளைக்கும், எலும்புக்கும் வலிமையூட்டவல்ல உழிஞை யினால்; மதிலேறிக் குதித்தல் போன்றவற்றால் அரணைக் கடக்கும் போர்வீரர்களுக்கு ஏற் படும் எலும்பு முறிவு, கைகால் பிடிப்பு, சுளுக்கு முதலியன நீக்கப்படும். உடல் வலியையும், அயர்வையும் போக்கி குருதி யோட்டத்தினை அதிகரிக்கவல்ல நொச்சியின் மணம் போருக்குரிய பேரூக்கத்தினையும் தரும். இதினின்று, உழிஞைத் திணையின் அமைப்புப் பொருத்தத்தனை உணரலாம்.

நிற்க, மருதத்திணைக்கு உரியனவற்றுள் (1) மருத மரத்தினால் பிரமியம், வெகு மூத் திரம், மயக்கம், விதாகம், நீங்காத சுரத்தி னாலான சோர்வு, பெருநோய், கிருமிரோகம் உதரப்பிணி, வறட்சூலை, கழிச்சல் இருதய பலவீனம். புண்புரை, குருதியுடன் இருமல் முதலியன நீங்கும். (2) உழிஞை எனப்படும் முடக்கற்றான் கொடியினால் கீல் பிடிப்பு, சினைப்பு, கிரந்தி, கரப்பான், மலக்கட்டு, குதிவாதம், மேகவாயுப்பிடிப்பு, நரம்புச்சூலை உதிரச்சிக்கல், செவிவலி, மூலம், கப இருமல், வீக்கம் ஆகியன தீரும். (3) நொச்சிச் செடி யினால் பீனிசம், சுரம், வாதம், இரைப்பு, தலைவலி, பல்வலி, முக்குற்றம், இருமல், நீரேற்றம், கழுத்து நரம்பிசிவு, கட்டி, கணுச்சூலை, பிடிப்பு, செரியாமை, உடல் கடுப்பு முதலிய நோய்கள் நீங்கும்.

4 நெய்தல் நிலம்:-

இது, கடல் நிலமாகும். மேற்றிசைக்குப் பாலனாகிய வருணனின் இடமாகியதெய்தலின் பிணிக்கூடத்தின் அரசனாகிய வாதநோய்களும் மற்றும் ஈரல் வீக்கம், குடல்பிதுக்கம், அண்ட வாயு, தூலஉடல் முதலிய நோய்களும் வந்து

சேரும். உப்பு நிலமாகிய நெய்தலில் நெய்தல், தாமரை, தாழை, அடம்பு முதலிய மலர் வகைகளும்- கண்டல், புன்னை, ஞாழல் முதலிய மரவகையும் சிறப்புடையனவாகும்.

இந்நிலத்திற்குரிய அகத்திணை நெய்தாலகும். இது, அல்லியைப் போன்று நீரில் வளரும் ஒரு சொடியினமாகும். கடலையொட்டியுள்ள நீர்நிலைகளில் மட்டுமே வளரும் நெய்தல் கொடி, நீருடன் சேர்ந்து செழித்து அந்நீருடனேயே அழியும் இரக்கத்திற்குரியதாகும். இங்கு, தலைவி தலைவனுடன் கூடிசேரும். சிறப்புடன் மகிழ்ந்து வாழ்வாள். தலைவனோ ஆழ்கடலில் நீண்டதூரம் சென்று மீன்பிடித்து வருவான் அப்படி மீன்பிடிக்க கடலில் சென்றவனது வருகையை நாள் தோறும் ஞாயிறு மறையும் வரை எதிர் நோக்கி வாடியிருக்கும் தலைவி- அவன் வராவிடிலோ; அவனுடன் சென்ற பரதவர் வாயிலாய், தனது கணவன் கடலினுள் மாய்ந்தான் என அறிந்து வாழ்வினையே இழப்பாள். இவ்விரக்கத்திற்குரிய ஒழுகலாறே நெய்தல் திணையாகும். நெய்ப்பசையால் நொய்ப்புத் தன்மையுடையதாகத்திகழும் நெய்தலினால் உடல்வற்றி, உள்ளீரல் கருகி, எலும்புந் தோலுமாகி இரக்கத்திற்குரியவ ராய்க் காட்சிதரும் உடலினரும் வலிவும், தெளிவும், வனப்பும் பெற்றுச் செழிப்புறுவர் புலர்காலை போதில் கடலேகும் தலைவன், அந்திமயங்கிய பின் திரும்பிவரும் வரை அவனையே எதிர் நோக்கி சரியான உணவும் கொள்ளாது இருப்பதால், தலைவியின் உடல் வாடிவற்றும். அப்படி வற்றிய உடலைத் தேற்றித் தெளிவிக்கும் தன்மையுடையதாக நெய்தல் திகழுவதாலேயே இதற்கு நெய்தல் திணை என்ற பெயர் மிகப் பொருத்தமாக அமைந்தது எனலாம்.

நெய்தலுக்குரிய புறத்திணை தும்பையாகும். வெட்டவெளியில் போர்புரியும் வீர மறவர்களுள், இருபக்கத்தினருமே தும்பை மலர் சூடிப்போரிடுவர். மிகவும் இரக்கத்திக்குரியதானநிலையில், இப்போரில் ஒருவர் கூடப் பிழைக்காது அனைவருமே மடிவதும் உண்டு. தும்பையும் அழித்தல் கடவுளாகிய சிவனுக்குரியதேயாகும் என்பது சிந்தனைக்குரியதாகும். சோர்வு, சோம்பல், தாகத்தினை அகற்றிவிடும் தும்பையினால் போர்வெறியும் தூண்டப்பெறும்.

நிற்க, 1 நெய்தற் கிழங்கினால் பித்த எரிச்சல், அக்கிப்புண், திரிதோடம், வெள்ளை, ரத்தக் கிரகணி, பித்த நோய்கள், குன்மம், மூலம், பெரும்பாடு முதலியனதீரும். கண்ணுக்கு குளிர்ச்சி, சுக்கிலவிருத்தி, உடலுக்கு குளிர்ச்சி விளையும். 2 தும்பையினால் தாகம், சன்னிபாதம், கண்ணோய்கள், முறைசுரம், பீனிசம், சில்விடம், அக்கினிமந்தம். கைகால சதி, சலதோடம், தலைவலி, சிரங்கு, பாம்பு விஷம், முதலியன நீங்கும்.

## 5 பாலை நிலம்

இது, மிகவும் வறண்ட பகுதியாகும். முக்குற்றங்களின் இருப்பிடமாகவே நோயினாலான துன்பத்தைத் தருவதில் பாலைக்கு ஒப்பான நிலம் வேறில்லை. சுருங்கக் கூறின், துர்க்கையின் இடமாகிய பாலையில் நீடித்த ஆயுளுடன் வாழ்தல் அரிதாகும் எனலாம். பாலைநிலத்தில் மரா, குரளா ஆகிய மலர்களும்; உழிகை, பாலை, ஓமை, இருப்பை ஆகிய மரங்களும் சிறந்தனவாகும்.

வசிப்பதற்கு ஏற்புடையதல்லாத பாலை நிலத்தின் அகத்திணை குறிப்பிடத்தக்கதல்லவாகும். பாலையின் புறத்திணைவாகையாகும் தனது இயல்பானதன்மையால் பல தடைகளையும் பொருட்படுத்தாமல் வெற்றிபெறும் பொது ஒழுக்கத்திற்கு வாகைத்திணை எனப் பெயராகும். வாகை மரம் வெப்பத்தைப் பொருட்பத்தாமலும், நீர் வேண்டிவாடி விடாமலும், விரைவாக வளரும் சிறப்புடையதாகும். இதன் ஊட்டச்சத்தினால் நினை வாற்றல் அதிகரிக்கும். எனவே, வெற்றிக்குரிய வாகைத்திணையின் மரமாக வாகை திகழுவது மகிழ வேண்டிய தொன்றாகும்.

நிற்க, வாகை மரத்தினால் பிரமேகம், வாதகிரந்தி, மேகக்கட்டி, பாம்புவிஷம், பசிமந்தம், பித்தவிரணம், தாகசுரம், கந்ததாளி ரோகம், பல்நோய், பல்லீறுதேய்தல், குட்டம், வீக்கம், குருதிமூலம், உஷ்ணபேதி, வெட்டை முதலியன நீங்கி; உடலுக்கு அழகும், வலிமையும் உண்டாகும்.

நிற்க, வாகைத்திணையில் வரும். 'அறுவகைப்பட்ட பார்ப்பனப் பக்கமும்' என்ற நூற்பாவில், "நெறியின் ஆற்றிய அறிவின் தேயமும்," என்பதற்கு நச்சினார்க்கினியர் "கலச யோனியாகிய அகத்தியன் முதலியோரும் அறிவரென்றுணர்க" என்பர். மேலும், "யோகிகளாய் உபாயங்களான் முக்காலமும் உணர்ந்த மாமூலர் முதலியோர் அறிவன் தேயத்து அனைநிலை வகையோராவர்" என்றும் உரைக்கின்றார். எனவே, தொல்காப்பியத்தை நுட்பமாக நோக்கின் அகத்தியரையும் அவர் வழிவந்த மாமூலரையும் அவர்கள் அருளிய சித்த மருத்துவ நுட்பத்தினையும் காணலாம்.

அதே நூற்பாவில், "நாலிரு வழக்கில் தாபத பக்கமும்" என்பதற்கு, நச்சினார்க்கினியனார்," அவ்வறிவர் கூறிய (அகத்தியர், மாமூலர் போன்ற சித்தர்கள்) ஆகமத்தின் வழி நின்று வீடு பெற முயல்வார்க்கு உரியவாகிய எண்வகை மார்க்கத்துத் தவம்புரியும் கூறுபாடுகளும்" எனவுரைக்கின்றார். பின்பு, அவர்" தவஞ்செய்வார்க்குரியன உணவிலும், நீரிலும் சென்ற மனத்தைத் தடுத்தலும், தீயின் நடுவே நிற்றலும், நீர்நிலையிலே நிற்றலும், கடற்கரை, காடு, மலை முதலிய இடத்தில் நிற்றலும், தாமரை, ஆமை முதலிய ஆசனத்திருத்தலும் (பத்மாசனம்- கூர்மாசனம்) உண்ணும் போது பேசாமையும், துறந்த நாளிலிருந்து உரையாடாமையும்" என்று விளக்குவார். மேலும் கூறுகையில். "இனி யோகஞ்செய்வார்க்குரியன இயமம், நியமம், ஆசனம், வளிநிலை, பொறை நிலை, நினைதல், சமாதி என்னும் எட்டாகும்" என்கின்றார். இவையெல்லாம் விரிப்பின் பெருகும். இம்முறைகளை ஆயும் பொழுது இவை சித்தர்கள் செப்பியுள்ள முறைகளாகவே இருப்பதை நன்குணரலாம்.

நிற்க, தொல்காப்பிய புறத்திணையியல் ஐந்தாவது நூற்பாவில் "போந்தை வேம்பே ஆரென வரூஉ, மாபெருந் தானையர் மலைந்த பூவும்" எனவருகிறது. இதிலிருந்து சேரர், பாண்டியர், சோழர் ஆகிய மூவேந்தரது படையினரும் தத்தமக்குள் அடையாளம் தெரிதல் வேண்டி முறையே கற்ப மூலிகைகளான பனம்பூ - வேப்பம்பூ - ஆத்திப்பூ ஆகியவற்றைச் சூடி போர்புரிதல் பண்டைய மரபு என உணரலாம். மேலும், செய்யுளியல் 112-ம் நூற்பாவில் 'வாயுறை வாழ்த்தினை' விளக்கவந்த தொல்காப்பியர் "வாயுறை வாழ்த்தே வயங்கநாடின், வேம்புங் கடுவும் போல் வெஞ்சொல், தாங்குதலின்றி வழிநனி பயக்குமென்று, ஓம்படைக் கிளவியின் வாயுறுத் தற்றே" என அருளுகின்றார்.

அதாவது, வேம்பும், கடுக்காயும் உண்ணும் போது கசப்பு அல்லது துவர்ப்பினைத்தரினும் பிறகு நற்பயனைத்தருவது போன்றே - நல்லோர் சொற்கள் அப்போது செவிமடுக்கக் கஷ்டமாயிருப்பினும், பிறகு நல்லவிளைவினையே நல்கும் என்பதாகும். இவ்விலக்கண முடைய பெரியோர் சொற்கு "வாயுறைவாழ்த்து" என்று பெயர். வாயென்றால் வாய்மொழி, உறையென்றால் மருந்து, வாழ்த்து என்பது வாழவைக்கும் தன்மையாகும் ஐயாயிரம் ஆண்டுகட்கு முன் தோன்றிய தொல்காப்பியத்திலே "வாயுறை வாழ்த்து" என ஒரு குறியீடு உண்டெனில், தமிழ் மருத்துவத்தின் பழைமையைக் காலக் கண் கொண்டு ஆராய்தல் இயலுமோ?

இத்தகு தொன்மையினையுடைய நமது தெள்ளுதமிழ் சித்த மருத்துவம் ஆரியர்களது வருமைக்குப் பிறகு நசிந்தது. நமது மருத்துவச் சிறப்பினைக் கண்டறிந்து கொண்டு, தட்டிக் கேட்க ஆளிமைன்யால், நமது தமிழ் மருத்துவமும் வடவரின் ஆயுர்வேத முறையிலிந்து தான் தோன்றியது என வாய்கூசாமல்கூறி, அதனை உறுதிப்படுத்தவும் தொடங்கினர். அதற்கு முன்னோடியாக சித்த மருத்துவ நூற்கள் யாவற்றையும் அகத்தியர், தேரையர் போன்றோரின் பெயரால் வடமொழி (சம்சுகிருதம்) கலந்தே எழுதினர், பிற்றைநாளில் நமது தாய் மருத்துவத்தை "ஆயுர் வேத வைத்தியத்திலிருந்து தான் வந்தது" என நாமே கூறிப்பெருமைப் படுமளவிற்கு ஆளாக்கப்பட்டோம். மருத்துவச் சொல்லாட்சி (வைத்தியப்பரிபாசை) யென சம்சுகிருதமே நிறைந்ததாகும். இம்மருத்துவ முறை வெள்ளையன் வருகைக்குப்பிறகு மேலும் நசுக்கப்பட்டது. தற்போது கடும் உழைப்புகளைக் காணிக்கையாகத் தந்து கடமையுணர்வுன் பணிபுரியும் சில நல்லோர்களது சேவையினால், மீண்டும் துளிர்விடத் தொடங்கி உள்ளது. இனி விரைவில் வளர்ந்தோங்கி முன்போல் செழிக்கும் என்பது திண்ணம் நீங்களும் உங்கள் பங்கைச் செலுத்தி, தரம் மிக்க தமிழ் மருத்துவம் தழைத்தோங்கிச் சிறப்புற உழைக்குமாறு வேண்டுகிறேன். வணக்கம்.

வாழ்க தமிழ், வளர்க கலை, வெல்க சித்தம்!

# சித்த மருத்துவத்தில் யோகாசனம்

இரா. ஆண்டியப்பன்.
யோகாசன பேராசிரியர், நெல்லை.

"நோயற்ற வாழ்வே, குறைவற்ற செல்வம்" என்று நாம் அனைவரும் அறிவோம். ஆனால் அந்த நோயற்ற வாழ்வை பெறுவதற்கு நாம் சற்றேனும் சிந்தித்தோமா? இல்லையே! நோய் வந்து குணமடைவதை விட நோய் வராமலேயே தடுப்பது மிக நல்லது. என்றும் நிலை பெற்ற சுகத்தைப் பற்றி நமது கவனத்தை செலுத்துவது மிக நல்லதல்லவா. நோய் வராமல் தடுப்பதிலும் வந்த பின் அறவே களைவதிலும் யோகாசனம் ஒரு உறுதியான வழி முறையாகும்.

சாதாரணமாக எல்லா நோய்களும் கீழே சொல்லப்பட்ட காரணங்களினால் தான் ஏற்படுகிறது.

1 அஜீரணம், உணவு செரியாமை.
2 சரியான மலம் கழியாமை.
3 மூளை நரம்புக் கோளாறுகள்.
4 இரத்தக் குறைவு. அசுத்த இரத்தம்.

மேற்கண்ட ஏதேனும் ஒரு கா்ரங்களினால் கூட கண்கள் பாதிக்கப்படலாம். உடலில் உள்ள எல்லா உறுப்புக்களுமே மேற்சொல்லிய காரணங்களினால் பாதிக்கப்படலாம். கண் நோய், குடல் நோய், மலச்சிக்கல், பல் வலி, காது வலி முதலியவைகளுக்கு மருந்துகள் கொடுக்கப்படலாம். நோயாளியின் உடல் நிலமையைக் கவனியாமல் சிகிச்சை வெற்றி பெறுவதில்லை. இன்றைக்கு பல்லாயிரக்கணக்கான மருத்துவர்கள் நாட்டில் இருப்பினும் ஒரு சிலர் மட்டும் மக்கள் மத்தியில் செல்வாக்குப் பெற்றிருப்பதே இதற்குச் சான்றாகும்.

உடல் மருத்துவ முறையில் ஆத்ம சம்பந்தமான செய்திகளை புகுத்தக்கூடாது என்பார்கள். உடலில் மனம் வேலை செய்கிறது. தேகம், மனம், ஆத்மா இம்மூன்றும் ஒன்றுக்கொன்று இணைக்கப்பட்டு நலத்திற்கு ஆதாரமாய் இருக்கிறது. யோக சிகிச்சை தான் இம்மூன்றையும் தொடுகிறது. வியாதியும் பூரண குணமடைகிறது. இதை நன்கு தெரிந்து கொண்ட, வட நாட்டினரும், மேலை நாட்டினரும், மாணவ டாக்டர்களுக்கும், பள்ளி மாணவ, மாணவிகளுக்கும், ராணுவத்தினருக்கும் இப்பயிற்சியை பயிற்றுவிக்கின்றனர். மேல் நாடுகளில் தொலைக் காட்சி மூலமாக இப்பயிற்சியை மக்களுக்கு பயிற்றுவிக்கின்றனர் பஞ்சாப் அரசு யோகாசன நிபுணர்களை சுகாதார இலாகாவில் வேலைக்கு அமர்த்தி மக்களுக்கு இதைப் பயிற்றுவிக்கின்றனர். அந்த அரசு என்னை அம்மாநாட்டில் கலந்து கொள்ள அழைத்ததிலிருந்து இதை நான் தெரிந்து கொண்டேன். ஒருவனின் சுக துக்கங்களுக்கும் வெற்றி தோல்விகளுக்கும், நலமின்மைக்கும் அவனுடைய மன நிலையே முக்கிய காரணம் என்பதை நாம் கண் கூடாக காணலாம்.

உடல் நலம் கெட்டு துன்புறும் போது தான் உடல் நலத்தின் மதிப்பைத் தெரிந்து கொள்கிறோம். உன்னுடைய நலக் கேட்டிற்கு நீயே மூலமாயிருந்தாலும் நீ கலங்க வேண்டாம். நீ உன் உடல் நலத்தை நிச்சயமாக பெறலாம். யோகாசனம் ஒன்று தான் மனிதனைத் திருத்தி நல்வாழ்வு பெறச் செய்யும் ஒரே வழி.

மனிதனின் இயற்கை நிலையில் சாதாரணமாக தவறுதல் ஏற்படுவது கட்டுப்பாடில்லாமை தான். ஐம்புலன்களும் இயற்கை அன்னையால் கொடுக்கப்பட்ட வரப்பிரசாதங்

கள். ஐம்புலன்களை அடக்கி அறிவு கொண்டு வாழ்ந்தால் பெருத்த நன்மையை அடைவோம். அறிவைப் பறிகொடுத்து ஐம்புலன்களுக்கும் அடிமையாகி விட்டால் அவைகளே எமச்சத்துருக்கள். நாம் நமககும் பிறருககும் நன்மை செய்ய அறிந்து கொள்ள வேண்டும். மனிதன் சாப்பிடும் ஆகார வகைகளைப் பொறுத்தே அவனது குண, சுபாவ இயல்புகள் அமைவதாக நமது பண்டை நூல்கள் கூறுகின்றன. நமது ஆகார பானங்கள் மிதமாக இருக்கத் தொகுத்து கொள்ள வேண்டும். சிரமப்பட்டு வேலை செய்ய வேண்டும். தகுந்த ஓய்வு எடுத்துக் கொள்ள வேண்டும். இரவை பகலாக்கக் கூடாது. உறங்குவதை ஒழுங்கு படுத்திக் கொள்ள வேண்டும். பிறருக்கு நன்மை செய்யும் நன்மை செய்யும் வாய்ப்புகளை எதிர்பார்த்து வந்த பொழுது அவற்றைப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும். எண்ணங்களை சீர்படுத்தி மனதை அடக்கியாள கற்றுக் கொள்ள வேண்டும். இவைகள் தான் மனிதன் இன்ப வாழ்வை பெறும் இயற்கை வழிகள். எளிய வாழ்க்கை தூய எண்ணங்களை உண்டு பண்ணும். இதற்கான திடமனதை யோகாசனங்கள் மூலம் தான் பெற முடியும்.

நாம் விஞ்ஞான அறிவு காலத்தில்வாழ்ந்தோமாயினும் இயற்கையோடு இயன்று வாழ மறுப்பதோடு இயற்கை அன்னையை அவமதித்து நடக்கிறோம். மருந்துகளும் டானிக்குகளும், ஊசி மருந்துகளும், மற்றும் மின்சாரம் மூலம் சிகிச்சைகளும் தங்களுடைய நோயை குணப்படுத்தும் என்று மக்கள் நம்புகிறார்கள் இது ஒரு ஆபத்தான தப்பபிப்ராயம் உலகத்தில் மருந்துகள் அதிகமாக சாப்பிடுவதனாலேயே பலர் துன்புற்று வருகிறார்கள். அலோபதி, ஆயுர்வேதம், யூனானி, ஹோமியோபதி அந்த வைத்திய முறையில் நோய்களை முற்றிலும் குணப்படுத்த முடியாது. வாழ்நாள் முழுவதும் நோய் வராமல் நல்லுடல் பெற்று நல்வாழ்வு பெற வேண்டுமாயின் அதற்குரிய ஒரே வழி யோகாசன முறையைப் பின்பற்றுவதேயாகும். நமது உடம்பில் பல முக்கிய குழலற்ற சதைக் கோளங்கள் (கிளாண்ட்ஸ்) உள்ளது அவைகளிலிருந்து வெளிப்படும் ஹார்மோன்கள் தான் ரத்தத்துடன் கலந்து நோய் கிருமிகளைக் கொல்லுகின்றது. இவைகள் ஒழுங்காக வேலை செய்தால் நமக்கு நோயே வருவதில்லை. இந்தசுரப்பிகள் நன்கு வேலை செய்யக் கூடிய சக்தியை கொடுக்கக் கூடியது யோகாசனமே.

பிட்யூடரி, பினியல்பாடி, இரண்டு கோளங்களும் சிரசின் பின் புறமும், தைராய்டு பாராதைராய்டு இரண்டும் கழுத்திலும், தைமாஸ் மார்பிலும் உள்ளது. அட்றேனலில் கோளம் குண்டிக் காயின் மேல் உள்ளது. ஈரல் வலப்புரம் உள்ளது. பாங்கிரியாஸ் தீனிப் பையின் கீழ் உள்ளது.

கோளங்கள் இயங்க எந்தெந்த ஆசனங்களைச் செய்வது?

| கோளங்கள் | ஆசனங்கள் |
|---|---|
| பிட்யூடரி, பினியல்படி | சிராசாசனம், சர்வாங்காசனம் |
| தைராய்டு, பாராதைராய்டு, தைமாஸ் | சர்வாங்காசனம் ஹலாசனம், மத்தியாசனம் |
| பாங்கிரியாஸ் | பாதஹஸ்த ஆசனம், ஹலாசனம், நௌலி உட்டியாணு, சிவலிங்காசனம் பச்சிமோத்தாசனம் |
| அட்ரீனல் | சக்கராசனம், கோமுகாசனம் ஹலாசனம் பச்சிமோத்தாசனம் |
| ஈரல் | சர்வாங்காசனம் ஊரத்துவ பத்மாசனம் |

நல் வாழ்வு பெற நல்லுடல் தேவை நல்லுடலைப் பெற யோகாசனங்கள் தேவை. யோகாசனங்களால் மன அமைதி உண்டாகும். ஒருவனுக்கு மன அமைதியில்லையேல் அவன் எத்தனை பெரிய அதிகாரங்களைக் கொண்டவனாக இருந்தாலும், பெரும் பணம் படைத்தோனாயினும் அறிவாளியாக இருப்பினும் அவன் வாழ்க்கை பேய் வாழ்க்கை என்று சொன்னால் அது மிகையாகாது. மன அமைதியை யோகாசனம் மூலம் எளிதில் பெறலாம்.

யோகப் பயிற்சிக்கும் தேகப் பயிற்சிக்கும் வேறுபாடு அதிகம். இரண்டையும்ஒருவர் செய்யக்கூடாது, மூளையை உபயோகித்து வேலை செய்பவர்களுக்கு யேகாசனம் சிறந்த வரப்பிரசாதம். தேகப்பயிற்சியாளர்களுக்கு நோய்கள் வரும். யோகப் பயிற்சியாளருக்கு நோய்கள் வரா. உலக பிரசித்தி பெற்றவர் சாண்டோ ராமமூர்த்தி தேகாப்பியாசத்தில் வல்லவர் ஆனல் தனது 52-வது வயதில் நீரழிவு (டயாப்டீஸ்) என்னும் நோய் கண்டு இறந்தார்.

யோகப்பியாசிகளில் சிறந்த சுவாமி சிவானந்தா, பெங்களூர் சுந்தரம், யோகி சுத்தானந்த பாரதி போன்ருேர் பல்லாண்டு நோயற்ற வாழ்வினை பெற்றவர்கள்.

யோகாசனத்தை காலை, மாலை இரு வேளையிலும் வெறும் வயிற்றில் செய்ய வேண்டும். குளித்தபின் பக்தியுடன் அவசரபடாமல் அமைதியாக கொஞ்சம் கொஞ்சமாக யோகாசனங்கள் பழகினுல் நல்ல பலன் கிட்டும். பழகிய கொஞ்ச நாளில் ஆரோக்கியமும் அதிகமாகும். சோம்பல் ஒழியும். ஞாபக சக்தி அபரிதமாகும். எத்த நோயும் நம்மை பிடிக்காது.

யோகப்பியாசிகள் காப்பி, டீ, மது, புகையிலை இவைகளை உபயோகிக்கக் கூடாது. இப்பழக்கம் உள்ளவர்கள் தாமாகவே கொஞ்ச நாளில் யோகப்பியாசம் செய்யச் செய்ய கெட்ட பழக்கங்களை விட்டிட மனேதிடம் ஏற்பட்டு விடும். அதிகக் காரம், புளி, உப்பு இவைகளை நீக்கி ஆசனப் பயிற்சி செய்வது நல்லது. இதனுல் உடல் முதுமையடையாது உடல் நன்கு வளையும் தன்மை பெறும். புகை பிடித்தல் சினிமா, காப்பி போன்றவைகளுக்கு செலவிடுவதை நிறுத்தி நெய், பால், தயிர் இவைகளை அளவோடு சேர்த்துக் கொண்டால் நல்லது, பச்சைக் காய்கறிகளுடன் ஒரு வேளை கோதுமை உணவை சேர்த்துக்கொள்ளலாம். வாரத்திற்கு ஒரு நேரமும் மாதத்திற்கு ஒரு நாளும், உபவாசம் மேற்கொண்டால் நன்மை பயக்கும். தேகப்பயிற்சியாளர்களுக்கு அதிக உணவு தேவை யோகப்பயிற்சியாளர்களுக்கு மிதமான உணவு போதுமானது.

பொதுவாக ஆசனங்களில் மணிக்கணக்காக அமர்ந்து மூளைக்கு அதிக வேலை கொடுக்கும் என். ஜி. ஒக்கள், அரசு அதிகாரிகள், வக்கீல்கள் அரசியல் வாதிகள், சினிமா நடிகர் நடிகைகள், மாணவர்கள் முதலியோர் காலை அல்லது மாலை சிறிது நேரம் யோகாசனப் பயிற்சி செய்தால் உடலில் நோய் நொடி இன்றி எப்போதும் சுறுசுறுப்பாகவும் உடல் கட்டுடனும் இருக்கலாம். இவர்கள் தங்கள் வருமானத்தின் பெரும் பகுதி டாக்டர்களுக்கும் ஊசி மறுந்து இவைகளுக்கும் செலவிடுவது கண்டிப்பாக தவிர்க்கப்படலாம்.

பம்பாய் பிலிம்இன்ஸ்டிடியூட்டில் பயிற்சி பெறும் மாணவ நடிகர் அனைவருக்கும் காலை6 மணி முதல் 7 மணி வரை கண்டிப்பாக யோகாசனங்கள் சொல்லித்தரப்படுகிறது. நமது பிரதமர் இந்திராகாந்தி அம்மையார் தானும் தனது குடும்பத்தில் அனைவரும் திரேந்திர பிரம்மச்சாரி என்னும் யோகாசன நிபுணரிடம் தினமும் யோகாசனம் பயின்று வருகிருர்கள்.

தமிழ்நாட்டில் சித்த மருத்துவ நூல்கள் அனைத்திலும் யோகாசனத்தின் வகைகள் அவைகளினுல் ஏற்படும் நன்மைகள் பற்றி சிறப்பாக சொல்லப்பட்டிருக்கிறது. யோகாசனம் மூலம் நாடி சுத்தியால், வாதபித்த, சிலேத்தும மாறுதல்களால் ஏற்படும் எந்த நோயும் குணப்படுத்தலாம். கூன், குருடு, மலடு எதனுல் ஏற்படுகிறது, அவைகளை யோகாசன பிரணயாமங்களில் எவ்வாறு நீக்கலாம் என்றெல்லாம் சித்தவைத்திய நூல்கஅ கூறுகின்றன.

இதுவரை எந்த மருத்துவ நூல்களிலும் கூறப்படாத. ஆண், பெண் குழந்தைகள் எவ்வாறு உறுப்பெறுகிறது. நாம் நினைத்த குழந்தையை யோகாசன, பிரணயாமங்கள் மூலம் பெறமுடியும் என்றெல்லாம் சித்த மருத்துவ நூல்கள் கூறுகின்றன. தமிழ் நாட்டில் உள்ள இந்திய மருத்துவ முறை கல்லூரி பாடத் திட்டத்தில் யோகாசனமும் பிரணயாமமும்சேர்க்கப்பட்டிருப்பவர்களுக்குத் தகுந்த யோகாசனப் பயிற்சியாளரை கொண்டு பயிற்சியளித்தால் நன்மை தரும்

**யோகாசனத்தின் நன்மைகள்:-**

1) நோயற்ற வாழ்விற்கு வழி கூறுகிறது 2) என்றும் இளைஞராக வாழ வழி செய்கிறது 3) உடலில் மிகுந்த பலத்தைக் கொடுக்கிறது 4) மூளைக்கு பலமும், முகக்களையும் கொடுக்கிறது 5) கொடுந்துயரை மறக்கவும், தீரவும் வழி செய்குறது. 6) வாழ்வில் வெற்றி பெற புத்தியை விசாலிக்கச் செய்கிறது. 7) அதிக படிப்பு அதிக சிந்தனை செய்ய ஊக்கம் தருகிறது 8) களைக்காது அதிக வேலை செய்வதற்கு சக்தியைத் தருகிறது 9) சோர்வையும் சோம்பலையும் ஒழிக்கிறது 10) மனதிற்கு சாந்தியைக் கொடுக்கிறது 11) இதயம் சுவாச உறுப்புகளை வீரியமாக்குகிறது 12) உடலின் இரத்த ஓட்டத்தை ஒழுங்கு செய்கிறது 13) உடலை அழகாக வனப்புரச் செய்கிறது 14) உடலின் நோய் தடுப்பு சக்தியை அதிகரிக்கிறது 15) ஞாபக சக்தியை அதிகரிக்கிறது 16 உடலின் ஊளைச்சதை பற்ருது தடுக்கிறது 17 உடலின் உறுப்புக்களை வீரியப் படுத்துகிறது 18) கோப குணத்தை சாந்த படுத்துகிறது 19) ஆண்மையை அதிகரிக்கச் செய்கிறது 20) மனதை நல் வழியில் செலுத்துகிறது 21) எப்பொழுதும் சுறுசுறுப்பாக இருக்கச் செய்கிறது 22) பிணிகள் எதையும் குணப்படுத்துகிறது 23) குடும்ப கட்டுப்பாட்டிற்கு வழி சொல்கிறது 24) உடலின் நரம்புகளை வீரியப் படுத்துகிறது 25) ஆயுளை அதிகரிக்கச் செய்கிறது.

இந்த மறுத்துவத்தில் வாத, பித்த, சிலேத்ம கூடுதல் குறைவுகளைகண்டு பிடித்தே மருந்துகள் நோய்தீர கொடுக்கப்படுகிறது.

சித்தமருத்துவ நூல்களில் சிறப்புடையதாக கூறப்படும் திருமந்திர நூலை எழுதிய திருமூலர் ஆசனங்கள், பிராணயாமங்கள் மூலம் மனிதனின் நோய்கள் எதையும் குணப்படுத்தலாம் என்பதை அடியிற்கண்ட பாட்டினுல் அறியலாம்.

அஞ்சனம் போன்றுடல்ஐஅறும் அந்தியில்
வஞ்சக வாதம் அறும் மத்தியானத்தில்
செஞ்சிறு காலையில் செய்திடில் பித்தனும்
நஞ்சறச் சொன்னேம் நரைதிரை
நாசமே.

**பொருள்:-**

மைபோன்ற உடலுக்குள்ளே இருக்கின்ற கபநோய் மாலைக் காலத்தில் செய்யப்படும் யோகாசன பயிற்சியினுல் தீரும். நடுப்பகலில் யோகாசனம் பயின்ருல் வஞ்சகமான வாத நோய் நீங்கும் அதிகாலையில் யோகாசன பயிற்சியை மேற்கொண்டால் பித்த நோய் நீங்கும். இதுமட்டும் அல்ல. யோகாசனப் பயிற்சியினுல் நரை திரையும் கூட நீங்கும்.

இந்நூலாசிரியர்களில் சிறந்தவரான திருமூலர் நாம் நினைத்த மகப்பேரை பெறுவதற்குறிய யோகசான பிராணயாமங்கள், குருடு நொண்டி இவைகள் பிறப்பதற்கானகாரணங்கள் அவற்றை யோகாசனங்கள் மூலம் எவ்வாறு தவிர்க்கலாம் என ஆராய்ந்து எழுதியுள்ளார்.

முகக்குறியை அறிந்து நோயை தெரிந்து கொள்ளும் ஆற்றலும், நாடியை சுத்தமாக பார்த்து நோயை திரமாக கண்டுபிடிக்கும் ஆற்றலும் யோகாசன பிராணயாமத்தை பயின்றவர்களுக்கு அபரிமிதமாக ஏற்படும் என கூறியுள்ளார்.

நோயுற்ற ஒருவன் பிழைப்பான், அல்லது பிழைக்க மாட்டான், அவன் எவ்வளவு நாள் இருப்பான் என்பதையெல்லாம் யோகாசன பிராணயாமம் படித்த சித்த மருத்துவர்களால் குறிப்பாக கூறமுடியும் என திருமூலர் திடமாக கூறியுள்ளார்

நமது அரசினர் இதனுலன்றே யோகாசன பிராணயாமத்தை சித்தமருத்துவ டாக்டர்களுக்கு பாடத்திட்டத்தில் சேர்த்துள்ளனர். நமது சித்தமருத்துவ மாணவர்களும் அவற்றை பயில மிக ஆர்வம் கொண்டு சிலபேர் என்னிடம் பயிற்சியையும் மேற்கொண்டுள்ளனர். அரசினரும் இதற்கென தனியாக யோகாசன நிபுணரை பகுதிநேர ஊழியராக அமர்த்தி சித்தமருத்துவ மாணவர்களுக்கு யோகாசன பிராணயாமத்தை பயிற்றுவிக்க ஏற்பாடுசெய்தால் சித்த மருத்துவம் மேலும்சிறப்புறும் என்பது திண்ணம்.

———



# குங்குமப்பூ

அறந்தாங்கி டாக்டர் சுப. சதாசிவம்.

சர்வ தேச மூலிகைகளில் குங்குமப் பூவும் ஒன்று. உலகத்தேவையின் பெரும் பங்குஸ்பெயினில் இருந்தே தற்போது கிடைக்கிறது. கிழக்கு நாட்டிலும் மேற்கு நாட்டிலும் - விரும்பி உபயோகம் ஆகும் - உணவுப் பொருளாக, மருந்தாக அது திகழ்கிறது. சர்வ தேச உபயோகமுள்ள மூலிகைகளில் குங்குமப் பூ ஒன்று. பரவலான நாடுகளில் உபயோகமாகும் குங்குமப் பூ மனித வாழ்விலும் பரவியே உபயோகம் ஆகிறது. குழந்தை மருந்தாகவும், பெண்கள் மருந்தாகவும், ஆண்மைக் குறைவில் ஆண்கள் மருந்தாகவும், பெண்கள் மருந்தாக கருப்பை கோளாறுகளிலும் இது பயன்படுகிறது; இதனுல் அனைத்து நாடுகளிலும் எல்லா வயதுக்கும், இரு பாலருக்கும் பயன்படும் மூலிகை என்ற சிறப்பையும் சேர்த்து பெறுகிறது. மேலும். மலராகவும், மருந்தாகவும் இருக்கிறது.

பொது விபரங்கள்

சீனர்கள் 2000 வருடங்களுக்கு மேலாக குங்குமப் பூவை மருந்தாகவும், ஊறுகாயாகவும் (CONDIMENTS) உபயோகித்து வருகிறுர்கள். ஆனல், இதனை பிரிட்டானியர் மூன்றும் எட்வர்டு காலத்திலேயே பிரிட்டனில் பயிரிட்டார்கள். முதன் முதலில் குங்குமப் பூ நாற்றை ஸ்தல யாத்திரை சென்றவர் தன்னுடைய ஊன்று கோலின் உட்பகுதியில் மறைத்து பிரிட்டனுக்கு அபாயத்தை பொருட்படுத்தாமல் வெளி நாட்டிலிருந்து கொண்டு வந்தார். அவர் அதனை எஸ்ஸக்ஸ் (ESSEX) நகரில் சாஃப்ரன் வால்டன் (SAFFRON WALDEN) என்ற இடத்தில் பயிர் செய்தார். அதிலிருந்து குங்குமப் பூவை இந்த இடத்தின் பெயரால் சாஃப்ரன் என்று அழைக்கிறுர்கள். ஹிந்தி உட்பட பல்வேறு வெளி நாட்டு மொழிகளிலும் இந்தப் பெயர் இடம் பெறுகிறது. இதனை நீண்ட காலம் உபயோகித்த வரலாற்றை பெற்ற சீனர்களின் மொழியில் இது உலகிற்கு அறிமுகமாகாமல் ஆங்கிலப் பெயரில் அறிமுகம் ஆவது ஆங்கிலேயர்களின் அதிர்ஷ்டமே

கிரேக்க மகாகவி ஹோமர், மருத்துவர் ஹிப்போ கிராட்டிஸ் எழுதிய நூட்களில் குங்குமப் பூ பற்றி அவர்கள் குறிப்பிடுகிறுர்கள். ரோமானியர்கள் குங்குமப் பூவை குளிக்கும் நீரில் கலந்து குளித்தார்கள்; சாராயத்தில் கரைத்து பருகினுர்கள்; மன்னர் நீரோவை ரோம் தெருக்களில் குங்குமப் பூ கலந்த நீரை தெளித்து வரவேற்றுர்கள்.

குங்குமப் பூ செடிகள் நம் நாட்டில் மலைகளில் மட்டும் நன்ருக வளர்கின்றன. காஷ்மீரில் இது பரவலாக பயிராகிறது. இச்செடிகள் புல் போன்ற இலைகளை உடையவை; குட்டையாக வளர்பவை, செடி சுமார் 5 சென்டி மீட்டர் குறுக்களவு உள்ளது. வாசனை மிகுந்த ஊதா (வயலட்) - நீல - வட்ட மலர்களை நீண்ட மெல்லிய காம்புகளின் மீது கொண்டவை. செப்டம்பர் முதல் டிசம்பர் வரையுள்ள இலையுதிர் காலத்தில் பூக்கின்றன. பூக்கும் பருவ வித்தியாசம் பிரிவுகளின் படி அமைகின்றன. கலப்பினச் சேர்க்கையால் பூவில் பல

இனிய நிறங்களை பல பிரிவுகளை, குங்குமப் பூ செடிகள் பெற்றுள்ளன.

குங்குமப் பூ செடியின் பூவிதழ்கள் மூன்று மஞ்சள் நிறத்திலும், மகரந்தங்கள் மூன்று சிகப்பு நிறத்திலும் இருக்கும். பூ விதழ் ஒரு பக்கம் பிரியாமல் ஒரே காம்புடன் மறுபக்கம் மூன்று பிரிவு பெற்று இருக்கும். இதில் ஆவியாகும் வாசனைத் தைலமும் இதற்கு நிறம் தரும் பாலிக்ரொய்ட் (POLYCHROITE) என்றழைக்கப்படும் நிறமும் உள்ளன. பூவிதழ் மட்டும் கொண்ட குங்குமப் பூ முதல் தரமானது; இதற்கு லாட்சா (LACHHA) என்று பெயர் சுமார் 60, 000 செடியிலிருந்து எடுக்கும் பூவிலிருந்து அரைக் கிலோ குங்குமப் பூ கிடைக்கிறது. இறைச்சி, இனிப்பு பண்டங்களுக்கு வண்ணம் தருவதுடன், பிரகாசம் தரும் குங்குமப் பூ உலகெங்கிலும் உள்ள வசதி படைத்த சமையற் கூடங்களில் இடம் பெறுகிறது.

பூண்டுச் செடியான குங்குமப் பூ 15 சென்டி மீட்டர் முதல் 25 சென்டி மீட்டர் வரை வளரும். தென் ஐரோப்பாவை தாயகமாகக் கொண்டது. நெல் போன்று நாற்று நாட்டு கவனமாக பயிரிடுவார்கள். புதர்களில் இயற்கையாகவும் வளரும். ஸ்பெயின், பிரான்ஸ், இத்தாலி, கிரீஸ், துருக்கி, பெர்ஸியா, இந்தியாவில் காஷ்மீர் பகுதியில் பயிரிடப்படுகிறது. பூவிதழையும் காம்பையும் அதிகாலையில் பிரித்து வெயிலிலோ, இளஞ் சூடு காட்டியோ விற்பனைக்கு பதபடுத்துகிறார்கள். மூன்று பிளவும் ஒரு காம்பும் கொண்ட பூக்கள் மட்டும் கொண்டதும், சூரிய ஒளியில் உலர்ந்ததும், குங்குமப் பூ ரகத்தில் உயர்ந்தவை. இளஞ் சூட்டிலும் பூவை பக்குவப் படுத்துகிறார்கள்.

குங்குமப் பூவை பயிரிட்டு சேகரிப்பதில் கஷ்டம் மிகுதி, இதன் தேவை மிகுதியாக இருப்பதால் இதன் விலையும் அதிகம். அதனால் கலப்படமும் மிகுதி. சீனாவில் கிடைக்கும் சாஃப்ளவர் (SAFFLOVER), காலன்டுலா பூ (CALENDULA FLORET) முதலியவற்றை குங்குமப் பூவுடன் கலப்படம் செய்யப் பயன் படுத்துகிறார்கள், தென்னாப்பிரிக்காவிலிருந்து வரும் லைபிரியா அட்ரோ பர்ப் பூரியா (LYPERIA ATRO PURP UREA) என்பதும் கலப்படமாக உபயோகமாகிறது. இது தவிர குங்குமப் பூவின் மகரந்தம் பூ விதழுடன் இணைந்து வளரும் பகுதி (CORROLLA) ஆகியவையும் குங்குமப் பூ என்று வியாபாரத்தில் விற்கப்படுகிறது. எடையை அதிகப்படுத்தவும் கலப்படம் செய்கிறார்கள்; இவை குங்குமப் பூ மடிக்கப்படும் தாளில் ஒட்டிக் கொள்வதுடன் எண்ணைப் பசையையும் காட்டும்.

இதன் சரித்திரப் பெயர் குரோகஸ் சாடிவஸ்லின் (CROCUS SATI VAS LIN). தாவரக் குடும்பம் ஐரிடேஸி (IRIDACEAS). ஆங்கிலப் பெயர் சாஃப்ரன் (SAFFRON). மலையாளத்தில் குங்கும கேசரம், தெலுங்கிலும் குங்கும கேசரா, சமஸ்கிருதத்தில் குங்கும கேஷரா, ஹிந்தியில் சாஃப்ரன்.

### அசல் குங்குமப் பூ

குங்குமப் பூவிதழ் ஒன்றை நீரில் போட்டால் அது மொதும்பி பெருக்கும். சுற்றிலும் உள்ள நீரில் ஆழமான மஞ்சள் நிறத்தை மெதுவாக பரப்பும். 50 மில்லி லிட்டர் 100 மில்லி கிராம் குங்குமப் பூ மஞ்சள் நிறம் தரும். இது கால் கிராம் கிரோமிக் அன்ஹைட்ரட் (CHOROMiC ANHYDRIDE) 50 மில்லி லிட்டர் நீரில் கரைக்கும் போது கிடைக்கும் ஆழமான மஞ்சள் நிறத்திற்கு சமமானது. குங்குமப் பூ அடிப் பகுதியிலிருந்து மூன்றாகப் பிரிந்த மேல் பகுதி வரை குழாய் உருவில் 23 மில்லி மீட்டர் நீளம் இருக்கும். தனித் தன்மையான நெடியுடன் கசப்புச் சுவையுள்ளது. வாயிலிட்டு மென்றால் மஞ்சள் நிறம் வரும்.

சிகப்பு நிறம் தரும் போலி க்ரே ராயில் (POLY CHOROILE) என்ற பொருளும் அதில் உள்ளன நிறமற்ற தூய நீரில் 100 டிகிரி சூட்டில் கொதிக்க வைத்தால் 58 சதவீதம் அசல் குங்குமப்பூ கரைந்துவிடும். குங்குமப் பூ உலர்ந்த இருண்ட சிகப்பு கலந்த ப்ரௌன் கலரில் இருக்கும். நல்ல நெடியுடன் கசப்பு சுவை பெற்றிருக்கும். புதிதாக இருக்கும்போது எண்ணைப் பிசுக்குடன் கண்ணாடி போன்ற தோற்றத்துடன் இருக்கும். நாளானால் இவைகள் குறைந்து வெடிப்பும் ஏற்படும்.

# தமிழ் இலக்கியப் பேரவை
## 1979 - 1980



மருத்துவர், க. சு. உத்தமராயன் அவர்கள் தலைமையில் பேரவையைத் துவக்கிவைக்கிறார் மருத்துவர். ஆ. ஆனந்தக்குமார்.



செயலரின் அறிக்கை



முதல்வரின் உரை



"முத்தமிழ்க் காவலரின்" முழக்கம்.



பொருளரின் பூமாலை...



ஆலோசகரின் பாமாலை

# தமிழ் இலக்கியப் பேரவை

## முப்பெரும் விழா



''நல்லுயிர், உடம்பு, செந்தமிழ் மூன்றும் நான்! நான்! நான்!'' என்கிறுர் பேராசிரியர் ப. வளன்அரசு.



விழாத் தலைவரின் (உறைவிட மருத்துவர்) பலாத் தமிழ் உரை



''பைந்தமிழ்த் தேர்ப்பாகன்'' பாரதி பற்றி பேராசிரியர் பாரூக்....



''என்றும் வெல்லும் ஈரோட்டுப் பாதை'' என்கிறுர் பேராசிரியை மாலதி அரிஇந்திரன்.



''எதையும் தாங்கும் இதயம்'' கொண்ட அண்ணுபற்றி பேராசிரியை இளம்பிறை மணிமாறன்...



மாவட்ட அளவில் நடை பெற்ற கட்டுரைப் போட்டியில் முதல் பரிசு பெறுகின்ருர் எங்கள் மாணவர் வெங்கட் ராமன்



மாலேயும்—மரியாதையும்.



மருத்துவர் இரா. இராமசாமி (எம். டி. சித்தா)
(தமிழ் இலக்கியப்பேரவைத் தலைவர்)



த. உதயமார்த்தாண்டன் மூன்றுமாண்டு
B.S.M. & S.
(அதிக விளம்பரம் சேகரித்தவர்)




கலை காட்டி, கயல்விழிகாட்டி
மயல் முதுமும் காட்டிடும் மாது......



மு. சுதந்திரராசன் (B.S.M. & S)
அதிக விளம்பரம் சேகரித்தவர்



இராசா பிரபாகரன்
இரண்டாமாண்டு பி. எஸ். எம். & எஸ்.
(எண்ணத்தை ஈர்த்திடும் வண்ண ஓவியர்)




Dr. Anantha Padmanaban
B.I-M.



N. Chandra Mohandass
Final B.I.M.



M. Mohammed Sultan
Final B.I.M.



K. Gunasekaran
Final B.I.M.



V. Pugalendhi
Final B.i.M.



M. Elangovan, B.Sc.,
II B.S.M & S



R. Nedunchezhiyan
III B. S. M & S



C. Devadas
III B. S. M& S.



ChristhuRaja,
I D. pharm.

### இராசாயனங்கள்

இதில் பல இராசாயனங்கள் கண்டு பிடித்துள்ளனர். குளுகோஸைட்கள் (GLUCOSIDES), க்ரோசின் (CRQCIN), க்ரோசிடின் (CROCETIN), பிக்ரோக்ரோசின் (PICROCROCIN) முதலியவற்றுடன் ஆவியாகும் தைலங்கள் முக்கியமானவைகளாக உள்ளன. காரொட்டின் (CAROTENE) லைகோபென்ஸ் (LYCOPENES) ஆகியவைவும் உள்ளன.

### மருத்துவ குணங்கள்

சுரம், மனக் கவலை, ஈரல் பெருக்கம், பல வித சளி அடைப்பு, குழந்தைகளின் சளி நோய், நா வறட்சி, மேக நீர், கீழ் பிடிப்பு, பைத்தியம், மண்டை வலி, கண்ணோவு, வாந்தி முதலிய நோய்களில் குணம் தரும். சர்ம நோய்களில் நன்மை தரும். பெண்கள் மாதத் தீட்டு வெளியாக உதவும். அதிகமாகப் போனால் ஒழுங்கு செய்யும். மாத விலக்கு இருண்டு உறைவதை மாற்றும். நடு வயதில் மாத விலக்கு நிற்கும் போது ஏற்படும் தலை வலியைக் குறைக்கும். யோனியில் ஏற்படும் நோய்களில் இதனை திரியாக்கி உட்புறம் வைத்து வேக்காளத்தை தணிக்கலாம். அதிக அளவு உட்கொண்டால் தூக்கம் தந்து விஷமிக்கும். வயிற்று உபாதை தணியும்; வலி நீக்கும்; அசையும் உறுப்புகளை கட்டுப்படுத்தும் குணங்கள் சிறிது உண்டு குங்குமப் பூ பற்று தலை வலி, மார்வலி, மூட்டு வலிகளில் நிவாரணம் தரும். வெளி உபயோகப் பூச்சாக சர்மத்தில் தடவினல் ஆரோக்கியக் குறைவில் நிறம் குறைவதை தடுத்து நிறுத்தும்.

---

## இவர்கள் யார்?

A. அழகப்பன்

இரண்டாம் நிலை பி.எஸ்.எம். & எஸ்.

1 மாதவி
2 வசந்தி
3 கமலா
4 சிங்காரி
5 நீலி
6 இந்திரன்
7 கேரளம்
8 மலையாளி
9 அமிர்தவல்லி
10 கிருஷ்ணவல்லி

— விடை 73-ம் பக்கம் பார்க்க.

# தமிழ் இலக்கியப் பேரவை அறிக்கை

## அரசினர் இந்தியமுறை மருத்துவக் கல்லூரி
## பாளையங்கோட்டை

''செந்தமிழே! உயிரே! நறுந்தேனே!
செயலினை மூச்சினை உனக்களித்தேனே!
நைந்தா யெனில் நைந்து போகுமென் வாழ்வு'' என்ற

பாவேந்தரின் அடிச்சுவட்டினையொட்டி

''சாம் போதும் தமிழ் படித்துச் சாக வேண்டும் என்
சாம்பலுமே தமிழ் மனந்து வேக வேண்டும்'' என்ற

தமிழ் நெஞ்சத்தின் வழியொற்றி எம் கல்லூரியின் சார்பில் ''தமிழ் இலக்கியப் பேரவை'' என்ற ஓரமைப்பை ஏற்படுத்த வேண்டும் என்ற அவா தமிழறிந்த தமிழ் உள்ளங்களைத் தூண்டியது, அத்தூண்டலுக்கு மாணவர் பேரவை துணை நின்றது. அம்முயற்சியின்பயனாக ''முகில் கிழித்து வெளிக் கிளம்பும் முழுமதி போல்'' 26-2-79ம் நாள் எம் கல்லூரியில் தமிழ் இலக்கியப் பேரவை மலர்ந்தது.

இம் மலர்ச்சிக்கு வித்தூன்றிய எங்கள் முதல்வர் வீ. சுப்பிரமணியம், எம். டி. அவர் களை புரவலராகவும், மருத்துவர் கு. பரமேசுவரன் பி. ஐ. எம்., கல்லூரி நூலகர் திரு. காசி, எம்.ஏ., பி. லிப்., ஸ்ஸி. ஆகியோரை வழி நடத்துனராகவும், மருத்துவர் இரா. இராமசாமி அவர்களைத் தலைவராகவும், திரு. மா. தங்கராசு அவர்களைச் செயலராகவும், திரு. புகழேந்தி அவர்களைத் துணைச் செயலராகவும் திரு. ஆசைத்தம்பி அவர்களைப் பொருளராக வும் மற்றும் பன்னிருவரைச் செயற்குழுவினராகவும் கொண்டு இப் பேரவை தம் பணியைத் துவக்கிற்று.

இத் தீந்தமிழ்க் குழந்தையை முதல் முதலில் கையில் அள்ளி உச்சி மோந்தவர் மருத்துவர் ஆ. ஆனந்தக்குமார் அவர்களாவார்கள். அவர் தொட்டது துலங்கிற்று. 28-6-79 அன்று நம் கல்லூரி மாணவ மாணவியருக்கு''இலக்கியங்களில் மருத்துவம்''எனும் தலைப்பில் இயற்றமிழ்ப் போட்டியொன்றும், இசைத் தமிழ்ப் போட்டியொன்றும் நடாத்தி8-7-79அன்று அருண்மொழிச் செல்வர் பேராசிரியர் பா. வளன் அரசு, எம்.ஏ. அவர்களின் சீரிய தலைமையில் ''முத்தமிழ்க் காவலர்'' அவர்களால் போட்டிகளில் வென்றோருக்குப் பரிசளித்துப் பெருமை பெற்றது. அன் றைய விழாவில் முத்தமிழ்க் காவலர் அவர்களின் உரை ''பொதிகைத் தென்றலாய், போதாகி மலர்கின்ற தமிழ் உணர்வின் புதுமணமாய் ப்திகத்துப்பொருளாய் பழந்தமிழர் புறப்பாட்டாய்'' அமைந்து தமிழன்னையின் மணிமகுடத்திற்கு மீண்டுமோர் அணி சேர்த்தது.

தொட்டது தொய்வின்றி 21-7-79 அன்று நம் கல்லூரி நூலகர் திரு. காசி எம். ஏ. அவர்களை நடுவராகக் கொண்டு மொழிப் பற்று மிக்கோங்கி மிளிர்வது பாரதியார் பாடல்களி லா? பாரதிதாசன் பாடல்களிலா?எனும் தலைப்பில் நம் கல்லூரி மாணவர் எண்மர் சொற்போர் புரிந்தனர்.

தொடர்ந்து 26-7-79 அன்று நடைபெற்ற பேரவையின் செயல்குழு கூட்டத்தில் ''முத்தமிழ்க் காவலர்''அவர்களின் கருத்திற்கேற்ப இக்கல்லூரியின் பெயரை ''தமிழ் மருத்துவக் கல்லூரி'' எனப்பெயர் மாற்றம் செய்யக் கோரி தீர்மானம் ஒன்றினை நிறைவேற்றி முதல் வருக்கு அனுப்பியது.

அடுத்து 11-9-79 அன்று நடைபெற்ற பேரவையின் செயற்குழு எடுத்த முடிவினுக் கொப்ப கவியரசு பாரதி, தந்தை பெரியார், பேரறிஞர் அண்ணு ஆகியோரின் பிறந்த நாட்களை ''முப்பெரும் விழா'' வாக நடாத்த விழைந்தோம்.

அதனை யொட்டி நெல்லை மாவட்ட அளவில் கல்லூரி மாணவ' மாணவியருக்கான கட்டுரைப் போட்டியும் சொற்பொழிவுப் போட்டியும் நடாத்தப் பெற்றன. கட்டுரைப் போட்டியின் மதிப்பீட்டாளர்களாக நுண்கலைச் செல்வர் திரு. ஆ. இராகவன் அவர்களும், அருண்மொழிச் செல்வர் திரு. பா. வளன் அரசு அவர்களும் கட்டுரைகளை ஆய்வு செய்து பரிசுக்குரிய கட்டுரையைத் தேர்ந்தெடுத்து உதவினர். சொற்பொழிவுப் போட்டியின் நடுவர்களாக அருண்மொழிச் செல்வர் திரு. பா. வளன் அரசு, பேராசிரியர் திரு. பொ. செ. பாண்டியன், பேராசிரியை திருமதி. மனோன்மணி இரவீந்திரன் ஆகியோர் பொறுப்பேற்று பரிசுக்குரியோரை தேர்ந்தெடுத்து உதவினர்.

போட்டிகளில் வென்றோருக்கு 23-9-79 அன்று நடந்த முப்பெரும் விழாவில் ''முத்தமிழ் காவலர்'' அவர்கள் பரிசு வழங்கி வாழ்த்தினர்கள்.பேராசிரியர் கா. முகம்மது பாரூக், எம். ஏ., அவர்களும்' பேராசிரியை மாலதி அரி இந்திரன் எம்.ஏ., அவர்களும்' பேராசிரியை இளம்பிறை மணிமாறன், எம். ஏ. அவர்களும் ''நின்று புலம்பும் நெட்டை மரங்கள்,'' ''என்றும் வெல்லும் ஈரோட்டுப் பாதை,'' ''எதையும் தாங்கும் இதயம்'' எனும் தலைப்புக்களில் சொல் மாரி பொழிந்தனர். 26-2-79 அன்று தொடங்கப்பட்ட இலக்கியப் பேரவைப் பணி தொடர்ந்து நடைபெற்று வருகிறது.

இவண்
மருத்துவர் கு. பரமேசுவரன்
ஆலோசகர்
தமிழ் இலக்கியப் பேரவை.

---

71 – பக்க

## விடை மூலிகைகள்

1 குருக்கத்தி
2 இருவாட்சி
3 கமேலா
4 பன்னி மோந்தான் கிழங்கு
5 அவுரி
6 மருது
7 வாய்விடங்கம்
8 மிளகு
9 சீந்தில்
10 நன்னரி

---

### நிகழ்காலம் போற்று

'' நேற்று என்பது இரத்து செய்யப்பட்ட 'செக்'
நாளை என்பது 'புரோ நோட்டு'
இன்று என்பது 'ரொக்கப் பணம்'
அதைப் புத்திசாலித்தனமாகச் செலவழியுங்கள்.'' — ஆண்டர்சன்

# எங்கள் இதய அஞ்சலி

"மனிதன் சாகலாம் ஆனல் அழியக்கூடாது."
— லாவோத்சே



மறைவு 18—2—80

## டாக்டர் பு. மு. வேணுகோபால் H. P. I. M.

முன்னாள் இந்திய மருத்துவக் கல்லூரி முதல்வர்,
முன்னாள் இயக்குனர், இந்திய மருத்துவத்துறை.

நாடிப் பொருள் சேர்க்காமல்
நலஞ் சேர்த்தாய் சித்தந்தான்
வாடிவிடா திருக்க வொரு
வழிகண்டாய் - வாழ்கின்ருய்!
வணங்குகின்ரேம்!

தோற்றம்:

16—5—1948



மறைவு:

28—8—1979

# டாக்டர் (சஞ்சீவி) எம். நாராயணன் M.D. (சித்தா)

விரிவுரையாளர், பட்டமேற்படிப்புத்துறை

அழகினிலே தாமரையாள்; அன்பில்
அதில் பெருகும் தேனுன்; தீமை
விலக்குவதில் அதிலொட்டா நீரான்
விருந்தினராய் மாணவரைப் பேணிப்
பழகுவதில் சாக்ரட்டீஸ் அறியாப்
பல நோய்க்குச் சஞ்சீவி நாரா
யணனென்பான் இளவயதில் வானேர்
பிணிதீர்க்கச் சென்றுவிட்டான் வாழ்க!

இவண்

**டாக்டர். மு. முருகேசன், பி.ஐ.எம்.**

பட்ட மேற்படிப்பு மாணவர்.

## முறை தானே?

நல்லவர் கையிலும் கெட்டவர் கையிலும்
நடமாடுகின்ற சின்னமே - நவ
நாகரீகமென்ற போர்வையிலே வந்து

# கவிதை, கதைப் பகுதி

சிலிர்க்கின்ற நிலைபோலும், கரடிபோலும்
இங்கே யோர் நாகரிகம் முளைக்கும் நாளில்
எங்கே நீ முடிவெட்டிக்கொண்டாய் நன்ருய் ?
பங்கமற்ற தலையுடைய கோழி, உன்னைப்
பார்த்தேனும் இவர் திருந்துவாரோ ? ஆனல்
இங்கிருப்போர் கோள் மூட்டிக் கோழிச் சண்டை
இடுவதிலே கை தேர்ந்த கெட்டிக்காரர்.

— கவிஞர் கருணனந்தம்,

# முறை தானோ?

நல்லவர் கையிலும் கெட்டவர் கையிலும்
நடமாடுகின்ற சின்னமே - நவ
நாகரீகமென்ற போர்வையிலே வந்து
நடமாடுகின்ற சின்னமே.

உன்னிடம் அதிக நட்பு வைத்தால் நீ
உலைவைத்திடுவாய் வைத்தவர்க்கே
உலகத்திலே பல மனிதரும் இப்படி
உள்ளதை நீயும் உணர்த்துகிறாய்

நீயாக வந்து நெருங்கிப்பழக
நினைப்பதில் சில மனிதரைப் போல்
ஓயாமல் உன்னைத் தேடிப் பிடிக்க
ஓடிவந்தால் அது உன் தவறோ?

உன்னையே நீ தியாகமும் செய்து
உதிர்ந்தே போனாலும் - நீ
நன்மைகளேதும் செய்வதில்லை - பெரும்
நாசமே செய்கின்றாய்

பழகிய பலரையும் விட முடியாமல்
பாழ்செய்கின்றாய் முறைதானோ? - படு
பாதகம் செய்யும் சிகரெட்டே நீ
பாழாய்ப் போவாயே!

ஆக்கியோன்
Dr. K. நடராசன், B. I. M.,
பாளை.

## உன்னைப் பார்த்தேனும் இவர் திருந்துவாரோ ?



சிங்கத்தின் தலைபோலும், முள்ளம் பன்றி
சிலிர்க்கின்ற நிலைபோலும், கரடிபோலும்
இங்கே யோர் நாகரிகம் முளைக்கும் நாளில்
எங்கே நீ முடிவெட்டிக்கொண்டாய் நன்றாய் ?
பங்கமற்ற தலையுடைய கோழி, உன்னைப்
பார்த்தேனும் இவர் திருந்துவாரோ ? ஆனால்
இங்கிருப்போர் கோள் மூட்டிக் கோழிச் சண்டை
இடுவதிலே கை தேர்ந்த கெட்டிக்காரர்.

— கவிஞர் கருணைநந்தம்,



# வீணையை மீட்டிட விரல்கள் தேவை

பட்டுத்துறை மா. தங்கராசு.

வாளவனூர் இயற்கையன்னை எப்போதும் எழில்நகைபுரிந்திடும் சிற்றூர். வாருங்கள் அவ்வூரைச் சற்று வலம் வரலாம். நட்சத்திரங்களுக்கு மத்தியில் தண்ணொளி சிந்திடும் முழுமதிபோல் பல இல்லங்களுக்கு மத்தியில் பளிச்சென தெரிகின்றதே ஓர் இல்லம் அது தான் அவ்வூர் பெரியமனிதர் தர்மக்கர்த்தா தாண்டவராயன் இல்லம். தேனடையைச் சுற்றி மொய்க்கும் ஈக்களென அவ்வில்லத்தைச் சுறறியென்ன ஒரேகூட்டம்! வாருங்கள் சற்று அருகில் சென்று பார்ப்போம். தங்கப் பதுமை நிகர் பெண்ணொருத்தி அலங்கோல நிலையில் ஆவேசத்தை அள்ளி வீசிய வண்ணம் இருக்கிருள், பெரிய மனிதரொருவர் பிதற்றிய வண்ணம் உள்ளார், துன்பச் சக்தியில் உழலும் மற்ருெரு பெண், நினைத்து நிறைவேருத ஏக்கத்தாலும், மற்றவர்களின் தூற்றுதலுக்கும் ஆளாகித்தவிக்கும் இளைஞன் ஒருவன் இவர்களைச் சுற்றியொரு கூட்டம், அனைவர் முகத்திலும் வாட்டம், அப்படியென்ன போராட்டம், நாம் ஏன் சிந்தனை தேரோட்டம் நடத்த வேண்டும். நடந்த நிகழ்ச்சிகளை செந்தமிழில் விளக்கிக் கொண்டிருக்கிருர் அவ்வூரில் சீரிய பணியாற்றும் சித்தமருத்துவர் செந்தூரன் நாமும் கேட்டிடுவோம்.

கண்ணுக்கும், கருத்துக்கும் களிப்பளித்திடும் வண்ணம் வானுயர வளர்ந்தோங்கி நின்றது அவ்வறிவாலயம். அது ஒரு மகளிர் கல்லூரி. கல்லூரி முடிந்து மாலையில் சிறகடித்துப் பறந்திடும் புணிப்புருக் கூட்டமென மாணவியர் சென்றிடுவர். தங்களைப் பற்றி இம்மாணவியர் மொழியும் இழிமொழி சில காளையருக்கு யாழொலி. இக்கொஞ்சு மொழி வஞ்சியரின் திட்டு மொழியை இலட்டாகச் சுவைத்திட காளையர் கும்பலொன்று இக்காரிகையர் சென்றிடும் சாலை யோரங்களில் காத்துக்கிடந்திடும். பெண்களைப் பற்றிப் பேசி மகிழ்வதே இவர்களின் அன்ருட உழைப்பு. அவர்கள் தரும் சுடு சொற்களே இவர்களின் உழைப்புக்குக் கூலி. கிண்டல் புராணம் பொழியும் கொண்டல்களான இக்காளையர் கும்பலையும் விஞ்சிடுவர் சில வஞ்சியர் "அங்கே பாருடி அமுதா! அந்த குரங்குதின மும்பல்லைக் காட்டிக் கொண்டே இருக்கிறது" இது அமுதாவின் கோபக் கனல் "பெண்களென்ருல் இதுகளின் கண்களுக்கு எப்படிதான் இருந்திடுமோ. நான்கு கால் ஜீவன்கள் மாதிரி சுற்றிக் கொண்டெ இருக்கின்றனர்!" இது அமுதாவின் ஆவேசம் இப்படிபல பஞ்சாச்சர அர்ச்சனைகள் அக்காளையர்கும்பலுக்கு, ஏண்டி இருவரும் கற்பின் கனலிகள் மாதிரிநடிக்கின்றீர்கள். உங்களைப்பற்றி.....' இது உண்மை நிலையுணர்ந்த அவர்களின் தோழி சுந்தரியின் சாடல். இவர்களைத் தரிசிக்க வந்தவர்களோ "அங்கே பாருடா ஆனந்த்! அந்தச் சுட்டுவிழிச் சுந்தரி எனனைப்பார்த்து எழிலாகச் சிரிக்கின்ருள்" இது பரந்தாமனின் பெருமை மொழி "இல்லை, இல்லை அவள் என்னைத் தான் பார்த்து பரவசத்தாள் நகைத்தாள்" இது ஆனந்தனின் உரிமைப் பிரச்சனை இப்படி பல பல நவீன அகநானூறுகள் தினம் நடந்திடும்.

இதற்குவிதிவிலக்கான ஒரு கூட்டமும் இருக்கத்தான் செய்தது. அதில் சற்று வளர்ந்த ஒரு பெண் பெயர் அறிவரசி பொருத்தமான பெயர். "முழுமதி முகத்தில், கிள்ளையின் அழகு நிறம்படைத்த இதழ் பெற்று, முல்லையின் மொக்குகளை அணிசெய்து உமைந்திட்ட பல் வரிசை பெற்று, தங்கப்பதுமை யொன்று மான் விழியால் நோக்கி, யாழொகி எழுப்பி, அன்ன நடை நடந்திட்டால் போன்று அறிவரசி செல்கின்ருள்" என்று அவளின் நிலைக்குத் தோழியர் வாழ்த்துப்பா

இசைப்பர். அவர்களின் வாழ்த்துப் பாவுக்கு பிறை நிலாப் புன்னகை ஒன்றைப் பொன்ன கைப் பரிசாகத் தந்திடுவாள். அறிவரசி முது கலை இரண்டா மாண்டில் வரலாறு பயின்று வந்தாள் அவளின் ஊர் வளவனூர்.

வளவனூரில் பத்துப்பேர் துண்டை இடையில் கட்டி, கூனிக் குறுகிய வண்ணம் நிற்க, அவர்களை அதட்டிய வண்ணம், பட் டுத்துண்டு தோளில் புரள, மீசையைத் தடவி யவாறுக ஏவலர் புடை அமர்ந்திருப்பார் ஒரு வர். அந்தக் காட்சியைப் பார்த்தாலே புரியும் வளவனூர் போன்ற கிராமப் பகுதி களுக்கு மனிதனை மனிதன் மதித்திடும் சன நாயக ஒளி இன்னும் கிட்ட வில்லை என்று. குலம், கோத்திரம் பற்றிப்பேசிக் கொண்டி ருப்பதில் அந்த பெரிய மனிதருக்கு தணியாத மோகம். அவர்தான் அவ்வூர் தனவான் பெயர் தர்மக்கர்த்தா தாண்டவராயர். பெ யரின் முற்பகுதிக்கும் இவருக்கும் தொடர் பேதும் இல்லை ஆணவமும், அதிகாரச் செருக் கும் அவரின் அணிகலன்கள். தாண்டவராய ரின் இளைய மகள் தான் அறிவரசி. கரிகட்டி களில் இருந்துதான் வைரக்கட்டிகள் கிடைக் கின்றன. அறிவரசியும் அப்படித்தான். தாண் டவராயரின் மூத்தமகள் அபிராமி. வளவனூ ருக்கு அருகில் உள்ள நல்லூர்ப்பண்ணையார் சொக்கலிங்கத்தின் ஒரே மகன் சுந்திரனுக்கு அபிராமி மங்கை நல்லாள் இல்லாள் ஆனாள் சுந்தரனுக்கு கல்வியறிவு குறைவு, ஏனைய வளங்கள் ஏராளம் இல்லத் தேர் இனிதே ஓடிக் கொண்டிருந்தது. மழலைகள் இல்லாக் குறைதான் அவ்வில்லில் பெருங் குறையாய் உருவெடுத்து நின்றது.

ஆண்டுகள் இரண்டு கடந்தன. அறிவரசி பல்கலைக் கழகத்தேர்வில் முதல் வகுப்பில் தேறி விட்டு இல்லத்திருந்தாள். அவளை வேலைக்கு அனுப்பிடப் பெற்றோர்மனம் இசை யவில்லை. அறிவரசி, கல்லூரித் தோழிகளுடன இருந்த இன்ப நினைவுகளையும் கல்லூரியில் நடந்த இங்கித நினைவுகளையும், நினைத்து நெஞ்சு நெகிழ்ந்த வண்ண மிருந்தாள். கல் லூரிச் சுழலில் வாழ விரும்பி வேலைக்கு விண் ணப்பித்தாள். பெற்றோரும் வேண்டாவிருப் பாக ஒருப்பட்டனர். இதற்கிடையில் கரும்புத் துண்டை நாடிவரும் எறும்புக் கூட்ட மென அறிவரசியை அடைந்திட பலபேர் பெண் பார்க்க வந்தனர். வேலையேதும் கிடைக்கும் வரை மணமாலை சூடப்போவதில்லை யென அறிவரசி மறுத்துவிட்டாள்.

தங்கையை காண தமக்கை வந்தாள். தன்னூரில் உள்ள மலைக்கோவிலுக்குச் சென் றிட அறிவரசியை அழைத்தாள். இருவரும் புறப்பட்டனர். மக்கள் கூட்டம் அதிகம் இல் லாத மலைக்கோவில் அது. செல்கின்ற வழியில் அழகிய கோழிக்குஞ்சொன்றை பருந்தொன் று அடித்துச் சென்றது. அதைப்பார்த்த அறி வரசி, "பாவம் அந்த அழகிய அப்பாவிக் கோ ழிக் குஞ்சைப் பாழும் பருந்தொன்று அடித் துச் செல்கின்றதே" எனறாள் அதைக் கேட்ட அபிராமிக்கு என்னவோ போலாகிவிட்டது. உடம்பெல்லாம் வியர்க்க ஒருவாறு சமாளித்துக் கொண்டு பதிலேதும் கூறாமல் சென்றாள். மலை மீது மாதவன் முன சென்று பக்திச் சுவைச் சொட்டச் சொட்டப்பாடி வணங்கிக் கொண்டிருந்தாள் அறிவரசி. அந்தோ! மறுகணம் அவளின் எதிர் கால வாழ்வுப்பூஞ்சோலை கொடும் பாலையாகிடும் நிகழ்ச்சியொன்று நடைபெற்றது. ஆம்! இரண்டு கரங்கள் அவளை இருகப் பற்றியது. மற்றிரண்டு கரங்கள் அவள் சங்கு வண்ணக் கழுத்தில் மங்கலநாணைக் கட்டியது அவள் கத்தினாள், கதறினாள், புலம்பினாள் பயன் இல்லை. அவயத்தனையும் கொக்கின் அலகில் அகப்பட்ட கெண்டையின் துள்ளலாகவே முடிந்தது. அவளை இருகப் பற்றிய கரங்கள் அவளின் அக்கா அபிராமியுடையது. தாலி கட்டியது அபிராமியின் கணவன் சுந்தரன். நடப்பது கனவா? நனவா? என்று புரியாமல் பித்தம் பிடித்த நிலை பெற்று மயங்கிச் சாய்ந் தாள் அறிவரசி

அபிராமியும், சுந்தரனும் திட்டம்போட் டுச்செய்த கெட்ட வேலைதான் இது. தம் செல்வத்துக்கு வாரிசு இல்லாது வருந்திய சுந்தரன், மறு மணம் செய்து கொள்ளப் போ வதாகக் கூறினான். அபிராமியும் அவன் எண் ணத்தை ஏற்றுக் கொண்டாள். சுந்தரன் "அறிவரசியைத் தான் மறு மணம் செய்ய வேண்டும் அதற்கு நீதான் ஒத்துழைக்க

வேண்டும்'' என்ருன் ஆனுல் அபிராமி அறிவரசியின் கல்வி, எழில் இவற்றை எண்ணி இந்தக் கருத்தை மறுத்தாள். சுந்தரனே தன் கருத்துக்கு ஒத்துழைக்காவிடில் தன்னைத்தானே அழித்துக்கொள்வதாக மிரட்டினன். தன் மஞ்சள், குங்குமத்தை இழக்கவிரும்பாத அபிராமி அவன் ஆசையை நிறைவேற்றும் கருவியாளுள். சுந்தரன் எனும் கொடுமன வேடன், அபிராமி எனும் வலேயில் அறிவரசி எனிம் மாடப்புருவைப் பிடித்து விட்டான்.

நடந்ததை கேட்டவுடன் அறிவரசியின் அன்னை உயிர் துறந்தாள் தாண்டவராயரும் மற்றவர்களும் நெஞ்சு பதைத்தனர். சுந்தரன் கட்டிய தாலியை அறுத்து எறிந்து விட்டு அவளுக்கு வாழ் வளிக்கப்பலர் முன்வந்தனர். குலம், கோத்திரம் பேசும் தாண்டவரயர் '' நம் இனத்தில் ஒரு பெண்ணுக்கும் ஒரு முறை தான் தாலிகட்ட வேண்டும். தாலியை அறுத்ததும் அவள் விதவையாகிவிடுகிருள் விதவைக்கு மறுமணம் செய்வது கனவிலும் நடக்கக் கூடாது'' எனகர்ச்சனை புரிந்தார். அப்போது அஞ்சல் காரர் கொடுத்த கடிதம் ஒன்றைப் பிரித்துப் பார்த்தனர்: அறிவரசியை மகளிர் கல்லூரி ஒன்றில் விரிவுரையாளர் பணிக்குப் பணிக்கும் அரசின் ஆணை அதில் இருந்தது '' என் மகள் பிணத்திற்கு ஒப்பானவளாகி விட்டாள் இனிமேல் இதெல்லாம் எதற்கு'' என்று கதரியவாறு அக்கடிதத்தைக் குதறி யெறிந்தார் '' சாது மிரண்டல் காடு கொள்ளாது'' என்பதற்கு ஏற்ப அறிவரசி முற்றிலும் மாறி விட்டாள். சுந்தரனைக் கண்டாலே சீரிப்பாயும் வேங்கையாளுள். சுந்தரன் மனக் கோட்டையும் சுக்கு நூருனது. அபிராயும் நடந்ததை எண்ணி அணு, அணுவாகச் செத்துக் கொண்டிருந்தாள். அறிவரசியின் வாழ்வு மணமில்லாத மலரானது '' அங்கமதில் மங்கையர்க்கு அழகிருந்தால் அறிவில்லை. ஆராய்ந்து முடிவு செய்யும் அறிவிருந்தால் அழகில்லை. அழகும், அறிவும் சேர்ந்தப்பெண்கள் அதிசயமாய்ப் பிறந்தாலும் குறுகும் மனம் கொண்டவர்கள் குலேக்காமல் விடுவதில்லே'' என்ற பட்டுக் கோட்டையாரின் பாடலுக்கு இலக்கண மாகி விட்டது அறிவரசியின் வாழ்வு. அவளின் வாழ்வில் மீண்டும் வசந்தம் வீசவேண்டுமானல், தாண்டவராயரின் கவைக்குதவாத வாதங்களைத் தவிடு பொடியாக்கி விட்டு, அறிவரசியை தன் இல்லத்தரசியாக ஏற்றிடும் துணிவும், தகுதியும், பண்பும்மிக்க இளைஞன் ஒருவன் தேவை.

''இனிய தோர் வீணை செய்து - அதனை
நலங்கெடப் புழுதியில் வீசுவதுண்டோ?''

என்ருன் பாரதி. இங்கே ஒரு வீணை புழுதியில் கிடக்கின்றது. ஆம்! வீணையை மீட்ட விரல்கள் தேவை'' என்ன அப்படியே சிலேயாகி விட்டீர்கள். நடந்தவைகளைச் சித்தமருத்துவர் செந்தூரான் விளக்கிவிட்டார். இயற்கையன்னையின் எழில் நிலேகான வளவலூர் வந்த நாம் சுந்தரனின் இழிநிலேயையும் கேட்டோம். இயற்கைக் காட்சி காணவந்த நாம் உண்மைக் கதை யொன்றும் கேட்டோம்.

கண்ட இயற்கைக் காட்சியால் களிப்புறுவோம்! கேட்டிட்ட கதையால் கருத்துப் பெருவோம்!

---

## உன்னை நீயே பேசாதே

''ஒரு மனிதன் தன்னிடம் இருப்பதாகச் சொல்லும் குறைபாடுகள் எல்லாம் நம்பப்படுகின்றன. தன்னை மெச்சிக் கூறிக் கொள்ளும் புகழ் மொழிகள் ஒன்று கூட நம்பப்படுவதில்லே. மொத்தத்தில் தன்னைப் பற்றிப் பேசிக்கொள்ளும் போதெல்லாம் அவன் நட்டமே அடைகிருன்''

— மான்டேன்.



# சோகம் ஒரு ராகம்

**Dr. De. G. DAS**, M.A., B.I.M

என் நண்பனின் பாதையை நான் திரும்பிப்பார்க்கிறேன். அவன் கடந்து வந்த பாதை தான் எத்தனை கரடு முரடானவை, எத்தனை இன்னல்கள், இடுக்கண்கள், இத்தனையும் தாண்டி வந்த அவன் முன் விடி வெள்ளி என்னும் நம்பிக்கை நட்சத்திரம் உதயமாகியது. அவன் வெறிச்சோடிய வாழ்வுக்கு விடிவு காண விழைந்த நாட்கள் பல. அதில் இன்று அவனுக்கு ஒரு விடிவு காலமாக ஆகிவிட்டது. ஆனால் அது இருண்ட காலமாக முடியும் என்று அவனுக்கே புரியாதிருந்தது காதலினால் ஏற்பட்ட தடுமாற்றமே ஆகும் காதலில் பல ரகம். அதில் இவன் ஒரு ரகம் கல்லூரி காதல் கல்யாணத்தில் முடியும் என்பது கானல் நீர் போன்றது. எனினும் இவன் காதல்,காதல் என்று சொல்வதைவிட இவன் அவள் பால் கொண்ட அன்பு வரையறுக்க முடியாதது,ஈடு கொடுக்க முடியாதது அந்த அன்புப்பிணைப்பில் அகம்மகிழ்ந்த நாட்கள் பல. இவன் அவளை இவன் அங்கமெல்லாம் அவள் தான்என்று நினைத்தான். ஆனால் அவள் இவனை அங்கங்களில் ஒன்றாகக் கருதினாலோ என்னவோ, அது கேள்விக் குறிதான் அந்தக்கேள்விக்குறிக்கு விடைகாணவிழைந்த நாட்கள் பல. ஆனால் அதற்கு காலம் தான் பதில் சொல்ல வேண்டும். இது ஒரு தலைக் காதலா என்றால் அல்ல அவளும் அவனை நேசித்தாள். ஆனால் அவளைவிட அவன் அவளை அதிகம் நேசித்தான். அவளை மாணிக்கமே, மரகதமே என்று நவ மணிகளையும் வைத்து வர்ணித்த நாட்கள் உண்டு. ஆனால் இன்று அவைகளில் ஒன்றைக்கூட உச்சரிக்க முடியாத ஊமையாக, ஆதரவற்றவனாக அலைகின்றான்.

அந்த கண்மணியின்வருகைக்காக காந்திருந்த நாட்கள் பலஆம். அவள் வகுப்பறைக்கு செல்லும் நடை,உடை, பாவனை அனைத்துமே அலாதி. அதைக் கண்டு களிக்க காத்திருந்தான் கண்ணன். பெயர் கண்ணன் என்றாலும் லீலைகள் தெரியாத புரியாத கலியுககண்ணன். அவள் விழி வீச்சு அவனைத்தாக்கும். மீன்விழி மான்விழி, வேல்விழி, என்று புலவர்கள் வர்ணிப்பதைக் கேட்டுள்ளான். அவள் அவ்விழிகள் மூன்றும் ஒருங்கே பெற்றதைப் போன்று கண்ணின் அமைப்பு மீன் போன்றும் கருணையில் பார்க்கும் போது மான் விழி என்றும், அடுத்தவரை தாக்குவதால் வேல் விழி போன்றும் தோன்றியது. அவள் நடையைப் பார்க்கும் போது, "இட்ட அடி நோவ எடுத்தஅடி கொப்பளிக்க" என்ற அம்பிகாபதியின் அடிகள் அவன் மூளையில் மோதுகின்றது. இப்படி அவள் இடை, உடை இவற்றை வர்ணித்த நாட்கள் பல,

காலங்கள் கடந்தன. அவளிடம் பேச வேண்டும் என்றுஎண்ணும் போது மனசாட்சி பேசவிடாமல் தடுத்து விடுகின்றது. பேச வேண்டும் என்று முனைந்த நாட்கள் ஒன்று, இரண்டா எண்ணிலடங்கா நாட்கள்ஒருநாள் அவள்தன் தோழிகளுடன் கூடியிருக்க அவர்

களிடையே கண்ணன் ஒரு கதை சொன்னன். அந்த பெண் மானின் வாழ்வுக்காக பலியான ஆண்மானின் கதைதான் அது. இது அவளு டைய வாழ்க்கைக்காக அவன் வாழ்க்கை யஷ பலியாக்கியது போன்று தோன்றியது.

கதை கதையாக இருந்ததே தவிர வேறு எந்த வித மாற்றமும் காணுததால் கண்ணன் கலங்கிவிட்டான். ஆம் அவன் காலங் கால மாக எந்தப் பெண்ணுக்காக காத்திருந்தா னே அவள் பார்வை இன்னொருவன் பக்கம் திரும்பியது அவளேயே நினைத்த கண்ணன் கண்ணை இழந்தவனைப் போல் ஆகிவிட்டான். அவன் வாழ்வில் தோன்றிய அந்த விடி வெள்ளி மீண்டும் அஸ்தமித்து விட்டது. அவன் பழைய நிலைக்கே வந்து விட்டான். தோல்வி அவன் பிடித்திருக்கும் குத்தகை சோலைக் குயில்கள் பாடும். ஆனல் அந்த சோகக்குயில் . . . . தன்முகாரி ராகத்தைப் பாடியது.

''நீ உனக்காக உன் விருப்பம் போல் வாழலாம். ஆனல் உன் நினைவால் உன் நிழலில் வாழ நினைத்த நான் உன் நிழலின்றி வாடுகிறேன். காதலித்தேன் கைவிட அல்ல காப்பாற்ற. நீ புரிந்து கொண்ட கருத்து எனக்கு புரியாத கருத்து. நினைத்தேன் மணக் கலாம் என்று. ஆனல் நினைக்கிறேன் மறக் கலாம் என்று. வாழ்ந்தேன் உனக்காக. வாழ் கிறேன் எனக்காக வாழ்வேன் இலட்சியத்திற் காக. காதல் என்ற சொல் கண்ணிழந்த குருடர்கள் யானையை தடவியது போன்று தோன்றுகிறது எனக்கு. நீ வாழலாம், நான் வாழ்த்தலாம். ஆனல் என்னை வாழ்த்த மறு பிறவியில் நீ தான் வர வேண்டும். இள வேனிற் காலத்து தென்றல் வீசாதா என்று பார்க்கிறேன், நீயோ முதுவேனிற் காலத்து அனலாக மாறுகின்ருய். துள்ளிவரும் தெள் ளலைகள் என்று நினைத்தால் நீ பாறையில் மோதும் பேயலையாய் மாறிவிட்டாய் நீ மாறி யதின் காரணம் எனக்கு தெரியாது ஆனல் மாற்றப்பட்டாய் என்பதுஎன்கருத்து. அன்று ஒரு முறை திரும்பு என்ருல் பல முறை திரும்பிப்பார்ப்பாய்,இன்று ஒரு முறையாவது திரும்பக் கூடாதா என்ற ஏக்கம் என் நெஞ் சை அள்ளுகின்றது. கவிஞர் சொன்னதை உனக்குச் சொல்கிறேன், ''உன் பாதை நீ கண்டு நீ போகலாம், இனி என் பாதை நான் கண்டு நான் வாழலாம்.'' ஆம் நாம் இனி பிரிந்து தான் ஆக வேண்டும். உன அன்பில் சில மாற்றம். ஆனல் உன் குணத்தில் இல்லை. என் மேல் உள்ள அன்பு உன் மனத்தில் என்றும் உண்டு. ஆனல் சூழ்நிலை உன்னை மாற்றி இருக்க வேண்டும். அன்று நாம்மனத் தால் உல்லாசப் பறவைகள். இன்று நாம் உள்ளத்தால் திசை மாறிய பறவைகள்.

இனியும் நாம் சேர்ந்து வாழ்பது என்பது உடைந்த கண்ணடியை ஒட்டவைப்பது போன்றது. இன்பமும் துன்பமும் இருகை களில் ஏந்தி எடை போடுகிறேன். துன்பத்தின் எடை அதிகமாகி இன்பத்தை அதன் எல்லையிலிருந்து துரத்துகிறது. அன்று நாம் சிரித்து வாழ்ந்தோம். இன்று நாம் சிந்தித்து வாழ்கிருேம் இனி ஒருவரை ஒருவர் நினைத்துதான் வாழ வேண்டும். கல்லூரி வாழ்க்கையின் கடைசி அத்தியாயம் இது. இனி நாம் இயற்கையாகவே பிரிந்து தான் ஆக வேண்டும். எந்த மரத்தில் ஏறினனோ அவன்ஏறிய வழிதான் இறங்கியாகவேண்டும் அது போன்று கல்லூரி என்ற மரத்தில் ஏறி வருடங்கள் என்ற கிளையில் தாவி பின் கல்லூரி என்ற அதே மரத்தில் நம் அன்பை முடித்துக் கொண்டோம்.

வாழ வேண்டும் என்று நினைக்கிறேன், வாழ்கிறேன் இதுஉனக்காகஅல்ல. எனக்காக, எனக்காக என்று இல்லாவிட்டாலும் என் பெற்ருேருக்காக, என் உடன் பிறப்புக்காக நான் வாழ்ந்துதான் ஆகவேண்டும். இனியும் உன் மனம் மாறலாம், அது என்பக்கம் திரும் பலாம். ஆம் அது என்பக்கம் திரும்புகின்றது. நான் இப்போது மறுபக்கம் திரும்புகின்றேன். நீ ஏன் என்று கேட்கலாம் அது என் கண்ணி யத்திற்காக. நீ அந்த நாள் என்று சொன்னல் என் பதில் அது இறந்த நாள் என்று உங்கள் 'அன்பு' என்று கேட்டால் கரும்பை அடியில் இருந்து சுவைத்தது இது என்பது ஏன் இந்த மாற்றம் என்று கேட்டால் மாற்றி விட்டது நீதான் என்பேன். இப்போது நான் மனம் மாறி விட்டேன் என்ருல் அது பெண்களுக்கு உரிய குணத்தைக் காட்டுகின்றது என்று

சொல்வேன். உன் உணர்ச்சிகள் உன் கேள்விகள் அதற்கு என் பதிலை தந்து விட்டேன். ஆனால் என் கேள்விக்கு ஒரு பதிலும் கிடைக்கவில்லை. கரைக்கு வந்த அலை கடலுக்கே திரும்பும். என் உள்ளத்தில் வந்த அலை. அதுவும் அப்படித்தான். என் பழைய நினைவு அலை போன்று ஆகிவிட்டது. சக்கரம் சுழல்கின்றது. என் நினைவுச்சக்கரமும் அப்படித்தான் கட்டுப்பாடு என்ற புதியபடிகளில் ஏறுகிறேன். ஆனால் கடந்த காலம் நினைவு என்ற பழைய படிகலில் இறங்க ஆரம்பித்து விட்டேன். புத்தரை நினைக்கிறேன் ஆனால் விசுவாமித்திரர் வருகின்றார். இதில் நீயென்ன விதிவிலக்கா என்று கேட்பது போல் தோன்றியது, சொந்தங்கள் தொடர்கதை என் சோகங்கள், அதுவும் தொடர்கதைதான்.

அந்திப் பொழுது அஸ்தமித்து விட்டது என் வாழ்க்கைப் பொழுதும் அதுபோன்றே. நான் தோல்விஎன்ற என்சரித்திரத்தை எழுத ஆரம்பித்து விட்டேன். அதில் வெற்றி என்ற அத்தியாயத்திற்கு இடமேயில்லை. எண்ணங்கள், ஏமாற்றங்கள் இது நீ எனக்களித்த பொக்கிஷம். இனி உன்னை நான் சந்திப்பது முறையற்றது என் சோகம் என்னோடு தொடரட்டும்" நீலாம்பரி ராகத்தை பாட நினைத்த கண்ணன் முகாரி ராகத்தை, ஆம் அந்த சோகராகத்தைஉச்சரித்த வண்ணம்இருண்ட பாதையை நோக்கி நடக்க ஆரம்பித்தான்.

அவன் காதுகளில்,

''எங்கே நிம்மதி! எங்கே நிம்மதி!!
அங்கே எனக்கோர் இடம் வேண்டும்
எங்கே மனிதர் யாரும் இல்லையோ
அங்கே எனக்கோர் இடம் வேண்டும்"

என்ற அடிகள் எங்கோ ஒலித்தன. இந்த சோகராகம் அவன் கேட்கும் இனிய ராகம்.

---

# ஊமைப் பனித் துளி

C. நாகலட்சுமி [முதல் ஆண்டு]

1. ஏனிந்த மௌனம் இன்று
எனக்குரைப்பாய் நீ.
வானத்துப் பெண் உதிர்க்கும்
வாடிக்கை கண்ணீரோ நீ!

2, ஒரு துளிப் பனிநீரே நீ
உன்னுள் இருக்கும் தூய்மை
எங்களில் யாருக்கும்
இருப்பதில்லை ஏன்?

3. இந்த உலகமும் புரியவில்லை
எங்கும் உண்மையும் தெரியவில்லை
வெந்து போன எங்களுக்காக
வெம்பி அழுகிறாயோ நீ?

4, பகலில் எங்கள் பூமியை
பார்க்கச் சகிக்காமல் தான்
இரவில் தோன்றி பகலில்
மறைகின்றாயா நீ!

5. இவ்வுலகை நான் மறக்க
எனக்குரைப்பாய் உம் தொழிலை
ஏன் மறைக்கிறாய்? ஓ ஆதவன்
வருகையா, சரி, வருகிறேன் நாளை காலை.

# ஸார், ஐ ஆம் கண்டெக்டிங் :.பார்.........

டாக்டர் S S. ஹரிராமன், B.D.S.
அசிஸ்டென்ட் டென்டல் சர்ஜன்,
அரசு மருத்துவ மனை, சங்கரன்கோயில்.



[வாழ்க்கையின் வசந்த காலமாகிய மாணவப் பருவத்தில், கல்லூரி வாழ்வில் ஒவ்வொரு வருடமும் வழக்கமாக நடக்கும் ஒரு நிகழ்ச்சி, அதைப் பற்றிய சில இனிமையான நினைவுகள், கற்பனைகள் .. ]

மாலை நேரம். பாம்பு போல் நீண்டு கிடக்கும் மௌண்ட் ரோடு. அதில் எறும்பாக ஊர்ந்து செல்லும் பல்லவன். வெளியே டிராஃபிக் ஜாம்; உள்ளே மனித உடல்களின் ஜாம் கண்டக்டர் அன்பு போல் புகுந்து வெளி வந்து கொண்டிருந்தார்.

''ஹலோ சார்'' என்ற குரல் கேட்டு திரும்பினேன். அந்த முகத்தை எங்கோ பார்த்திருக்கிறேனே ஓ! இவர் நம் கல்லூரி மாணவர் தான். எனக்கு ஸீனியர். ஆனல் இதற்கு முன் இவருடன் பேசியதில்லை.

மறுபடியும் ஒரு ஹலோ போட்டு என் கையைப் பிடித்துக் கொண்டார், ஏன்திடீர் என்று இவர் என்னுடன் ஒட்டுகிருர் என்று புரியவில்லை. இதற்கு முன் ஹாஸ்டல் மெஸ்ஸில் என் எதிரேயே உட்கார்ந்து உணவு அருந்தும் போதும் என்னைக் கண்டுகொண்டதே இல்லை. இருந்தாலும் நானும் 'ஹலோ' என்றேன்.

அதற்குள் கண்டக்டர் அருகே வந்து விட்டார். நான் பர்ஸை எடுப்பதற்குள் என் புது நண்பர் எனக்கு சேர்த்து டிக்கட் எடுத்து விட்டார். நான் தாங்க்ஸ் கூறினேன்.

தேவியில் இறங்கினோம். ஏதோ ஓர் ஆங்கிலப் படம் எனக்கும் அவரே டிக்கட் எடுக்க முற்பட்டார் நான் பலவந்தமாக மறுத்து விட்டேன்.

படம் ஓடியது எல்லோரும் சிரித்தபோது நாங்களும் சேர்ந்து சிரித்தோம். சத்தியமாக எனக்கு ஒன்றும் புரியவில்லை. ஆனல் அதை வெளியே காட்டிக் கொள்ளலாமா? அவர் நிலை எப்படியோ ...

இடையில் ட்ரிங்க், சிகரெட் எல்லாம் நான் எவ்வளவோ தடுத்தும் அவரே செலவழித்தார். படம் முடிந்தது.

''வெரி நைஸ் பிக்சர்,'' என்றேன், தலையை லேசாக தடவிக் கொண்டு — தலைவலி மண்டையைப் பிளந்தது.

''ரியலி இட் வாஸ் வெரி குட்,'' என்று பதில் வந்தது. திரும்பிப்பார்த்தேன். நெற்றிப் பொட்டைத் தடவி விட்டுக் கொண்டிருந்தார் அவர்!

பஸ்ஸில் தொற்றிக் கொண்டு ஹாஸ்டல் வந்து சேர்ந்தோம். அதற்குள் அவர் எனக்கு ஒரு நல்ல நண்பராகி விட்டார். குட்நைட் கூறிக் கொண்டு அவரவர் அறைகளுக்குப் பிரிந்தோம்.

மறு நாள் மாலை ஏழுமணி என் அறைக் கதவு லேசாக தட்டப்பட்டது. ''கம் இன்' என்று குரல் கொடுத்தேன்.

ஒரு ஆறேழு நபர்கள் கதவை மிகவும் மரியாதையாக, சத்தம் போடாமல் திறந்து கொண்டு, பூனை போல ஒரு அடி உள்ளே வந்தார்கள்.

அனைவரும் நம் கல்லூரி மாணவர்கள் தான். எல்லோருமே 30 டிகிரி கோணத்தில் முன்னல் வளைந்து பணிவாக மிக மிக அப்பாவிகளாக நின்று கொண்டிருந்தார்கள்.

அவர்களிலிருந்து ஒருவர் வெளியே வந்தார். அட! இவர் என் சினிமா நண்பரல்லவா!

என் அருகே வந்த அவர், 45 டிகிரி கோணத்தில் வளைந்து நின்று கொண்டு,

''சார், ஐ ஆம் கன்டெஸ்டிங் ஃபார் தி எடிட்டர்ஸ் போஸ்ட், தயவு செய்து ஞாபகம் வைத்துக் கொள்ளுங்கள் சார். ஐ நீட் யுவர் கைன்ட் ..'' என்று கூறுக் கொண்டே போனுர் (ஏகப்பட்ட சார்கள்)

ஓ ஹோ! இதுதான் விஷயமா? எனக்கு எல்லாம் அப்பொழு தான் தெளிவாயிற்று.

அதற்குப் பிறகும் கண்ட இடத்திலெல்லாம் எனக்கு 'விஷ்' பண்ண ஆரம்பித்தார். சில முறை அவர் மட்டும் தனியாக ரூமுக்கு வந்து அரைமணி நேரம் வரை அறுத்தார்.

அவருடைய ஆப்பொனன்ட்ஸ் யாரையும் எனக்கு அவ்வளவாகத் தெரியாது. எனவே இவருக்கே என் வாக்கை அளித்தேன். அதிர்ஷ்டவசமாக அவரும் வெற்றி பெற்ருர்.

எனக்கு ஒரே மகிழ்ச்சி. [இந்த முறை என் கதை ஒன்று கல்லூரி மலரில் வெளி வருமல்லவா — இவர் மூலம் .. ]. என் அறைக்கு வந்து நன்றி தெரிவித்து விட்டுச் சென்ருர்.

மாதங்கள் உருண்டோடின. கல்லூரி மலருக்கு மாணவர்களின் படைப்புகள் தேவை என்ற அறிவிப்பைப் படித்ததுமே என் மனம் கற்பனைக் குதிரை மீது ஏறி மணிக்கு 100 கி.மீ. வேகத்தில் டாப் கியரில் பறந்தது:

''யுவர் ஆர்டிகில் – தட் ஸ்டோரி ஸ் மார்வலஸ்'' பாராட்டுவது வேறு யாருமல்ல; என் கிளாஸ்மேட் மாலா தான். எனக்கு பெருமை பிடிபடவில்லை. குதிரையில் அவளையும் ஏற்றிக் கொள்கிறேன்.

அடுத்து என்னைத் தேடிக் கொண்டு 'தினமணி கதிர்' ஆசிரியர் வருகிருர். ''சார், உங்கள் கல்லூரி மலரில் வெளி வந்திருக்கிறதே, உங்கள் கதை அபாரம் ஸார்! அவை எங்கள் பத்திரிகையில் வெளியிட தயவு செய்து நாங்கள் அனுமதியளிக்க வேண்டும் '' என்று குழைகிருர்.

உடனடியாக எடிட்டர் அறைக்கு விரைந்தேன். ரூம் பூட்டியிருந்தது. என் அறைக்கு வந்து அமர்ந்து மூளையைக் கசக்கிக் கொண்டேன். எந்தக் கதையைக் கற்பனை செய்தாலும் கடைசியில் நினைவு வருகிறது அதை வேறு ஏதோ ஒரு பத்திரிகையில் படித்திருக்கிருேம் என்று! என்ன செய்வது?

எப்படியோ ஒரு மாதமாக மகாகஷ்டப்பட்டு ஒரு கதையை எழுதி முடித்தேன். எடிட்டரைப் பார்த்தேன்.

''கதை ரொம்ப நீளமாக இருக்கிறதே... கொஞ்சம் சுருக்கினுல் நல்லது,'' என்ருர்.

மறுபடியும் மூளையைக் கசக்கிக் கொண்டேன் என் கதையில். எந்தப் பகுதியை வெட்டுவது? ஏதாவது ஒரு பகுதியை வெட்ட, அது மிகவும் நல்ல பகுதியாக அமைந்து, அதன் மூலம் 'தினமணி கதிர்' ஆசிரியர் என்னைத் தேடி வருவது தடைப்பட்டு விட்டால் ... ஐயோ! இதெல்லாம் அந்த எடிட்டருக்கு எங்கே தெரிகிறது?

ஆனுலும் வேறு வழியின்றி, வெட்டி சுருக்கி, கதையைக் குட்டிச் சுவராக்கினேன். எடிட்டர் கையில் அதைகொடுக்கும்பொழுது கதை குற்றுயிருடன் முனகிக் கொண்டிருப்பது போல ஒரு பிரமை!

அதற்குப் பிறகு எடிட்டரைக் கண்ட பொழுதெல்லாம் நான் அவருக்கு 'விஷ்' பண்ண வேண்டியதாயிற்று! பின்னே வாழ்க்கையில் முன்னேறுவது என்ருல் என்ன சும்மாவா?

மாதங்கள் பல பறந்தன. இதோ வருகிறது, அதோ வருகிறது, வந்துகொண்டே இருக்கிறது என்று போக்குக் காட்டினுர்களே தவிர மலர் என்னவோ குறிப்பிட்டநாளில் வரவில்லை. கடைசியாக எல்லோருமே அதைப்பற்றி மறந்தே போய்விட்ட நிலையில் திடீர் என ஒருநாள் கல்லூரி மலர் வந்தே விட்டது.

மலரைக் கையில் பெற்றுக் கொண்ட பொழுது என் மனம் படபடத்தது. கைகள் ஆவலினுல் நடுங்கின மனக்கண் முன்னே மாலாவும், லீலாவும் (ஷீலாவும் இன்னும் பல 'லா' க்களும் முண்டியடித்துக் கொண்டு தோன்றினர் - என்னைப் பாராட்ட! அவர்களோடு அதோ, அந்தப் பிரபல பத்திரிகை ஆசிரியரும் வந்து கொண்டிருக்கிருர் .

ஹையோ! என்ன இது! என் கதையைக் காணுமே... எவனெவனே என்னென்னமோ எழுதி இருக்கிருன்கள். என் ஒருவனுடைய கதை மட்டும் காணவே காணுமே .

மலரை மறுபடியும் ஒரு முறை நன்ருகப் புரட்டி பக்கம் பக்கமாக ஆராய்ந்தேன் — விளம்பரப் பகுதிகளையும் விடாமல்! ஊஹூம். என கதை வெளியாகவேயில்லை.

அநியாயம், அக்கிரமம். என்ன உலகம் இது ஓர் அருமையான சந்தர்ப்பத்தைக் கெடுத்து விட்டார்களே.

இனி கல்லூரி மலரில் நம் ஆர்டிகில் வெளியாக ஒரே வழிதான் உண்டு. ஆம், தீர்மானித்து விட்டேன்; அதையும் பார்த்து விடலாம். அதாவது நானே எடிட்டராகத் தீர்மானித்து விட்டேன்.

எடிட்டர் ஆவது என்ருல் என்ன லேசா? இதோ, இப்போதே கான்வாஸிங் ஆரம்பித்து விட்டேன்;

''ஸார் ஐ ஆம் கன்டெஸ்டிங் ஃபார் தி எடிட்டர்ஸ் போஸ்ட். தயவு செய்து ஞாபகம் வைத்துக் கொள்ளுங்கள் ஸார் நீட்டியுவர் கைன்ட்...

## இயற்கை யென்னும் காதலி

கோல மயில் ஆடலிலே குதித்தாடும் எந்தனுள்ளம்
சோலை வளர் இசையினிலே சொக்கி விட்ட தென்ன வென்ருல்
ஆடுவதும், பாடுவதும் அவளியற்கை — அன்பாலே
ஊடுவதும் தேடுவதும் என்னியற்கையதனுலே

மாண்பு மிகு மலை அழகில் மங்கையவள் பசுமை கண்டேன்
மகிழ்ந்தாடும் பூங்கொத்து மங்கையவள் முகம் போலே
மாலை வெயில் வானமதில் விளைக்கின்ற செம்மை
மங்கையவள் நாணத்தின் முகச்சாயல் உண்மை

காதலியின் கன்னத்தை மாமரத்தின் கனி காட்டும்
கோதமிலா மொழியினைக் கொம்புத்தேன் காட்டும்
கன்னி உன்னைக் காதலிக்கும் கவிஞர் பல கோடி
கண்டு விட்டார் கவிதைகளை நின் கண்ணசைவைப் பாடி.

மங்கை உந்தன் சிரிப்பதனை மல்லிகை மலரென்பேன்
மாருத இளமைதனைப் பரிதியின் ஒளி என்பென்
செந்நெல்லின் தலைகுனிவே செல்வி உன் பண்பென்பேன்
தென்னையின் தலை நிமிர்வே தேவி உன் துணி வென்பேன்

காதலனின் புகழ் மொழியைக் கேட்டு விட்டுத்தானே
காரிகையே நீ பாய்ந்து ஓடுகிருய் தென்றலென
அருவியெனப் பெருகி அலைகடலினுள்ளே சென்ருலும்
அடங்காது என்னுசை உனக்கென்றே வாழும்.

மோ. மல்லிகா பி. எஸ்சி.
முதலாண்டு பி. எஸ். எம். எஸ்



நிதியமைச்சருடன் எமது கல்லூரியினர்.



கல்லூரி கபடிக் குழுவினர்

# மருந்து செய் நிலையம்



நன்ருகச் செய்யுங்கள்



லேகியமும், சூரணமும் பிறப்பது இங்கே.



மருந்து வழங்குமிடம்

இவர்கள் என்ன செய்கிருர்கள் ?



கல்லூரி முதல்வர், உறைவிட மருத்துவர், தலைமை மருத்துவர், ஆகியோருடன் மருந்தாளுநர் பயிற்சி பெறும் மாணவர்கள்.

★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★

# படைத்தவனோடு பகிர்ந்து கொள்கிறேன்

**E. JAMES KUMAR** II B.S.M. & S.

★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★

என்னைப் படைத்தவனே!
சாதிமதங்களை எல்லாம் கடந்து நிற்பவனே!
உன்னை வணங்குகிறேன்.
உன்னுடன் பேசுவதற்கு அனுமதி வேண்டும்.

என்னுடைய இத்தனையாண்டு கால உலக பந்தத்தில், வாழ்க்கை அனுபவத்தில் நான் உணர்ந்தவற்றை, நான் அனுபவித்தவற்றை, நான் புரிந்து கொண்டவற்றை, நான் உன்னுடன் பகிர்ந்து கொள்ள விரும்புகிறேன்.

நீ கேட்டால் தான் நிம்மதி,
நீ கேட்கிறாய் என்பது என் நம்பிக்கை

இறைவனே என்னுடைய குழந்தைப் பருவம் நினைவிற்கு வருகிறது. எதைப் பற்றிய சிந்தனையும் இல்லாமல், எவ்விதக் கவலையும் இல்லாமல்; நல்லவை தீயவை எதுவுமே தெரியாத பருவம், அந்தக் குழந்தைத் தனமான நாட்கள் நினைவை நிறைக்கின்றன. ஒன்றுமே தெரிந்து கொள்ள முடியாத அந்த பிஞ்சுப் பருவத்தில் என்னென்ன நினைத்தேன் தெரியுமா?

நான் எப்பொழுது பெரியவனாகி, என் தந்தையைப் போல், என் அண்ணனைப் போல் வளருவேன் என்று அந்த பிஞ்சுமனதில் பல மனக்கோட்டைகளை எழுப்பி, அந்தக்கோட்டை எப்பொழுது உண்மைக் கோட்டையாக மாறும் என்று தவித்துக் கொண்டிருந்தேன். எந்த வாழ்க்கைக்காகக் குழந்தையாக இருந்த பொழுது ஏங்கினேனோ அந்த வாழ்க்கை என்னை வரவேற்றது. ஆனால் அதன் சுவைகளையும், ஏற்ற இறக்கங்களையும் புரிந்து கொண்டதும் மீண்டும் குழந்தையாக மாட்டேனா என்று ஏங்கத் தொடங்கி விட்டேன்.

ஆனால் இப்போது என் ஏக்கம் தீர்ந்து விட்டது. என்னுள் தெளிவு பிறந்து விட்டது காரணம் நான் உன்னை புரிந்து கொண்டேன் எப்போதுமே குழந்தையாக எப்படி இருக்க முடியும் என்ற இரகசியம் என் மனதில் நிலைத்து விட்டது. எதையுமே களங்கமற்ற உள்ளத்துடன் அணுகினால் அங்கே குழந்தைத் தன்மை மலரும் என்ற பேருண்மை விளங்கியது.

இந்த எண்ணம் மனதில் எழுந்து விட்டால் பிறகு கவலையே இல்லை நம்முடைய உடல் அழியும் வரை குழந்தை எண்ணம், குழந்தைக் குரிய செயல்கள். உடல்வளர்ந்தாலும் உள்ளம் குழந்தை தான். இதைப் புரிந்து கொள்ள இத்தனை ஆண்டுகள் வேண்டியிருந்தன. இப்போதாவது புரிந்து கொள்ள முடிந்ததே என்று நிறைவடைகிறேன். இதை விளங்கிக் கொள்ள வைத்ததற்காக உனக்கு நன்றி.

எல்லாவற்றையும் படைத்தவனே, எங்கும் நிறைந்தவனே! உன்னை வணங்குகின்றேன் படைக்கும் பொழுது என்னை மானிடனாக படைக்க வேண்டும் என்று நினைத்ததற்காக நன்றி. உன்னுடைய ஒவ்வொரு காரியத்தின் பின்னும் ஒரு காரணம் இருக்கிறது. காரணம் இன்றி உன் செயல் எதுவுமே நிகழ்வதில்லை. உன்னுடைய செயல்கள் ஒவ்வொன்றின் காரணத்தையும் புரிந்து கொண்டு விட்டால் வாழ்க்கை எளிமையாகிறது. என்னை எந்த நோக்கத்திற்காக படைத்தாய் என்பது தெரியாது. ஆனால் நான் செய்ய வேண்டியதை அவ்வப்பொழுது பல சூழ்நிலைகளின் மூலம் அதை எனக்கு விளக்குகின்றாய். ஒவ்வொரு மனிதனையும் நீ ஏதோ காரியத்திற்காகத் தான் படைக்கின்றாய், ஆனால் தங்களுடைய வாழ்க்கைப் பயணத்தில் இன்னல்களை சந்தித்து, இன்பம் வரும் நேரங்களில் இந்த வாழ்க்கையை அனுபவிக்காமலே நம்மை விட்டு பிரிந்து செல்கின்றார்கள். பலருக்கு அந்த பயணத்தில் பயணம் இனிமையாகிறது ஆனால் அந்த இனிமையிலும் துன்பம்

உண்டே அப்பொழுது அவன் படும் பாடு -- அப்பப்பா --- போதும் நானே அதற்கு சான்று. நினைத்தாலே நெஞ்சம் கலங்குகிறது நெடிய போராட்டத்திற்குப் பிறகு தான் நான் வாழ்க்கையை புரிந்து கொண்டேன்.

என்னுடைய இத்தனை ஆண்டு கால வாழ்க்கையில் கடந்த காலங்களை சற்று திரும்பிபார்க்கும் பொழுது வாழ்க்கையில் நான் சந்தித்த இன்பங்களையும், துன்பங்களையும் நினைக்கும் பொழுது இவ்வளவையும் சுமந்து இத்தனை நாட்களை கடந்து விட்டேனே என்று பெருமைப் படுகின்றேன். வாழ்க்கை என்பது இடியும், மின்னலையும் போன்றது என்பதை எனக்கு உணர்த்திவிட்டாய். நான்பல மனிதர்களோடு பழகினேன், பழகிக் கொண்டு இருக்கிறேன். சிலர் இப்படிதான் வாழ வேண்டும் என்று வாழுகிறார்கள், சிலர் எப்படியும் வாழலாம் என்று வாழுகின்றார்கள். சிலர் தங்களுடைய அன்பை எப்படி வெளிப்படுத்துவது என்று திகைக்கிறார்கள், சிலர் உள்ளொன்று வைத்து புறம் ஒன்று பேசுகின்றார்கள். நான் இந்த உலகத்தை நன்கு புரிந்து கொண்டேன்.

என்னுடைய இந்த இளமை வாழ்க்கையில் நான் சாதிக்க வேண்டிய சாதனைகள் எவ்வளவு என்பதை உணர்கிறேன். உலகத்தில் பிறந்த ஒவ்வொருவனும் ஒரு நேருவாகவோ, காந்தியாகவோ அல்லது அண்ணாவாகவோ இருக்க வேண்டும் என்று நினைக்கிறேன். இவர்களைப்போல வாழவேண்டும் என்று நீண்ட நாட்களாக ஆசை. வாழ்க்கை என்பது நம்மிடம் நம்பிக்கையோடு கொடுக்கப் பட்ட புனித உடமை என்றும் அதை வீணடிக்காமல் நல்லவழியில் பயன் படுத்த வேண்டும் என்று உணர் கிறேன். என்னுடைய குழந்தைப் பருவம் எனக்கு பச்சை மரத்தில் பதித்த ஆணி போன்று என் உள்ளத்தில் பசுமையாக நினைவிற்கு வருகின்றது. நான் பள்ளியில் படித்த நாட்கள், ஓடி ஆடி விளையாடிய இடங்கள், உண்ண உணவும், உடுக்க உடையும், உறங்க உறைவிடமும் போதும் என்று எண்ணிய நாட்கள். ஓ --- எவ்வளவு இனிமையான நாட்கள் இவைகள் எல்லாவற்றையும் கடந்து, நன்மை தீமைகளை பகுத்தறியத்தக்க மனத்தையும் கொடுத்து வாழ்க்கையில் இடியையும் மின்னலையும் தாங்கக் கூடிய சக்தியை கொடுத்ததற்கும் உனக்கு நன்றி!

நான் உன்னை புரிந்து கொண்டேன். உன்னுடைய படைப்பின் நோக்கத்தையும் புரிந்து கொண்டேன். மனிதனுக்கு கஷ்டங்கள் நேரிடும் பொழுது கடவுளை தூஷிக்கின்றானா அல்லது மேலும் நெருங்கி உம்மைப் பற்றிக் கொள்ளுகிறானா என்பதற்காகத்தான் கஷ்டங்கள் மனிதனுக்கு நேரிடுகின்றது என்று நான் நினைக்கிறேன். நீ இன்றி என்னால் எதுவும் செய்யமுடியாது. நான் எல்லோரிடமும் குழந்தைத் தனமாக பழக, குழந்தைக்குரிய எண்ணம், குழந்தைக்குரிய உள்ளம் இவைகளை தரும்படி வேண்டுகின்றேன். என்னுடைய வாழ்க்கையை குயவனிடம் உள்ளே களிமண்ணைப் போல உன்னுடைய சமூகத்தில் வைக்கின்றேன். இது வரையில் என்னுடைய வேண்டுகோளுக் கிணங்க உம்முடைய செவியை எனக்கு சாய்த்ததற்காக உமக்கு நன்றி!

——— 0 ———

## தென்றலே நீ வாழி!

மெல்ல மெல்ல நடை நடந்து
மென்பச்சை துகிலுடுத்தி
சில்லென்று உடல் தழுவி
கொல்லென்று சிரித்திட்டாய்
கொள்ளையழகின் கொடியே ;
குன்றில் தவழும் சேயே !
குறையா நிலவின் குளிரே !
குற்றாலத் தென்றலே நீ வாழி !

— P. ரவி III, B.S.M. & S.

# காணிக்கை



பாவையுன் முகத்தில் கோவைதன் இதழில்
சாவையும் எதிர்த்துத் தேன் கொள்வேன்;
சேவையெனி லுன் சேல்விழி கண்டபின்
செகத்தினில் விரைந்தே முடித்திடுவேன்!
பூவையுன் னுடலில் புரண்டிடும் கூந்தலில்
புதுப் பூக்களையேத்தினங் கொய்திடுவேன்;
பேதையுன் பார்வையில் பேசிடு மொழிகளை
பிதற்றியே நாளும் வாழ்கின்றேன்!

மலரில் மணமும் ஒன்று — நாம்
மகிழ்வோம் அதுபோ லின்று!
கடலும் அலையுங் கண்டு — நாம்
கலந்திடுவோம் கரைதனிலின்று!
பலரில் சிலரில் யாரேனும்
பிரித்திட முடியுமோ பகை கொண்டு
உடலில் ஒருயிராய் நின்று
உலவிடுவோம் உறவினைக் கண்டு!

நா. ச. சக்ரதார், .B I .M.
பயிற்சி மருத்துவர்.

---



# மூன்றெழுத்து

சி. பாலு,
மூன்ருமாண்டு B. S. M & S.

பாரினைப் பொருளைப் படைத்தல் செய்யும்
பாங்குடைப் ''பிரமா'' மூன்றெழுத்து
படைத்தலைக் காக்கும் பண்பிணி லுள்ள
பகலவன் ''விஷ்னு'' மூன்றெழுத்து
பிடர்த்தலை முடியுடன் பெற்றதை யழிக்கும்
பெரும் பெயர் ''சிவன்'' எனு மூன்றெழுத்து
மனிதனில் வலமும் மறுபுறம் இடமும்
மகிழ்ந்திடு ''சிவம்'', ''சக்தி'' மூன்றெழுத்து!

''விந்து'', ''நாதம்'' விளக்கிட விளங்கும்
'உயிர்' முதலாவதும் மூன்றெழுத்து — பின்
''அறிவு'', ''பணிவு'' அன்பென விரிவதும்
''ஆசான்'', ''கல்வி'' யும் மூன்றெழுத்து
கல்வியிற் சிறந்த ''நெல்லை'' யினின்று
பெறும் பட்டமாம் ''சித்தா'' மூன்றெழுத்து
காயினை நீக்கிக் கனியென இனிக்கும் - கல்லூரி
''மலர்'' எனப் போற்றுவோம் மூன்றெழுத்து!

# "தோழி உள்ளம்"



ந. ஆசைத்தம்பி B. A.

தமிழ் இலக்கியங்கள் ஒரு பூம் பொழில். அங்கே அனுபவக்கிள்ளை பேசிடும், கருத்துக் குயில்கள் பாடிடும், எழில் காட்டும் மயில்கள் ஆடிடும், அன்புப் பொய்கையில் அறிவுத் தாமரைகள் மலர்ந்து நின்றிடும், தமிழ்த் தென்றல் தழுவிடும் 'புரட்சிப் புலி' அடக்க அறைக்குள் இருந்தபடி சீறிடும், உவமை நயப்பசுமை எங்கு நோக்கினும் கண்ணுக்கும், கருத்துக்கும் கவின் விருந்தளித்திடும் என்றிடில் அது மிகையாகாது.

பூம் பொழிலுக்குள் செல்கிற உணர்வோடு இலக்கிய புத்தகங்களுக்கு மத்தியில் எனது எண்ணத்தை ஓட விடுகின்றேன். கன்னல் சுவையினையும் வென்றிடும் கருத்துப் பெட்டகமாம் குறுந்தொகை என் கண்ணில் படுகிறது. முகில் கண்ட மயிலான என் உள்ளம் புத்தகத்தைப் புரட்டுகிறது. அங்கே தோழியின் நிலைபற்றி சுந்தரத்தமிழில் சொன்ன செந்தமிழ்ப் புலவன் பாடல் ஒன்று என் உள்ளத்தை தொட்டிழுக்கிறது. நான் உணர்ந்த நற்கருத்தை நீங்களும் இன்புற இங்கு தருகிறேன்.

காதல் இலக்கியங்களில் கயல்விழி காட்டி மயல்மொழி பேசிடும் மங்கையராம் தலைவியரைப் பற்றியும், களிற்றினை அடக்கி காதலைப் பெற்றிடும் காதல் தலைவர்களைப் பற்றியும் நவில்தொறும் நயம்பயத்திடும் வண்ணம் படித்திருக்கிறோம். இவர்களுக்கு மத்தியிலே, அவர்களின் கனவு நனவாகி, எண்ணங்கள் ஈடேறி, காதல் வாழ்வு மணவாழ்வாக மலர்ந்திட துணைநிற்கும் தியாக தீபங்களாம் தோழியரைப் பற்றியும் படித்திருக்கின்றோம். ஆனால் யான் கண்ட குறுந்தொகைப் பாடல், தோழியர்களைப்பற்றி வந்த பாடல்களுக்கெல்லாம் மணிமுடியாக இலங்குவதாக உணர்கின்றேன். தோழமை எவ்வளவு தூய்மையானது, எந்த அளவு கடலினும் விரிந்தது, வானினும் பரந்தது, மலையினும் உயர்ந்தது என்பதனை குறுந்தொகை 324-வது பாடலில் கவைமகன் எனும் புலவர் பெருமகன் விளக்கியுள்ளார்.

கனிமொழி பேசி, பனி ஒளி வீசி, காதல் மொழி பேசிடும் ஏந்திழை ஒருத்தி, காதலிக்கோ இது நிலாமுற்றம், கொடும் பகைவர்க்கோ இது சமர்க்களம் என்று கூறாமல் கூறிடும் நெடுமார்பு பெற்ற குமரனொருவன் இவர்களிடையே காலையரும்பி பகலெல்லாம் போதாகி மாலை மலரும் பூவாம் காதல் மலர்கிறது. காதலியின் நிறைமதி முகத்தில் தன்னொளி பெற்றிட தடைகள் பல தாண்டி தினம் தினம் இரவு நேரத்தில் வந்திடுவான் குமரன். அவன் வரும் வழியோ பூஞ்சோலையல்ல, பொல்லாங்கு செய்திடும் முதலைகள் வாழும் கடற்கரையின் கரியகுழிகள். தினம் தினம் தேவியை தரிசிக்கும் தெவுட்டாத இன்பத்தில் மூழ்கிவிட்ட குமரனுக்கு தான்வரும் வழியில் காத்திருக்கும் கொடுமைபற்றி நினைத்துப் பார்க்க நேரமில்லை. அவன் நெஞ்சம் ஈர்த்தாளோ இரவில் குமரனைக் கண்டால்தான் மதிகண்ட அல்லியாவாள். அவளாலும் அவன் வரும் வழியின் தீங்கினை தெரிந்திட இயலாத நிலை. இப்படியிருக்க இதனை நினைத்துப் பார்க்கிறது அவளின் 'தோழி உள்ளம்' இரவில் முதலைகள் வாழும் கொடுங்குழி கடந்து வரும் தலைவனுக்கு ஏற்படும் துன்பத்தை தடுக்க எண்ணுகிறாள். அவன் வராமல் நின்றாலோ தலைவி வருந்தும் வருத்தத்தையும் தோழியாள் தாங்கிட இயலவில்லை. இவ்வாறு இருநிலையில் வருந்தும் தோழி இத்தொல்லைக்கு தீர்வொன்று காண தலைவியை திருமணம் செய்து கொள்ளுமாறு தலைவனிடம் வேண்டி நிற்கின்றாள். தலைவனுக்கு ஏற்படுகிற இன்னலையும், தலைவனை வராது தடுத்தால் தலைவிக்கு வருகிற வேதனையையும் நினைத்து நெஞ்சு நெகிழ்ந்திடும் தோழியின் மனநிலையை காட்ட வந்த புலவன் நஞ்சுண்ட இரட்டை குழந்தைகளைப் பார்த்து வருந்தும் தாய்போல் வருந்தினாள் என்கின்றான். இதோ அப்பாடல்

''கொடுங்கால் முதலைக் கோள்வல் ஏற்றை
வழிவழக்கு அறுக்கும் கானலம் பெருந்துறை
இனமீன் இருங்கழி நீந்தி நீ நின்
நயனுடை மையின் வருதி; இவள் தன்
மடனுடை மையின் உயங்கும்; யான் அது
கவைமக நஞ்சு உண்டா அங்கு
அஞ்சுவல் பெருமைஎன் நெஞ்சத் தானே.''

